# குன்றக்குடி ஆதீனத் தமிழ்ப் பணி

காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

திருமதி. **இரா. சற்குணம்**

(பதிவு எண் : **A5 / Ph.D. / 578 / 99**)

நெறியாளர்

முனைவர். **மு. பாண்டி** எம்.ஏ., எம்.ஏ., எம்ஃபில், பிஎச்.டி.,

தமிழ்த்துறைத் தலைவர்

அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி - 3.




தமிழ்த்துறை

**அழகப்பா பல்கலைக் கழகம்**

காரைக்குடி - 630 003

நவம்பர் - 2005

முனைவர் மு. பாண்டி, எம்.ஏ.,(தமிழ்) எம்.ஏ.,(இதழியல்) எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

நாள்: 30.11.05

# நெறியாளர் சான்றிதழ்

"குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத் தமிழ்ப்பணி" என்ற தலைப்பில் திருமதி இரெ.சற்குணம் செய்துள்ள இந்த ஆய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இவ்வாய்வின் மீது வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

(முனைவர்.மு. பாண்டி)
நெறியாளர்

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 0

திருமதி இரெ. சற்குணம், எம்.ஏ., எம்.எட்.,
தலைமை ஆசிரியை,
வீரமாமுனிவர் நடுநிலைப் பள்ளி,
ஒச்சந்தட்டு,
சிவகங்கை மாவட்டம்.

நாள்: 30.11.2005

# ஆய்வாளர் உறுதிமொழி

**"குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத் தமிழ்ப்பணி"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பெற்ற இந்த ஆய்வு என் சொந்த முயற்சியில் உருவானதேயாகும். இதற்குமுன் எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இந்த ஆய்வேட்டினை நான் அளிக்கவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

(இரெ. சற்குணம்)
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்

முனைவர் மு. பாண்டி, எம்.ஏ.,(தமிழ்) எம்.ஏ.,(இதழியல்) எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத்தலைவர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

**"குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத் தமிழ்ப்பணி"** என்னும் தலைப்பில் இந்த ஆய்வினை மேற்கொள்ள எனக்கு அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர் அவர்களுக்கும், பதிவாளர் அவர்களுக்கும், தமிழ்த்துறைத்தலைவர் அவர்களுக்கும் என் உளம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வாளராக என்னை ஏற்று இந்த ஆய்வு செம்மையாக நிகழ்ந்தேற எனக்கு இன்முகத்துடனும், கனிவான சொற்களுடனும் நன்னெறி காட்டிப் பல வகையினும் உதவிகள் புரிந்த வணக்கத்திற்குரிய நெறியாளர் தமிழ்த்துறைத்தலைவர் **முனைவர் மு.பாண்டி** அவர்களுக்கு நான் என்றென்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுத் தலைப்பையும், வழிமுறைகளையும், ஆய்வுச் சிந்தனையையும் வழங்கிய மதிப்பிற்குரிய பேராசிரியர் ***தெ.சொக்கலிங்கம்*** அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்வுப் பணிக்கு நல்லாசி வழங்கி, அணுகிய போது ஆதரவு நல்கி, ஆர்வப்படுத்திய **குன்றக்குடி தவத்திரு பொன்னம்பல அடிகளார்** அவர்களின் பாதம் பணிந்து வணங்கி நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

குன்றக்குடி ஆதீனம் சென்ற போதெல்லாம் இன்முகத்துடன் உபசரித்து ஆய்வுக்குத் தேவையான ஏடுகளையும், கருத்துக்களையும், என்னுள் தமிழ் ஆர்வத்தினையும் ஏற்படுத்தி, உற்சாகப்படுத்திய **ஆதீனப் புலவர் மரு.பரமகுரு** அவர்களுக்கு என்றென்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வு மேற்கொள்ளத் தூண்டி, நெறிப்படுத்திய வணக்கத்திற்குரிய தந்தை **முனைவர் சைமன்.செபஸ்தியான்** அவர்களுக்கும், ஆய்வுப் பணிக்குப் பல வழிகளில் துணையிருந்த காரைக்குடி மத்திய மின்வேதியியல் ஆய்வகத்தில் தொழில்நுட்ப அதிகாரியாகப் பணிபுரியும் **திரு.ந.கருணாநிதி** அவர்களுக்கும் நன்றியுடையேன்.

ஆய்வில் சோர்வு ஏற்படும்போது சோர்வு நீக்கி, ஆய்வு நிறைவேறப் பல்லாற்றானும் துணை புரிந்த என் **வாழ்க்கைத் துணைவர் ஆ.இளமதியன்** அவர்களுக்கும், என் குழந்தைச் செல்வங்களான **மகள் சுஜிதா பிரியதர்சினிக்கும், மகன் மதிபாலனுக்கும்** என் அன்பான நன்றிகள் பற்பல.

என்னை வளர்த்து, படிக்க வைத்துப்பெருமைப்படுத்திய அன்பிற்கும், வணக்கத்திற்குரிய என் பெற்றோர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டைச் செம்மையாகவும், நேர்த்தியாகவும் கணினியில் அச்சாக்கம் செய்த **காரைக்குடி நிதிஷ்பிரபா கம்ப்யூட்டர்ஸ்** நிறுவனத்தாருக்கும், கட்டமைப்புச் செய்து கொடுத்த இரவி அச்சகத்தாருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**இரெ. சற்குணம்**

# பொருளடக்கம்

# முன்னுரை

திருக்கயிலாயப் பரம்பரையில் வந்த சுத்த சைவ ஆதீனங்கள் பதினெட்டு. இவ்ஆதீனங்களில் ஒன்று 'குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம்'. இவ்வாதீனம் திருவண்ணாமலையில் தோன்றி, பிரான்மலையிலிருந்து பின் குன்றக்குடிக்கு மாறியது. தமிழுக்கும், சமுதாயத்திற்கும் தொண்டாற்றும் இவ்ஆதீனத்தின் தமிழ்ப் பணியை விளக்கும் வண்ணம் இவ்வாய்வு அமைகிறது.

## ஆய்வுத் தலைப்பு

இத்திருமடம் சைவப் பணியும், தமிழ்ப் பணியும், மக்கள் தொண்டும் போற்றும் வகையில் சிறப்பாகச் செய்து வருகின்றது. தமிழுக்காற்றிய பணிகளைக் காணும் நிலையில் "குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத் தமிழ்ப்பணி" ஆய்வுத் தலைப்பாகத் தேர்வு செய்யப்பட்டுள்ளது.

## ஆய்வு எல்லை

திருப்புத்தூர், திருக்கோளக்குடி, பிரான்மலை, குன்றக்குடி, சதுர்வேதிமங்கலம் முதலிய ஐந்து கோயில்கள் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தைச் சார்ந்தவை. ஆதீனத் திருமடம் திருவண்ணாமலையில் தொடங்கிய காலம் முதல் இன்றளவும் தொடர்ச்சியாகச் செய்துவரும் தமிழ்ப்பணிகளை வரையறுத்துக் கூறுவது ஆய்வின் எல்லையாகும்.

## ஆய்வின் நோக்கம்

மடங்கள் சமயப்பணி செய்வதோடு, கோயில் திருப்பணிகளைச் செய்வது அதன் தலையாய நோக்கங்களாக அமையும். அத்தகைய

மடங்களிலிருந்து மாறுபட்டுச் சமயப்பணிகளையும், சமுதாயப் பணிகளையும், தமிழ்ப்பணிகளையும் செய்து வருகின்ற ஆதீனம் திருவண்ணாமலை ஆதீனம். இவ்வாதீனம் ஆற்றிய, ஆற்றிக் கொண்டிருக்கின்ற தமிழ்ப்பணிகளைக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## கருதுகோள்

மன்னர்கள் செய்த பல பணிகளைப் பின்னர் மடங்களும் செய்யலாயின. தமிழ்மொழி வளர்ச்சிக்கு ஆதாரமாக விளங்கும் இலக்கியங்கள் எந்தெந்த வழிகளில் தோன்றியன என்பதை நோக்கும் போது ஆதீனங்களும் தமிழ்ப்பணி ஆற்றியுள்ளன என்பதை அறிய முடிகிறது. அவை ஆற்றிய தமிழ்ப் பணியினால் மொழி வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும். பல புலவர்கள் இவ்வாதீனத்திலிருந்து தமிழ்ப்பணியாற்றியிருக்கின்றனர். இவர்களுக்கென சில தனித்தன்மைகள் இருக்கும். இம்மடத்தின் வாயிலாக வெளிவந்த இலக்கியங்கள் சமூகத்தை வெளிக்காட்டும் போன்றவை இவ்வாய்வின் கருதுகோளாக அமைகின்றன.

## சான்றாதாரங்கள்

குன்றக்குடி திருமடத்தில் தொண்டாற்றிய அடியார்களின் வாழ்வியல், அவர்தம் படைப்புக்கள், ஆதீனத்தின் வெளியீடுகள், பேட்டி ஆகியவை இவ்வாய்வுக்குரிய முதன்மைச் சான்றாதாரங்களாகும். தொடர்புடைய திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், அகராதிகள், கலைக் களஞ்சியங்கள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகும்.

## ஆய்வு அணுகுமுறை

ஆதீன அடியார்களின் வாழ்வியல் செய்திகளையும் அவர்கள் ஆற்றிய சமயப்பணிகளையும் சுட்டுவதற்கு விளக்கவியல் அணுகுமுறை பின்பற்றப்பட்டுள்ளது. ஆதீனம் செய்த காலத்துக்கேற்ற தமிழ்ப்பணிகளையும், சமுதாய முன்னேற்றத்திற்காக ஆதீனம் ஆற்றிய சமுதாயப் பணியையும் காணச்சமூகவியல் அணுகுமுறையும் பின்பற்றப் பெற்றுள்ளது.

## இயல் பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை,

1. ஆதீனம் தோற்றமும் வளர்ச்சியும்
2. சமயப்பணி
3. சமுதாயப்பணி
4. இலக்கியப்பணி
5. குன்றக்குடி அடிகளாரின் தமிழ்க்கொடையும், தனித்தன்மையும்.

## இயல் விளக்கம்

சைவமும், தமிழும், வைணவமும் வளர மடங்கள் பெரும்பங்கு ஆற்றியுள்ளன. சைவத்தையும், தமிழையும் இருகண்களாகக் கொண்டு போற்றி வளர்த்த ஆதீனங்களில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனமும் ஒன்றாகும். இவ்வாதீனம் தோன்றக் காரணம், தோற்றுவித்தவர்,

மடத்தில் வழிவழியாகத் தோன்றிய அடியார்கள், மடத்தின் வளர்ச்சிகள், செயல்பாடுகள் ஆகியவை '**மடத்தின் தோற்றமும் வளர்ச்சியும்**' எனும் முதலியலில் இடம்பெற்றுள்ளன.

சமயம் மனிதனைப் பக்குவப்படுத்தி அவனது வாழ்க்கையை உயர்த்துவது. சமயங்களில் சுத்த சைவம் சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டது. சுத்த சைவ ஆதீனமாகிய குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் ஐந்து கோயில்களின் நிருவாகப் பணிகளையும், சமயம் சார்ந்த விழாக்களையும், உழவார, சமய இயக்கப் பணிகள் மற்றும் நூல்களையும் வெளியிடுதல், சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்துதல், தேவாரப் பாக்களை ஓதுதல் போன்ற சமயப் பணிகளைச் செய்து வருகின்றது. இவைகளை விளக்குவதாக '***சமயப் பணி***' என்ற இரண்டாவது இயல் அமைகின்றது.

சமுதாயம் என்ற ஆலமரம் செழித்து வளர ஆணி வேராக இருப்பது சமயங்கள். சமய அமைப்புக்கள் சமுதாயத்தைக் காக்கும் தூண்களாகும். அவ்வகையில் ஆதீனங்கள் மக்களுக்கேற்ற சமுதாயப் பணிகளை வழிவழியாகச் செய்து வருகின்றன. குன்றக்குடி ஆதீனமும் காலத்திற்கேற்ற சமுதாயப் பணிகளைப் பலவழிகளில் செய்து வருகின்றது. நாற்பத்தைந்தாவது பட்டம் குரு மகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் காலம் மடத்தின் சமுதாயப் பணிகளின் பொற்காலம். அவர்களாற்றிய சமுதாயப் பணிகளைச் சுட்டுவது '***சமுதாயப்பணி***' எனும் மூன்றாமியலாகும்.

இலக்கியங்கள் காலத்தின் பிரதிகள். மொழி வளர்ச்சிக்கு மூலாதாரங்கள். அத்தகைய இலக்கியங்கள் தோன்ற ஆதீனமும்

காரணமாகவுள்ளது. ஆதீனங்களின் இலக்கியப்பணிகளில் குன்றக்குடி ஆதீனம் ஆற்றிய இலக்கியப் பணிகள் சிறப்பானதாகும். ஆதீனப் படைப்பாளிகள், அவர்தம் நூல்கள், பிற வெளியீடுகள், பட்டிமன்றம், வழக்காடு மன்றம், சொற்பொழிவுகள் போன்றவை **'இலக்கியப்பணி'** என்ற நான்காமியலில் இடம்பெற்றுள்ளன.

மொழியைத் தன் மூச்சாகக் கொண்டு சமயத்தை மொழிவழி வளர்த்தவர் அடிகளார். தமிழை உலக அரங்கில் உயர்த்தப் பாடுபட்டார். அவரின் தமிழ்ப் படைப்புகள் எக்காலத்தவரும் படித்துத் தமிழின்பம் பெற வேண்டிய இலக்கியக் கருவூலகங்கள். குன்றக்குடி அடிகளாரின் இறைப்பணி, தமிழ்ப்பணி, அறிவியல், சமுதாய, சமயப் பணிகள் தனித்தன்மையுடையவை. மேடைத் தமிழ், எழுத்துலக உறவுகள், தமிழைப் பயிற்றுமொழி ஆக்குவது போன்றவை அடிகளாரின் தமிழ்க் கொடை. இவற்றைத் தனித்துக் காண்பது **'அடிகளாரின் தமிழ்க் கொடையும், தனித்தன்மையும்'** என்ற ஐந்தாவது இயலாகும்.

ஆய்வில் பெறப்பட்ட கருத்துக்கள் தொகுக்கப் பெற்று ஆய்வின் முடிவுகளாக முடிவுரையில் இடம் பெற்றுள்ளன. ஆய்வுக்குத் துணை செய்த நூல்கள், ஆய்வேடுகள் போன்றவை துணை நூற்பட்டியலாக இடம் பெற்றுள்ளன.

46-ஆவது குருமகாசந்நிதானம் பொன்னம்பல அடிகளாரின் பேட்டி பின்னிணைப்பாக இடம் பெற்றுள்ளது.

# இயல் - 1

இந்திய நாட்டிலுள்ள மதங்களில் இந்து சமயம் பழமை வாய்ந்தது. சைவம், வைணவம் என்ற இருபெரும் பிரிவுகளை உள்ளடக்கியது. இவற்றில் சைவசமயம் சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டது. "நமது நாட்டில் பெரும்பான்மையோர் சிவபெருமானை முழுமுதற் கடவுளாக வழிபட்டு வருகின்றனர். இச்சிவ வழிபாடு மிகவும் பழமையானது. இச் சமயம் இக்காலத்தில்தான் தோன்றியது என்று வரையறுக்க முடியாத காரணத்தினாலேயே இதன் தொன்மைத் தெற்றெனத் தெரிகிறது.

இந்தியாவின் ஆதிகுடிகள் எனப்படும் திராவிடர்கள் காலத்திலேயும், அவர்கள் காலத்திற்கு முன்பும் சைவம் இந்நாட்டில் திகழ்ந்தது என ஜி.யு.போப் ஐயர், சர் ஜான் மார்ஷல் போன்ற மேல் நாட்டினர் ஒப்புக் கொண்டிருக்கின்றனர்."(1)

இத்தகைய பழமைவாய்ந்த சைவசமயத்தில் சுத்த சைவம் என்பது ஒன்றாகும். சுத்த சைவம் என்பதற்கு "பதி, பசு, பாசம் என்பவற்றின் உண்மை நிலையை உணர்ந்தவரே சுத்தசைவர் எனப்படுவர்; சித் என்னும் அறிவை, அசித் என்னும் அறியாமையால் கெடாமல் பார்த்துக் கொள்வர். சுத்த மாயையுடன் அசுத்த மாயையைக் கலக்கவிடார் என்றும், மாறாததாகிய பதி நித்தமென்றும், அதனை உணர்வதற்குச் சிறந்தது ஞான மார்க்க என்பன போன்ற கருத்துக்களை வலியுறுத்துவராம்"(2) என்று விளக்கம் கூறப்பட்டுள்ளது.

சுத்த சைவம் என்பதற்கு அபிதானசிந்தாமணியில் "தத்துவத்திரயமாகிற பதி, பசு, பாசம் மூன்றும் அநாதிநித்யம் என்றறிந்து

பதி நிச்சயம் பிறந்து மௌனமே பொருளாய் இலயமாக நிஷ்டைகூடிச் சிவத்தை அடைவது"[3] எனக் கூறப்பட்டுள்ளது. "சுத்த சைவ பதிணென் ஆதீனங்கள் 1. திருவாவடுதுறை, 2.காஞ்சிபுரம், 3. தருமபுரம், 4.சூரியனார்கோவில் (ஆடுதுறை) 5.ஆகசிலம்பிரகாசாதீனம்(சிதம்பரம்) 6. செங்கோலாதீனம் (பெருங்குளம்-திருநெல்வேலி) 7.திருஞானசம்பந்தராதீனம் (மதுரை), 8.திருவண்ணாமலை ஆதீனம் (குன்றக்குடி), 9.இராமேச்வராதீனம், 10. நீலம்பாடி (தஞ்சாவூர்), 11.தாயுமான சுவாமிகள் ஆதீனம், 12.சாரமாமுனி ஆதீனம், (திரிசிராப்பள்ளி) 13.சொர்க்கபுரா ஆதீனம் (அம்பர் திருமாகானம்) 14.வேளாகுறிச்சி ஆதீனம் (திருவாரூர்), 15.வள்ளலார் ஆதீனம் (சீகாழி), 16. வருணை ஆதீனம் (வேதாரண்யம்) 17. நாய்ச்சியார் கோவில் ஆதீனம் (கும்பகோணம்), 18.நிரம்ப அழகிய தேசிகர் ஆதீனம் (மதுரை-துழாவூர்)"[4] என்று வகைப்படுத்தப்பட்டுள்ளது.

சுத்த சைவ மடங்கள் பதினெட்டில் ஒன்றான குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் சைவத்தையும், தமிழையும் இருகண்களாகப் போற்றிப் பாதுகாத்து வளர்த்து வருகின்றது. அதோடு சமுதாயப்பணிகளையும் செய்து வருகிறது. இத்திருமடம் "தமிழகத்துச் சுத்தாத்துவித சைவசித்தாந்தத் திருமடங்கள் பதினெட்டனுள் ஒன்று, குன்றக்குடி-திருவண்ணாமலை ஆதீனம். அவ்வாதீனத்தை, திருவண்ணாமலையில் திருக்கோயில் கொண்டுள்ள, அருள்மிகு அண்ணாமலை அண்ணலுக்கு நாள் வழிபாடும், சிறப்பு வழிபாடுகளும் செய்துவந்த ஆதி சைவமரபினராகிய அருள்திரு தெய்வசிகாமணி தேசிகர் அவர்கள் அண்ணாமலை நகரில் பதிநான்காம் நூற்றாண்டில் நிறுவியருளினார்கள்.

அக்காலம் முதல் ஆதீனத்தலைவர்கள் முறையே திருவண்ணாமலையிலும், திருக்கொடுங் குன்றத்திலும், குன்றக்குடியிலுமாக எழுந்தருளி இருந்து அருளாட்சி புரிந்து வருகிறார்கள்"[5] என்பர். அவ்வாதீனத்தின் தோற்றம் வளர்ச்சி குறித்து ஆராய்கிறது இவ்வியல்.

## தோற்றம்

இறைவன் ஒலி, ஒளி வடிவானவன் என்பது நாயன்மார்கள் கொள்கை. "திருவண்ணாமலை ஞானமலை; இறைவன் பேரொளிப் பிழம்பாகத் தோன்றிக் காரிருள் ஆணவக் கட்டறுத்த ஒளிமலை; தொன்றுதொட்டு இன்றுவரை எண்ணற்ற தவசீலர்களுக்கும், ஞானிகளுக்கும், மோனிகளுக்கும், முனிவர்களுக்கும், யோகிகளுக்கும் ஞானத் தொட்டிலாக விளங்கிவரும் அருள்மலை"[6]என்று போற்றப்படுகிறது.

அத்தகைய திருவண்ணாமலைத் திருத்தலத்தில் 740 ஆண்டுகளுக்கு முன் திருவவதாரம் செய்தருளியவர் திருவருள்திரு. தெய்வசிகாமணி தேசிக குருமூர்த்திகள். 680 ஆண்டுகளுக்குமுன் ஞாலமுய்ய, நாமுய்ய, சைவநன்நெறியின் சீலமுய்ய வேண்டி, திருவண்ணாமலை ஆதீனத் திருமடத்தை நிறுவினார்கள். திருமடம் இக்காலத்தில் சிவகங்கை மாவட்டத்தில் குன்றக்குடியிலிருந்து வருகிறது.

## *திருக்கயிலாய பரம்பரை*

சிவபெருமான் சிவஞான போதத்தைத் திருநந்தித் தேவருக்கு உணர்த்தினார். இவர் சிவஞானச் செல்வரும் தம் மாணாக்கருமாகிய சனற்குமார முனிவருக்குணர்த்தினார். இவர் தம் மாணவரில்

சிறந்தவராகிய சத்தியஞானதரிசினிக்கு அருளினார். இவர்தம் மாணாக்கருள் சிறந்த பரஞ்சோதி முனிவருக்கு அருளிச் செய்தார்.

பரஞ்சோதி முனிவர் மெய்கண்டாருக்குக் கூறினார். மெய்கண்டார் அருள்நந்தி தேவருக்கு அருளினார். அருள்நந்தி தேவர் குருமுதல்வராகிய தெய்வசிகாமணி தேசிகருக்குக் கற்றுக் கொடுத்தார். இவர் தம்மை நாடி வருபவர்களுக்குச் சிவஞானபோகத்தைச் சிறப்பாகக் கற்றுக் கொடுத்தார் என்பதிலிருந்து இம்முறை பரம்பரையாக வருவதை அறியலாம்.

## குருமுதல்வர்

திருவண்ணாமலையில் உறையும் சிவபெருமானுக்கு வழிவழி அடிமை செய்யும் பெருமை உடைய ஆதிசைவ மரபில் திருவவதாரம் செய்தவர் ஆதீனக் குருமுதல்வர். இவரது காலம் கி.பி.1250-1325 என்பதாகும். இவர் வளர்ந்து பதினாறு அகவைக்குள் கற்பன கற்றும், கேட்பன கேட்டும், உணர்வன உணர்ந்தும் பக்குவநிலை அடைந்தார்.

ஒருநாள் அண்ணாமலை அண்ணலின் திருக்கோயிலில் இறைவன் அருட்காட்சியைக் கண்டு வணங்கி அவரின் கட்டளைப்படி திருத்துறையூருக்குப் புறப்பட்டுச் சென்றார். திருத்துறையூரிலிருந்து அருள்நந்தி சிவாச்சாரியாரின் கனவில் இறைவன் தோன்றி, "நமது அன்பன் தெய்வசிகாமணி, திருவண்ணாமலையிலிருந்து உன்னை நாடி வருகின்றான். அவனுக்கு ஞானோபதேசம் செய்வாயாக"(7) என்று அவரிடம் கூறி மறைந்தருளினார்.

இறைவன் உணர்த்திய ஞான ஆசிரியரைக் குருமுதல்வர் கண்டு அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். அருள்நந்தி சிவாச்சாரியாரும்

தம் சீடர்களில் ஒருவராகத் தெய்வசிகாமணியை ஏற்றுச் சிவஞான போதத்தை உபதேசித்தருளினார்.

குருமுதல்வர் இறைவன்மீது கொண்ட பக்தியாலும், பற்றாலும் இறைவன் சுயம்புவாகத் தமது ஆன்மார்த்த மூர்த்தியாகப் பூசைக்கு எழுந்தருள வேண்டும் என்று விருப்பம் கொண்டார். அங்கு அவர் கனவில் காளத்தியப்பர் தோன்றி, "அன்பனே! நாம் உனக்காகத் திருக்கோயில் அருகேயுள்ள புற்றிலே சிவலிங்க உருவாய்த் திகழ்கிறோம்; அங்கு வருக!"[8] எனக் கூறி மறைந்தார் என்று கூறப்பட்டுள்ளது.

கண்விழித்த குருமுதல்வர் ஆராக் காதல் பெருக எழுந்தோடிப் புற்றருகே சென்றார். அங்குக் காளத்தியப்பரை லிங்க வடிவில் கண்டு எடுத்து, மார்புறத் தழுவி மட்டில்லா மகிழ்ச்சி கொண்டார். தமது ஆன்மார்த்த வழிபாட்டு மூர்த்தியாக அப்பெருமானை ஏந்திக் கொண்டு காளத்தியை விட்டுத் திருவண்ணாமலைக்குப் புறப்பட்டுச் சென்று அங்கிருந்து வழிபட்டு வரலாயினார்.

### திருவண்ணாமலையில்

குருமுதல்வருக்காகச் சிவலிங்க வடிவாய் எழுந்தருளிய காளத்தியப்பர், திருவண்ணாமலையில் அமைந்த ஆதீனத் திருமடத்திலும் பின் ஆதீனத் திருமடம் பிரான்மலையில் அமைந்த போது அங்கும், அதன்பின் குன்றக்குடியில் ஆதீனம் அமைந்த போது குன்றக்குடித் திருமடத்திலும் எழுந்தருள்விக்கப் பெற்று வழிவழி ஆதீனக் குருமூர்த்திகளால் வழிபாடு செய்யப் பெற்று வருகிறார்.

அனுபூதிச் செல்வராக விளங்கிய குருமுதல்வரை நாடிச் சீடர்கள்

வந்தனர். அவர்களுக்குச் சிவஞானச் செல்வத்தைக் கற்றுக் கொடுத்தார். சீடர்கள் தொகை பெருகப்பெருக அவர்கள் தங்கியிருந்து உபதேசம் பெற்றுக் கொள்ளும் வகையில் தமது 60-ஆம் வயதுக் காலத்தில் (கி.பி.1310-இல்) திருவண்ணாமலையில் ஆதீனத் திருமடம் தோற்றுவித்தருளினார்.

சிலகாலம் அருளுபதேசம் செய்து பின் தமது சீடருள் சிறந்தவராகிய தாண்டவராய தேசிக குருமூர்த்தியிடம் திருமடத்துப் பொறுப்பினை வழங்கி, ஒரு ஆவணிமாதம் பூரட்டாதி நாளன்று திருவண்ணாமலைத் திருப்பதியில் சிவயோக நிலையில் எழுந்தருளியுள்ளார்.

திருவண்ணாமலையில் திருமடம் குருமுதல்வர் காலம் முதல் 17-ஆம் பட்டம் நாகலிங்க தேசிகர் வரை இருந்தது. அத்திருமடத்தில் எழுந்தருளி அருளாட்சி புரிந்த குருமூர்த்திகள் வருமாறு.

1. திருவருள்திரு. தெய்வசிகாமணி தேசிகர்
2. திருவருள்திரு. தாண்டவராய தேசிகர்
3. திருவருள்திரு. வினைதீர்த்த தேசிகர்
4. திருவருள்திரு. கனகசபாபதி தேசிகர்
5. திருவருள்திரு. வேலப்ப தேசிகர்
6. திருவருள்திரு. சுப்பிரமணி தேசிகர்
7. திருவருள்திரு. உருத்திரகோடி தேசிகர்
8. திருவருள்திரு. சதாசிவ தேசிகர்

9. திருவருள்திரு. கண்ணப்ப தேசிகர்

10. திருவருள்திரு. மாசிலாமணி தேசிகர்

11. திருவருள்திரு. சந்திரசேகர தேசிகர்

12. திருவருள்திரு. குமரகுரு தேசிகர்

13. திருவருள்திரு. அம்பலவாண தேசிகர்

14. திருவருள்திரு. அருணகிரி தேசிகர்

15. திருவருள்திரு. கந்தப்பத் தேசிகர்

16. திருவருள்திரு. சுவாமிநாத தேசிகர்

17. திருவருள்திரு. நாகலிங்கத் தேசிகர்

ஆகியோராவர்.

இக்குருமூர்த்திகள் அனைவரும் திருவருள் பண்பாடு நிறைந்த அருளாளர்களாக விளங்கியவர்கள். குருவருள் ஒன்றே அவர்களது குறிக்கோளாக அமைந்தது. அருளார்ந்த நெஞ்சினராய் சிவஞானத் தெள்ளமுதினை மக்களுக்கு வழங்கியவர்கள். சிவஞான மேலீட்டால் தம்மை மறந்து தியான சமாதியால் அமர்ந்தவர்கள்.

**17-ஆம் பட்டம் நாகலிங்கத் தேசிக சுவாமிகள் (கி.பி.1680-1700)**

திருவருள்திரு. நாகலிங்கத் தேசிகர் உலகம் வாழ்வதெற்கென வாழ்ந்தவர்; நல்லவற்றையே சிந்தித்து சிவநெறி பேணியவர். சிவநெறியை எடுத்தியம்பி மக்களிடையே சைவப்பயிர் வளர்த்தவர். இவர்

இராமேசுவர யாத்திரை செய்த வேளையில் இராமநாதபுரம் மன்னர் இரகுநாத சேதுபதி (கி.பி.1675-1710) திருச்சுழியலுக்கு வந்து அங்கெழுந்தருளிய குருமூர்த்திகளைத் தரிசித்தார். இராமேசுவர யாத்திரைக்குரிய ஏற்பாடுகளைச் செய்தார். தமது இராமநாதபுரம் சீமையிலேயே தங்கியிருந்து அருள்பாலிக்க வேண்டினார்.

***பிரான்மலையில்***

மன்னரின் அன்பான வேண்டுகோளுக்கிணங்க குருமூர்த்திகள் பிரான்மலையைத் தலைமையிடமாகக் கொண்டு அருளாட்சிப் புரியத் தொடங்கினார். பிரான்மலையில் தொடங்கி நடந்து வந்த அருளாட்சியில் எழுந்தருளியிருந்த குருமூர்த்திகள் வருமாறு,

18. திருவருள்திரு. குமரசுவாமி தேசிகர்

19. திருவருள்திரு. திருச்சிற்றம்பல தேசிகர்

20. திருவருள்திரு. சிதம்பரநாத தேசிகர்

21. திருவருள்திரு. சிவக்கொழுந்து தேசிகர்

22. திருவருள்திரு. நமச்சிவாய தேசிகர்

23. திருவருள்திரு. அகத்தீசுவர தேசிகர்

24. திருவருள்திரு. பொன்னம்பல தேசிகர்

25. திருவருள்திரு. ஏகாம்பர தேசிகர்

26. திருவருள்திரு. வைத்தியநாத தேசிகர்

27. திருவருள்திரு. அண்ணாமலை தேசிகர்

28. திருவருள்திரு. ஞானப்பிரகாச தேசிகர்

29. திருவருள்திரு. ஆறுமுக தேசிகர்

30. திருவருள்திரு. திருச்சிற்றம்பல தேசிகர்

ஆகிய அருளாளர்கள்.

"பிரான்மலையிலிருந்து அருளாட்சி புரிந்த குருமூர்த்திகளில் பலர் மிகக் குறைவான காலமே அருளாட்சிப் புரிந்தனர். அவர்கள் காலத்தில் பிரான்மலையில் ஆதீனத் திருமடம் நிறுவப்பெற்றது.

பிரான்மலை, (பிரான்மலை, உட்கிடைக்கோயில் சதுர்வேதி மங்கலம்) திருப்புத்தூர், திருக்கோளக்குடி, குன்றக்குடி, தேனாட்சியம்மன் கோயில் ஆகிய ஐந்து கோயில்களுக்கும் பரம்பரை அறங்காவலர்களாக இருந்து அருளாட்சி புரிந்தனர். அன்றுமுதல் இன்று வரை குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன குருமூர்த்திகளே பிரான்மலை வகை ஐந்து கோயில்களின் பரம்பரை அறங்காவலர்களாக இருந்து அருளாட்சி செய்து வருகின்றனர்."(10)

## குன்றக்குடியில்

28-ஆம் பட்டம் ஞானப்பிரகாச தேசிகர் குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் மீது மிகுந்த ஈடுபாடு உள்ளவர். அதன் காரணமாக 29-ஆம் பட்டம் குருமூர்த்திக்கு ஆறுமுக தேசிகரெனத் தீட்சாநாமம் கொடுத்துள்ளார்.

28-ஆம் பட்டம் ஞானப்பிரகாச தேசிகர் முதல் 30-ஆம் பட்டம் திருச்சிற்றம்பல தேசிகர் வரை பிரான்மலையிலிருந்து கொண்டு அருளாட்சி புரிந்து வந்த போதிலும் அவர்கள் அனைவருக்கும் குன்றக்குடிப் பெருமான்மீது ஈடுபாடு மிகுந்துவரலாயிற்று.

31-ஆம் பட்டம் மருதநாயக தேசிகர் காலம், சிவகங்கைச் சீமையையாண்ட மருது பாண்டியர் குன்றக்குடி அருள்மிகு சண்முகநாதன் திருக்கோயிலை இப்போதிருக்கும் பெரிய அளவில் திருப்பணி செய்து சாந்துப் புலவரைக் கொண்டு மயூரகிரிக்கோவையும் (கி.பி.1778) செய்வித்துத் தனிப்பெருமை சேர்த்திருந்த காலம். எனவே, மருதநாயக தேசிக குருமூர்த்திகளால் பிரான்மலையிலிருந்த காளத்தியப்பர் குன்றக்குடி திருமடத்துக்கு எழுந்தருள்விக்கப் பெற்றார். அக்காலம் முதல் திருவண்ணாமலை ஆதீனமடாலயம் குன்றக்குடியில் திகழ்ந்து வருகிறது.

31-ஆம் பட்டம் திருவருள்திரு. மருதநாயக தேசிகருக்குப்பின் கி.பி.1860 வரை குன்றக்குடியிலிருந்து அருளாட்சி புரிந்த குருமூர்த்திகள் வருமாறு,

32. திருவருள்திரு. தாண்டவராய தேசிகர்

33. திருவருள்திரு. சிவசுப்பிரமணிய தேசிகர்

34. திருவருள்திரு. சாம்பசிவ தேசிகர்

35. திருவருள்திரு. ஆறுமுக தேசிகர்

36. திருவருள்திரு. அருணாசல தேசிகர்

37. திருவருள்திரு. பொன்னம்பல தேசிகர்

இவர்கள் அனைவரும் அருளாளர்களாகச் சைவமும், தமிழும் தழைத்தோங்கப் பெரும்பணிகள் புரிந்தனர். சென்னையில் உள்ள மயிலாப்பூர் கட்டளைமடம், நாட்டுப்பிள்ளையார் கோயில் தெரு கட்டளை மடங்களில் தம்பிரான்களை நியமித்து நல்லாட்சி புரிந்து வந்தனர்.

## 38-ஆம் பட்டம் பெரிய ஆறுமுக தேசிகர் (கி.பி. 1860 -1889)

இவர்கள் காலத்தில் ஆதீனம் மிகச் சிறந்து விளங்கியது. ஆதீன மடாலயம் இப்போதிருக்கும் நிலையில் பெரிதாகத் திருப்பணி செய்யப் பெற்றது. குருமகாசந்நிதானம் சபாபதி முனிவரிடத்தில் எல்லாப் பொறுப்புக்களையும் கொடுத்துச் சிவபூசை சிவஞானபோத உபதேசம் ஆகியவற்றில் ஈடுபட்டு வந்தார்.

கி.பி.1864-இல் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் குன்றக்குடி ஆதீனத் திருமடத்திற்கு வந்து சிறந்த சொற்பொழிவு நிகழ்த்தினார். குருமகாசந்நிதானம் அவர்கள் நாவலரை நன்கு பாராட்டி எந்த ஆதீனமும் செய்யாத வகையில் புதிதாகச் சிவிகை (பல்லக்கு) செய்வித்து அதில் அமரச் செய்து ஊர்வலச் சிறப்பும் செய்வித்து அருளியுள்ளார்.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் குன்றக்குடிக்கு வந்தபொழுது அவர்களைக் குருமகாசந்நிதானம் சில நாட்கள் குன்றக்குடியில் தங்க வைத்து அவர்களுக்குத் தக்கசன்மானம் வழங்கி பல்லக்கில் வைத்துக்காரைக்குடிவரை அனுப்பி வைத்துள்ளார்.

சிலேடைப்புலி வேம்பத்தூர் பிச்சு ஐயர் அவர்களைக் கொண்டு குன்றக்குடி சண்முகநாதருக்கு உலா இயற்றுவித்தார். இவ்வுலா நூலில் அக்காலத்து ஆதீனச் சிறப்புக்களும், ஐந்து கோயில்களிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளும் மிக அழகாகப் பாடப்பட்டுள்ளன.

"நந்தி பரம்பரையில் நல்(கு) அருணை ஆதீனத்(து)

இந்து அணியோன் வாயால் இனி(து) இயம்ப - வந்திலகு

சைவா கமம்விளங்கத் தாரணியில் ஆலயங்கள்

மைவார்பைங் கூழ்போல் மன்னிநிற்ப - மெய்வயந்த

சிறாரும் தெய்வ சிகாமணியென்றே உதித்துப்

பாரான் குருமரபில் பார்க்கரன்போல் - ஏராரும்

தன்மகர்த்தா வாகி இந்தத் தரணியெல் லாம்புகழும்

சின்மயனாம் ஆறுமுக தேசிகன்"[(11)] என்று ஆதீனத்தைப் பற்றியும், குருமகாசந்நிதானம் அவர்களைப் பற்றியும் சிறப்பித்துப் பாடியுள்ளதை அறிய முடிகிறது.

இவர்கள் காலத்தில்தான் ஆதீன அடியவராகிய ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள் பெரிய புராணத்திற்கு உரை எழுதினார்கள். ஆதீன அடியவர் அருள்திரு. குமரசுவாமி முனிவர் குருமுதல்வர் மீது பாடியருளிய ஞானவந்தாதி, நான்மணிமாலை ஆகிய நூல்களை ஆதீன வித்துவான் தில்லைநாதப் பிள்ளையைக் கொண்டு 1887-இல் அச்சிட்டு வழங்கினார்.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களின் மாணாக்கருள் ஒருவராகிய திருவாவடுதுறை ஆதீனம் அருள்திரு.ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளை அழைத்து ஆதீனத்தின் சின்னப்பட்டமாக்கினார். இவ்வாறு பெரிய ஆறுமுகதேசிக சுவாமிகள் அருளாட்சி புரிந்து சிவமானார்.

## 39-ஆம் பட்டம் ஆறுமுக தேசிக சுவாமிகள் (கி.பி.1890-1893)

இவர்கள் 38-ஆம் பட்டம் பெரிய ஆறுமுக தேசிக சுவாமிகளால் சின்னப்பட்டம் பெற்றவர்; மகாவித்துவானாகத் திகழ்ந்தவர். தணிகைப் புராணம், பெரிய புராணம், மெய்கண்ட நூல்கள், பண்டார சாத்திரம் முதலியவைகளை நன்றாகப் பாடம் சொல்லும் ஆற்றல் பெற்றவர்கள். ஞானவந்தாதி, தெய்வசிகாமணி நான்மணிமாலைப் பதிப்புக்குச் சிறப்புப் பாயிரம் அருளியுள்ளார். இது இவர்களது பெரும் புலமைக்குச் சான்றாகும்.

தமிழ்ப் புலவர்களை நன்கு ஆதரித்துள்ளார். ஆதீனத் தலைமை எழுத்தர் அப்பாப்பிள்ளையை உ.வே.சா அவர்களுக்குத் துணையாக மிதிலைப்பட்டி போன்ற பல இடங்களுக்கும் அனுப்பிச்சிறந்த இலக்கிய ஏடுகள் கிடைக்கச் செய்தார்கள்.உ.வே.சா அவர்களுக்குச் சிலப்பதிகாரத்தின் சிறந்த ஏட்டுப் பிரதியை உதவி அருளினார்கள். சைவமும் தமிழும் தலைத்தோங்க அருளாட்சி புரிந்து சிவத்தில் கலந்தார்.

## 40-ஆம் பட்டம் தாண்டவராய தேசிக சுவாமிகள் (கி.பி.1893-1902)

தாண்டவராய தேசிக சுவாமி சிறந்த கொடை வள்ளலாகத் திகழ்ந்தார். குன்றக்குடி சாகித்ய வித்துவான் இரட்டைப் பல்லவி சக்கரதானம் கிருஷ்ணய்யர் இவர்களின் கொடைத்தன்மைப் பற்றிப் பாடிய பாடல் வருமாறு,

"நீண்டகை யான், புகழ்நீதிகள் ஞானம்நிலைக்க
பாண்டவர் தோழன் இவன்என்று பாரில் பணிந்திடுவர்
வேண்டும் எலாம்தரும் மேகம், சுரபி, தருவியக்கும்
தாண்டவ ராய தயாநிதி தன்கொடைத் தன்மை கண்டே"(12)

எனச் சிறப்பிக்கப் பெற்றுள்ளார்.

## 41-ஆம் பட்டம் நடராச தேசிக சுவாமிகள் (கி.பி.1902-1905)

இக்குருமூர்த்திகள் போற்றத்தக்கப் புண்ணிய சீலராவார். திருமடத்தின் சொத்துக்களைக் காக்கவும், அபிவிருத்தி செய்யவும் பாடுபட்டவர். நவரத்தினம் பதித்த கிரீடம் செய்து குன்றக்குடிச் சண்முகநாதனுக்கு அணிவித்து மகிழ்ந்தவர்.

## 42-ஆம் பட்டம் அண்ணாமலை தேசிக சுவாமிகள் காலம் (கி.பி.1905-1928)

இவர் சிறந்த சித்தர். சித்தர் நூல்களில் ஆழ்ந்த பயிற்சி உடையவர். உணவை வெறுத்து, மௌன மூர்த்தியாய்ப் பலகாலம் இருந்து அருளியவர்.

## 43-ஆம் பட்டம் அண்ணாமலை தேசிக சுவாமிகள் காலம் (கி.பி.1928-1946)

இவர் சைவத் திருமுறைகளில் நன்கு திளைத்தவர். 24.6.1940-இல் குன்றக்குடி அருள்தரு சண்முகநாதன் திருக்கோயிலுக்குத் திருக்குடமுழுக்கு நீராட்டு விழாச்செய்து மகிழ்ந்தார். ஆதீன அருளாட்சியில் உள்ள திருக்கோயில்களுக்குத் திருவாபரணங்கள் பல செய்வித்தருளினார். ஆதீன மடாலயத்தில் வெள்ளிக் குத்துவிளக்கு செய்வித்துள்ளார்.

## 44-ஆம் பட்டம் ஆறுமுகத் தேசிக சுவாமிகள் (கி.பி.1946-1952)

இவர் தருமையாதீனத்தில் இருந்து வந்த திருவருள்திரு. தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) அவர்களை அழைத்து வந்து

இளையப்பட்டமாக்கிய பெருமை பெற்றவர். அடிகளாரின் துணை கொண்டுக் குன்றக்குடியில் வானொலிப் பூங்கா அதைத்தார். பாலகவி வே.இராமநாதன் செட்டியார் அவர்களைக் கொண்டு தெய்வசிகாமணி நான்மணிமாலையை மறுபதிப்புச் செய்தார். அருளாட்சி புரிந்து 1952-இல் பரிபூரணம் அடைந்தார்.

## ஆதீன அடியவர்கள் திருக்கூட்டம்

## முனிவர்களும் தம்பிரான்களும்

### ஞானப்பிரகாச முனிவர் ( கி.பி.1550-1600)

ஆதீன அடியவர்கள் திருக்கூட்டத்தில் மிகச் சிறப்பாக வைத்து எண்ணப்பெறுபவர் ஞானப்பிரகாச முனிவர். இவரது ஊர் இலங்கை யாழ்ப்பாணம். இவர் தமிழறிஞர் ஆறுமுக நாவலரின் முன்னோர், பாட்டனார் முறையினர். சிறந்த சிவநெறிச் செல்வராக விளங்கியவர்.

திருவண்ணாமலை ஆதீனத்தை அடைந்து, அக்காலத்தில் இருந்த குருமூர்த்திகளிடம் சந்நியாசம் பெற்றுக் கொண்டு சிவாகமங்களை ஓதி உணர்ந்தார். ஆதீனக் குருமுதல்வரின் ஞான ஆசிரியராகிய அருள்நந்தி சிவாச்சாரியார் இயற்றிய சிவஞான சித்தியாருக்குச் சிறந்த உரை இயற்றியவர்.

வடமொழியில் பெரும்புலமை பெற்றவர். திருவண்ணாமலைக்கு வந்து துறவு பெற்று, பின்பு சிதம்பரத்திற்குச் சென்று நகரின் தென்கிழக்குப் பகுதியில் ஒரு குளம் வெட்டி மடம் அமைத்துத் தங்கியிருந்தார். குளத்திற்கு ‘ஞானப்பிரகாசர் குளம் ’ என்றும், மடத்திற்கு ‘ஞானப்பிரகாசர் மடம் ’ என்றும் பெயரிட்டார்.இன்றும் சிதம்பரம் கனகசபை நகர் அருகே

ஞானப்பிரகாசர் குளம் உள்ளது. குளத்தின் கரையில் பல மடங்கள் உள்ளன. சில அழிந்து விட்டன. சேக்கிழார்கோயில் இங்குத்தான் உள்ளது. இறுதிக் காலத்தில் சிதம்பரத்தில் தமது மடத்திலேயே சிவப்பேறு பெற்றார்.

### *சங்கரலிங்க முனிவர்*

பிரான்மலையில் ஆதீனம் அருளாட்சி இருந்த காலத்தில் குன்றக்குடியில் தங்கியிருந்த மாமுனிவர். "இவர் காலத்தில் குன்றக்குடி சண்முகநாதர் கோயிலில் மருது பாண்டியர்களின் திருப்பணி நிகழ்ந்தது. 'செம்பொன்மாரி' என்று பெயரிடப்பெற்ற கிராமம் மருதுபாண்டிய மன்னரால் ஆதீன ஆன்மார்த்த வழிபடுமூர்த்தி காளத்தியப்பருக்குக் காணிக்கையாகக் கொடுக்கப் பெற்றது. இதற்குக் காரணமாக இருந்தவர் சங்கரலிங்க முனிவர்."(13) குன்றக்குடித் திருமடத்திலிருந்து பல மாணவர்களுக்குத் தமிழ் அறிவையும், சிவஞானத்தையும் வாரி வழங்கியவர். 'வால சரஸ்வதி' என்ற புகழ் பெற்ற முத்து வேலாயுதக் கவிராயர் இவரது மாணாக்கர் ஆவார்.

முத்து வேலாயுதக் கவிராயர் சங்கரலிங்க முனிவரை 'நாற்கவி விலாசன்' 'மெய்த் தவஞான பூரணன்' 'சைவாகமப் பொக்கிஷம்' என்று தாம் எழுதியுள்ள சீட்டுக் கவியில் குறிப்பிட்டுள்ளார்.

"புனிதமிகு நாற்கவி விலாசன் மெய்த் தவஞான
பூரணன் சைவாகமப்
பொக்கிஷம் தானசங் கரலிங்க முனிவன் திரு
பொற்பதம் தன்னைநிதமும்
போற்றுசெய முத்துவே லா யுதக் கவிராச
புபன் . . . . ."(14)

என்பன அந்தச் சீட்டுக் கவியின் அடிகள்.

‘மயூரகிரிப் புராணம்’ பாடிய வேதாந்த சுப்பிரமணியபிள்ளை இம்முனிவரின் மாணாக்கர்களில் ஒருவராவார். மருதுபோண்டியரின் அவைக்களப் புலவராகத் திகழ்ந்த நாற்பது புலவர்களில் பலர் சங்கரலிங்க முனிவரின் அருமைச் சீடர்கள் ஆவார்கள்.

“சிவகங்கைச் சீமையை ஆண்ட மருதுபாண்டியரால் போற்றி வணங்கப் பெற்ற புனிதர் இவர். மருதுபாண்டியருக்கு உண்டான புலவை நோய் குன்றக்குடி முருகனால் நலமாயிற்று. அவர், முருகனை வழிபடக் குன்றக்குடி வந்தார். அத்திருக்கோயிலைப் போற்றிவரும் சங்கரலிங்க முனிவரைக் கண்டார். அளவிறந்த பொற்காசுகளை முனிவர் திருவடியில் வைத்து வணங்கினார். முனிவர் அதனை ஏற்க மறுத்துவிட்டார்.

மருதுபாண்டியர் அப்பொன்னைக் கொண்டு ஒரு கிராமத்தை ஏற்படுத்திச் ‘செம்பொன்மாரி’ எனப் பெயரிட்டுக் காளத்தியப்பருக்குக் காணிக்கை ஆக்கினர். குன்றக்குடி சண்முகநாதர் திருக்கோயிலுக்குப் பெரிய அளவில் திருப்பணி செய்வித்தார். சாந்துப் புலவரைக் கொண்டு ‘மயூரகிரிக் கோவை’ இயற்றுவித்தார்.”(15) இவர் காலத்தில் சாந்துப்புலவர் ‘மயூரகிரிக் கோவை’ இயற்றியுள்ளார். அந்நூலில் முனிவர் அவர்களைப் பற்றி ‘தன்கை கொடுப்பதைத் தன்மெய் அறியாத நிலையில் கொடுப்பவர் என்றும், கவிஞரோடு கவிஞராக ஒட்டி வாழ்பவர்’ என்றும் பாடியுள்ளதைக் காணலாம்.

“கையன்றி மெய்யறியான் கொடைப்பாலிற் கவிஞர்தம்பால்

மெய்யொன்று சங்கரலிங்கத் தபோநிதி”(16)

எனப் பாராட்டிப் பாடியுள்ளார். இத்தகைய பெருமை சான்ற மாமுனிவர் இருந்த சிறந்த ஆதீனம் குன்றக்குடி ஆதீனமாகும்.

## ஆறுமுகத் தம்பிரான்

இவர் யாழ்ப்பாணத்தில் பிறந்தவர். ஆறுமுகநாவலரிடம் கல்வி கற்றவர். யாழ்ப்பாணத்தில் ஆறுமுகநாவலர் நடத்திய பாடசாலையில் சிலகாலம் ஆசிரியராகவும் இருந்தவர். குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்திற்கு வந்து துறவு பெற்றவர். சென்னையில் நாட்டுப் பிள்ளையார் கோயில் தெருவில் உள்ள ஆதீனக் கிளைமடத்தில் இருந்து பாடஞ் சொன்னவர்.

மகாவித்துவானாக விளங்கிய இவர் பல புலவர்களுக்கு இலக்கிய, இலக்கண, சாத்திரப் பாடங்கள் கற்பித்தார். ஆதீனத் தம்பிரான்களில் பலர் இவரிடம் கல்வி பயின்று சிறப்புற்றார்கள்.

"ஆறுமுகத்தம்பிரான் பெரிய புராணம் முழுவதற்கும் உரை எழுதத் தொடங்கிப் பாதிக்கு மேல் உரை எழுதினார். பெரிய புராணத்தின் தொடக்கத்திலிருந்து ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணத்தின் 234-ஆம் செய்யுள் முடிய உரை எழுதினார். ஏனைய பகுதிகளுக்கு உரை எழுதவில்லை. இவர் எழுதாதுவிட்ட ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணம் 235-ஆம் செய்யுள் தொடங்கிப் பெரிய புராணத்தின் முடிவுவரை சிதம்பரம் ஈசானியமடம் இராமலிங்க சுவாமிகள் உரையெழுதி நிறைவு செய்தார். இவையாவும் நான்கு நூல்களாக வெளிவந்தன. இறுதியாக வெளிவந்தது 1998-இல். முதற்புத்தகம் தவிர மற்ற மூன்று புத்தகங்களும் எமக்குக் கிடைத்தன. எமது நூலகத்தில் உள்ளன"[17] என்று ஊரன் அடிகள் சைவ ஆதீனங்கள் நூலில் குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகிறது.

### அமிர்தலிங்கத்தம்பிரான்

சென்னை மயிலாப்பூர் கிளைமடத்தில் இருந்தவர். 'திருமயிலைத் தலபுராணம்' இயற்றியவர்.

### சரவண சுவாமிகள்

யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர். குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தில் துறவு பெற்று மயிலாப்பூர் கிளைமடத்தில் இருந்து பணியாற்றியவர். இவர் காலத்தில் கிறித்துவர்கள் சென்னைக் கடற்கரைப் பகுதியில் வாழும் மக்களுக்கு மருத்துவம் முதலிய உதவிகள் செய்து தமது சமயக்கருத்தை அவர்களிடையே பரப்பி வந்தனர்.

இதனைக் கண்ட இம்முனிவர் சித்த மருத்துவ முறையில் பல மருந்துகள் செய்து, கடற்கரைவாழ் மக்களுக்கு உதவிசெய்து, நீண்டநேரம் விரிவுரைகளாற்றி மனத்தில் சைவசமயக் கருத்துக்களைப் பதிய வைத்துள்ளார். இதனை நேரில் கேட்டு அனுபவித்த யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்கள் இப்பெரியாருக்குச் 'சபாப்பிரசங்க சிங்கம்' என்னும் பட்டத்தை வழங்கியுள்ளார். மேலும் நாவலர் அவர்கள் இவரை 'சிவசாத்திர பண்டிதர்' எனவும் குறிப்பிட்டுள்ளார்.

உ.வே.சா அவர்கள் முதன்முதலில் சென்னைக்குச் சென்று தமிழ் இலக்கிய ஏடுகள் தேட முயன்றபோது தமது தள்ளாத 70 வயதிலும் அவர்களுடன் சென்று ஏடு இருக்கும் இடங்களையெல்லாம் காட்டி, அவைகளைப் பெறும் முறைகளையும் கூறி உதவினார். இந்த உதவியை உ.வே.சா அவர்கள் தாம் எழுதிய 'என் சரித்திரம்' என்ற நூலில் பாராட்டி உள்ளார்.

## குமாரசுவாமி

இப்பெரியவர் ஆதீனக் குருமுதல்வரைப் போற்றி ஞானவந்தாதி, தெய்வசிகாமணி, நான்மணிமாலை, சிற்குருமாலை ஆகிய பாமாலைகள் பாடியுள்ளார். 39-ஆம் பட்டம் ஆறுமுகதேசிக குருமூர்த்தி தெய்வசிகாமணி, நான்மணிமாலை, ஞானவந்தாதிப் பதிப்புக்கு வழங்கி சிறப்புப் பாயிரத்தில் அருள்திரு குமாரசுவாமி முனிவர் பற்றி,

"மல்லாரும் மதில்புடைசூழ் திருவண்ணா
மலையில் அருள் வடிவொன் றேந்தி
நல்லார்கள் தொழப்பொலியும் தெய்வசிகா
மணிக்குரவர் நாதன் தாளில்
மனம், மொழி, மெய் அவனடிக்கே உறுத்திஅருள்
ஒருங்குபெற்ற வரதன், சைவத்
தனம்எனும்சித்தாந்தகலை தெளிந்து நிட்டை
கைவந்த தகையன், ஓட்டிற்
கனமுறுபொன் னும்கருதும் துறவிவினன்ஆ
ரியனை அன்றிக் கனவி னும்வே(று)
உ(ன்)னமருவா உளக்குமர சாமிமுனி வரன்"(18)

என்று பாடியிருப்பது இம்முனிவர் பெருமானின் பெருமைக்குச் சான்றாக விளங்குகிறது.

### சபாபதி முனிவர்

இவர் மேகம் போன்று கைமாறு கருதாத கொடைவள்ளல். இதனைச் சிலேடைப்புல் வேம்பத்தூர் பிச்சு ஐயர் தாம் இயற்றிய சண்முகநாத உலாவில்,

". . . . . . நன்னமதிகழ்

கார்பார்என்றேபெருமை கைக்கொடை காட்டுஞ்சிறந்த

கார்பார்என்றே புலவர் கண்டுரைக்கும் சீர்போர்த்த

நன்மை திகழும் சபாபதி மாமுனி"(19)

என்று பாராட்டியுள்ளார்.

இவருடைய பணியால் ஆதீனத் திருமடம் ஒளிபெற்று விளங்கியது. இப்பொழுது உள்ள திருமடத்துக் கட்டடங்கள் முழுவதும் இம்முனிவரால் கட்டப்பெற்றவை. இதனைக் குன்றக்குடிக்குறவஞ்சி ஆசிரியர்,

"ஆழிசூ முலகின் மீ தார்குன்றை நகரினும்
ஊழிதோறும் அழிவிலா தோங்குபுகழ் புண்யநின
நிற்கட்டு மென்றே நினைத்தல்செய் தெழில்குலவு
கற்கட்டு மடமும் கவின்தரப் பிரதிட்டை
செய்சபா பதிமுனி"(20)

என்று பாடியிருப்பதைக் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன வரலாற்று நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் நெற்களஞ்சியங்கள் பல நிறுவினார். கும்பகோணத்திற்கருகில் நன்செய் நிலங்கள் வாங்கி நல்ல முறையில் வேளாண்மை நிகழ வழி செய்துள்ளார். உழைப்பையே தவமாகக்

கொண்டு ஆதீனத்தின் நிலையைப் பல்லாற்றானும் உயர்த்திய பெருமையுடைய இம்மாமுனிவரின் திருவுருவம் இவர்களது சொந்தப் பொறுப்பில் கட்டியருளிய ஆதீன முன்மண்டபத்தின் மேற்குப் பக்கத்துத் தூணில் புடைப்புச் சிற்பமாக உள்ளது.

## இராமலிங்கத் தம்பிரான்

இப்பெரியார், திருமடத்தின் வளர்ச்சிக்காக அல்லும் பகலும் உழைத்தவர். பிரான்மலைப் பகுதியில் மாணிக்கவல்லி, அபிராமவல்லி, சுவர்ணவல்லி, அமிர்தவல்லி, மரகதவல்லி என்னும் ஐந்து தோப்புக்களை உண்டாக்கியுள்ளார். இவர் தமது சொந்தப் பொறுப்பில் வயல்கள் வாங்கி ஆதீனத்திற்குத் தந்துள்ளார். காசுமீர், நேபாளம் முதலிய பகுதிகளுக்குச் சென்று அங்குத் தேடிய பொருள்களைக் கொண்டு ஆதீனத்திற்குச் சொந்தமான திருக்கோளக்குடி, பள்ளப்பட்டி ஆகிய இடங்களில் கி.பி.1898-இல் கட்டளை மடம் கட்டியுள்ளார்.

இவர் மதுரை ஆதீனத்தில் அப்பொழுது அருளாட்சி புரிந்து வந்த குருமகா சந்நிதானம் அவர்களைக் கொண்டு "திருக்கோளக்குடி தலபுராணம்" இயற்றிவித்துள்ளார்.

## வேலாயுதத் தம்பிரான்

இவர் சிறந்த புலமை படைத்தவர். 'பரதேசி முத்திரை' என்ற மரியாதையைப் பெற்றவர். இவர் காலத்தில் வறட்சி நிலவிய பொழுது மழை வேண்டிப் பாடல் பாடியதாகவும், அப்பாடலைக் கேட்டு மழை பெய்ததாகவும் கூறப்பட்டுள்ளது. இதனை,

"தருணம் இதுவாகும் தான்மாரி பெய்யக்
கருணைசெய் யாதிருக்க லாமார வருணனிடம்
நீருரைத்துப் பொய் சொல்லா மெய்யரே இந்நிமிடம்
மாரி பெய்யச் செய்வீர் வரம்"[21]

என்ற பாடலால் அறியமுடியும்.

## தியாகராசத் தம்பிரான்

இவர் திருமடத்திற்கு வேண்டும் திருநீற்றைத் தயாரித்து உதவியவர். இந்த ஆதீனத்தைச் சேர்ந்த பாணலிங்கங்கள் பலவற்றைச் சேகரித்தவரும், பாதுகாத்தவரும் இவரே ஆவர். இவர் ஆதீனத்திற்கு வாங்கித்தந்த வயல் 'தியாகராச வயல்' எனப் பெயர் பெறும் என்று குன்றக்குடி குறவஞ்சியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## கையாசத் தம்பிரான்

ஆதீனத்தின் கும்பகோணம் கிளை மடத்தில் கட்டளைத் தம்பிரானாக நீண்ட காலம் பணியாற்றியவர். கும்பகோணத்தில் இருந்த சொத்துக்கள் அபகரிக்கப்படாது செய்த பெருமை இவரையே சாரும்.

## ஆதீனப் புலவர்கள்

வெண்பாப்புலிக் கவிராயர், வீரபத்திரக் கவிராயர், கணேச பண்டிதர் முதலாயினோர் ஆதீனப் புலவர்களாகயிருந்து அணி செய்துள்ளனர். சாந்துப்புலவர், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர், மகாவித்துவான் வேம்பத்தூர் பிச்சு அய்யர் முதலிய பெரும்புலவர்கள் பலர் ஆதீனத்தால் பாராட்டப் பெற்றுள்ளனர்.

## ஆதீனமரபு விளக்கம்

திருமடத்தை அணுகிய அடியவர் முதலில் 'பூப்பிள்ளை' என அழைக்கப் பெறுவார். அவர் ஓரிரண்டு ஆண்டுகள் மடாலயத்தில் பல பணிகள் செய்து 'தவசிப்பிள்ளை' என ஆவார்.

அவர்களுள் இல்லற நெறி நிற்போர் ஆதீனத்தின் ஆதரவாளராகவும், சீடர்களாகவும் இருந்து பணி செய்வார்கள். துறவு நெறி நிற்போர் துவராடை வழங்கப் பெற்றுக் 'குட்டி' என்றழைக்கப் பெறுவார். 'குட்டி' அனுபவம் பெற, நாடுகள் சுற்றி யாத்திரை சென்றுவந்து, பின் குருமூர்த்திகளின் அருளாசி பெற்று வெளியிற் செல்வார்.

நாடுகள் சுற்றியும் தவத்தால் தம்மை உயர்த்திக் கொண்டும் உலகவர்தம் உடற்பிணியும் அறியாமைப் பிணியும் நீக்கும் தொண்டுகளில் ஈடுபட்டும் சைவசித்தாந்தச் செந்நெறி பரப்பியும் ஆதீனக்குருமூர்த்தியின் அருட் புகழ் பரப்பியும் பாத காணிக்கைகள் பெற்று, பெற்ற பொருளைத் தமதென எண்ணாமல் மடாலயம் வந்து குருமூர்த்திக்குக் காணிக்கையாக்கி 'பரதேசி முத்திரை' என்ற மரியாதையைப் பெறுவார்.

அத்தகு மரியாதை பெற்றவர். அந்தப் பெருமையில் மயங்காமல் தம்பிரான் அடியவராய்ச் சிலநாள் திகழ்வார். அதன்பின் 'தம்பிரானாவார்'. பிறகு 'பெரிய பூசைத் தம்பிரானாவார்'. சிவபூசை செய்யும் பேற்றினால் ஆணவம் ஒடுங்கி குருமூர்த்தி திருவடியில் தன்மனம் ஒடுங்கும் நிலை பெற்றோர் 'ஒடுங்கத் தம்பிரா'னாவார். குருமூர்த்தி சார்பினால் குருமூர்த்திக்குரிய அடையாளம் யாவும் தன்னளவில் தோன்றும் சிறப்புடையார் சின்னப்பட்டம் என்னும் சிறப்புடையராவார். அதன்பின் குருமூர்த்திகளாவார்.

## இரண்டாம் அருணாசல தேசிகர் 45-ஆம் மகாசந்நிதானம் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

1949-இல் இவ்வாதீனத்தின் சின்னப்பட்டமாகி 1952-இல் மகாசந்நிதானமாக எழுந்தருளினார். இவர் தமிழகத்தின் தலைசிறந்த சொற்பொழிவாளர்களுள் ஒருவர், இவர் எப்பொருள் பற்றியும் ஏற்றமுறப் பேசும் திறனுடையவர், இவர் 50க்கும் மேற்பட்ட நூற்களைப் படைத்துள்ளார்.

தத்துவச் சிந்தனையாளர்• சமுதாயச் சிற்பி· இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, தாய்லாந்து, இந்தோசீனா, சோவியத்து ஒன்றியம், சப்பான், கொரியா, ஆங்காங்கு, செஞ்சீனா முதலிய நாடுகளுக்குச் சென்று தமிழ்நெறி பரப்பி வந்த தகைமையாளர். சமயநெறியின் மூலமாகச் சமநிலைச் சமுதாயம் அமைக்க முடியும் என்று நம்பிக்கையும் விருப்பார்வமும் கொண்டவர்.

1952-இல் அருள்நெறித் திருக்கூட்டம் என்னும் முற்போக்கான சமய இயக்கத்தைத் தொடங்கினார். இது நாடு தழுவிய இயக்கமாயிற்று. இதன் வழித் திருக்கோயில்களில் தமிழ்மொழி அருச்சனை நடைபெறச் செய்தார். தீண்டாமையும், சாதி வேற்றுமையும் நீங்க இந்த இயக்கம் தொடர்ந்து பணி செய்து வருகிறது.

பின்னர் 1955-இல் அருள்நெறி திருப்பணி மன்றம் தோற்றுவித்தார். இவ்வமைப்பின் மூலம் மூன்று தொடக்கப் பள்ளிகள், நான்கு நடுநிலைப் பள்ளிகள், மூன்று உயர்நிலைப் பள்ளிகள், மூன்று மேல்நிலைப் பள்ளிகள் என மொத்தம் 13 பள்ளிகளும், கல்லூரி ஒன்றும் (திருவள்ளுவர் கல்லூரி, பாவநாசம், நெல்லை மாவட்டம்) நன்முறையில் இயங்கி வருகின்றன.

இந்திய அரசின் சமூக நலக்குழு உறுப்பினராக இருந்து (1960) பணியாற்றியுள்ளார்.

திருப்புத்தூர்த் தமிழ்ச்சங்கத்தை 1967-இல் திருப்புத்தூரில் அமைத்தார். தமிழகத் திருமடங்களின் தலைவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட தமிழ்நாடு 'தெய்விகப் பேரவையின்' தலைவராக (1969-1976) அமர்ந்து அரும்பணியாற்றினார். தமிழ்நாடு சட்ட மேலவை உறுப்பினராக (1969-1976) இருந்து சிறந்த பணி செய்தார்.

திருக்குறள் நெறியை மக்களிடையே பரப்பும் வகையில் 'திருக்குறள் பேரவை' இயக்கத்தை 1973-இல் தொடங்கி நாடு தழுவிய அளவில் நடத்தி வந்தார். இவர்தம் திருக்குறள் பணியினைப் பாராட்டித் தமிழ்நாடு அரசு 1986-இல் இவருக்குத் 'திருவள்ளுவர் விருது' வழங்கியது.

1977-இல் குன்றக்குடி கிராமத் திட்டக்குழு அமைத்துச் சிற்றூர் மக்களின் வறுமை நீக்கும் பணியை மேற்கொண்டார். இந்தக் கிராமத் திட்டப்பணியைப் பாராட்டி அன்றைய பாரதப் பிரதமர் திருமதி.இந்திராகாந்தி அவர்கள் குன்றக்குடியை இந்தியாவின் 'மாதிரிக் கிராமம்' என அறிவித்துப் பெருமைப்படுத்தியுள்ளார். இப்போது பிற மாவட்டங்களிலும் இம்முறையைச் செயற்படுத்தி வருகின்றனர்.

குமரி மாவட்டம், மண்டைக்காட்டில் 1982-இல் நிகழ்ந்த மதக்கலவரத்தில் தம் உயிருக்கும் அஞ்சாது மேற்கொண்ட அமைதிப் பணி வரலாற்றுப் புகழ் வாய்ந்தது. இராமநாதபுரம் இனக்கலவரம் (1981), புளியங்குடி இனக்கலவரம் (1982) முதலியவற்றில் மேற்கொண்ட இவரது

அமைதிப்பணிகள் மக்களிடையே நல்லுணர்வையும், பெரும்பயனையும் தோற்றுவித்தன.

இவ்வமைதிப் பணிகளை மேற்கொண்டபோது, கிடைத்த பட்டறிவினால் ‘திருவருட் பேரவை’ என்ற அமைப்பை 1982-இல் தோற்றுவித்தார். நாட்டில் நிலவும் எல்லாச் சமயங்களையும் சார்ந்த மதிப்புமிக்க உறுப்பினர்களைக் கொண்டது திருவருட் பேரவை. இந்த அமைப்புத் தமிழகத்தின் பெருநகரங்கள் பலவற்றில் அமைந்துள்ளது.

தீண்டாமை ஒழிப்பு, சாதி வேறுபாடற்ற, வறுமையற்ற சமுதாய அமைப்பு, தமிழ் வளர்ச்சி, தாய்மொழி அருச்சனை, பெண்கள் முன்னேற்றம், எல்லோருக்கும் கல்வி, சிற்றூர் மக்களிடையே அறிவியல் வளர்ச்சி, சமயங்களிடையே இணக்கம், மனிதகுல ஒருமைப்பாடு முதலிய பல்வேறு நிலைகளில் இவராற்றியுள்ள பணிகள் கணக்கில் அடங்கா- விரிப்பின் பெருகும்.

திருப்புத்தூரில் திருமுறை விழாவும், பிரான்மலை (பறம்புமலை)யில் வள்ளல் பாரி விழாவும் நடத்தி வந்தார். இவ்விழாக்களிலும், ஆதீனம் எடுக்கும் பிற விழாக்களிலும் இவரால் பாராட்டிச் சிறப்பிக்கப் பெற்ற புலவர்கள், அறிஞர்கள், கலைஞர்கள், பெருமக்கள், நூற்றுக்கணக்கானவர் ஆவார்கள்.

திருக்கோயில்களின் சொத்துக்கள் பலவற்றை இவர் மீட்டியுள்ளார். சொத்துக்களின் வருவாயைப் பெருக்கியுள்ளார். குன்றக்குடி சண்முகநாதர் கோயிலைப் புதுப்பித்து 1979-இல் திருக்குட நீராட்டு விழா நடத்தினார்; குன்றக்குடி மருதாபுரிக் குளத்தைத் தூய்மைப்படுத்தினார்.

தேனாட்சியம்மன் கோயிலைப் புதுப்பித்து 1988-இல் திருக்குட நீராட்டு நடத்தினார்.

திருப்புத்தூர், பிரான்மலைக் கோயில்கள் அனைத்தும் பேணப் பெற்றுத் தூய்மைப் பொலிவுடன் விளங்குகின்றன. அவைகளில் நாள் வழிபாடுகளும், திருவிழாக்களும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. இவ்வாறு தவத்திரு அடிகளார் அவர்கள் எண்ணற்ற சமய, சமுதாய, இலக்கியப் பணிகள் புரிந்து வந்ததைப் பல நூல்களிலும், நேரிலும் காண முடிகிறது.

## குன்றக்குடி ஆதீனக் கோயில்கள்

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்திற்குச் சொந்தமாக அதன் ஆட்சியில் ஐந்து கோயில்கள் உள்ளன. பிரான்மலை வகையறா ஐந்து கோயில் தேவஸ்தானம் என்பது பொதுவான பெயர். இவ்வைந்து கோயில்களுக்கும் குன்றக்குடி ஆதீனகர்த்தர்கள் பரம்பரை அறங்காவலர்கள் ஆவர். அவை,

1. பிரான்மலை - கொடுங்குன்றநாதர் கோயில்
2. திருப்புத்தூர் - திருத்தளிநாதர் கோயில்
3. திருக்கோளக்குடி - சுகோளபுரீசுவரர் கோயில்
4. தேனாட்சியம்மன் - தேனாட்சியம்மன் கோயில்
5. குன்றக்குடி - சண்முகநாதர் கோயில்

என்பனவாகும்.

"பாண்டிய நாட்டில் பாடல்பெற்ற தளங்கள் 14-இல் இரண்டு குன்றக்குடிக்கு உரியவை. ஒன்று திருக்கொடுங்குன்றம், மற்றொன்று திருப்புத்தூர். திருப்புகழ் பாடப்பெற்ற முருகத் தலங்களில் குன்றக்குடியும் ஒன்று. இது குன்றக்குடி ஆதீனத்திற்குரியது. இம்மூன்று தவிர ஏனைய இரண்டு கோயில்கள் உள்ளூர் கிராமக் கோயில்கள் என்று சொல்லத்தக்கவை"[22] என்பர்.

## திருக்கோயில் பாதுகாப்பு

"இந்தத் திருக்கோயில்கள் அனைத்தும் பழமையானவை. முற்றுப்பெறாத திருப்பணியுடைய திருக்கோயில்களுமாகும். இவற்றுள் மூன்று திருக்கோயில்கள் மலைமீது அமைந்துள்ளன. அப்பரடிகளின் உழவாரத் திருத்தொண்டு தவத்திரு அடிகளார் அவர்களின் திருவுள்ளம் கவர்ந்த திருத்தொண்டாகும்.

ஒவ்வொரு திருக்கோயிலிலும் உழவாரப் பணியாளர்களை நியமித்துத் திருக்கோயிலில் உழவாரப்பணி செய்துவித்திருக்கிறார். ஒவ்வொரு மாதமும் வரும் சதய நாளில் உழவாரப்பணி அறிக்கை தருவித்து, உடனுக்குடன் செய்ய வேண்டிய பணிகளைச் செய்யத் தூண்டியிருக்கிறார்கள்.

மாதச் சதயநாளில் சுழற்சி முறையில் திருக்கோயில்களுக்குச் சென்று உழவாரப் பணியாளர்களுடன் தாமும் இணைந்து பணி செய்வார். இதனால் திருக்கோயில்கள் நன்கு பாதுகாக்கப் பெற்றதோடு எப்போதும் தூய்மைப் பொலிவுடன் திகழ்கின்றன"[23] என்பர்.

## திருமடத்திற்குத் தலைவர்கள் வருகை

தவத்திரு அடிகளார் அவர்களின் காலத்தில் திருமடத்திற்குப் பல தலைவர்கள் வந்து சென்றுள்ளனர். கட்சி வேறுபாடற்று பொதுத்தன்மையுடன் எல்லாக் கட்சித் தலைவர்களும் அடிகளார் பால் அன்பும் மதிப்பும் கொண்டு, குன்றக்குடி ஆதீனத்திற்கு வருகை தந்துள்ளார்கள். அவர்களுள் அண்ணாத்துரை (1956,1962), ஆச்சாரிய வினோபாபாவே(1956), இராசாசி (1957), பெரியார் ஈ.வே.ரா (பலமுறை) திரு.நம்பூதிரிபாட், திரு.பி.இராமூர்த்தி, திரு.ப.ஜீவானந்தம், பாவேந்தர் பாரதிதாசன், திரு.ப.கக்கன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். மற்றும் பல தலைவர்கள் கட்சி வேறுபாடின்றி வருகை தந்திருக்கிறார்கள்.

## தொகுப்புரை

இம்மடம் தோன்றக் காரணங்கள் சைவத் தொண்டும், மக்கள் பணியுமாகும். ஆதீனக் குருமுதல்வர் தெய்வசிகாமணி அவர்கள் கனவில் காளத்திநாதர் தோன்றி அருளாசி வழங்கியதன் வழி இம்மடம் தோற்றம் பெற்றுள்ளது.

காளத்தியிலிருந்து திருவண்ணாமலையிலும் அங்கிருந்து பிரான்மலைக்கும் பிறகு குன்றக்குடிக்குமெனப் புலம்பெயர்ந்து குன்றக்குடியில் இம்மடத்தை நிறுவியுள்ளார்.

இதுவரை 46 பட்டங்கள் இம்மடத்தின் வழி எழுந்தருளியுள்ளனர். இவர்கள் ஐந்து கோயில்களுக்குப் பரம்பரை அறங்காவலர்களாகவும் இருந்து வந்துள்ளனர்.

தமிழ்ப்புலவர்கள் பலரை ஆதரித்தும், சைவநூல்கள் மற்றும் பல நூல்கள் பலவற்றை உருவாக்கியும், உரைநூல்கள் படைத்தும் இம்மடத்தைச் சார்ந்த அருளாளர்கள் தமிழ்த் தொண்டு புரிந்துள்ளனர்.

தமிழையும் சிவத்தையும் ஆதரித்த மன்னர்களையும், மக்களையும் இம்மடம் போற்றியுள்ளது.

சிவகங்கைச் சீமையை ஆட்சி செய்த மருதுபாண்டியர்கள் இம்மடத்தைச் சார்ந்த அருள்மிகு சண்முகநாதர் திருக்கோயிலுக்குத் திருப்பணிச் செய்துள்ளனர்.

யாழ்ப்பாணத்து ஆறுமுகநாவலர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, உ.வே.சாமிநாதையர், வேம்பத்தூர் பிச்சு அய்யர் போன்றோர் இம்மடத்திற்கு வந்த குறிப்பிடத்தக்கத் தமிழ்ச் சான்றோர்களாவர்.

பெரியபுராணத்திற்கு உரை எழுதியது, ஞானவந்தாதி, நான்மணிமாலை போன்ற நூல்களை வெளியிட்டது குறிப்பிடத்தக்க இலக்கியப் பணிகளாகும்.

இத்திருமடம் மேலும் சைவ சமய நூல்கள் பலவற்றிற்கும் புலவர் பெருமக்களைக் கொண்டு உரையெழுதி வெளியிட்டுள்ளனர்.

ஆதீனத்தில் தொண்டு செய்ய விரும்புகின்றவர்கள் திருமண நெறி நின்றால் ஆதரவாளராக இருக்கலாம். துறவு நெறி நிற்போர் துவராடை அணிந்து பல படி நிலைகளைக் கடந்து அடிகளாராக ஆவர்.

இத்திருமடத்தின் அடியார்கள் நாட்டின் பல பகுதிகளில் நிகழ்ந்த சாதி, மதக் கலவரங்களைத் தடுத்து நிறுத்தி நாட்டில் அமைதி நிலவச் செய்துள்ளனர்.

தமிழ் மொழிவளர்ச்சிக்கும்,சமுதாய மேம்பாட்டிற்கும் இத்திருமடம் ஆற்றியுள்ள பணிகள் தாராளமானவை.

இம்மடத்தின் நிருவாகத்தில் ஐந்து திருக்கோயில்கள் உள்ளன. பாண்டிய நாட்டுப் பாடல் பெற்ற சிவத்தலங்களில் இரண்டு குன்றக்குடி மடதீதின் நிருவாகத்தில் இருப்பது தனிச் சிறப்பாகும்.

அருணகிரிநாதரால் திருப்புகழ் பாடப்பெற்ற தலங்களில் குன்றக்குடியும் ஒன்று.

இம்மடத்தின் தோற்றக் காரணங்கள் சைவத் தொண்டும், மக்கள் பணியுமாகும். ஆதீனக் குருமுதல்வர் தெய்வசிகாமணி அவர்கள் கனவில் காளத்திநாதர் தோன்றி அருளாசி வழங்கியதன் வழி இன்றைக்கு (755 ஆண்டுகளுக்கு முன் 1250 காயில்) இம்மடம் தோற்றம் பெற்றுள்ளது.

காளத்தியிலிருந்து திருவண்ணாமலையிலும் அங்கிருந்து பிரான்மலைக்கும் பிறகு குன்றக்குடிக்குமென சிலர் புலம்பெயர்ந்து குன்றக்குடியில் இம்மடத்தை நிறுவியுள்ளார்.

இதுவரை 46 பட்டங்கள் இம்மடத்தின் வழி எழுந்தருளியுள்ளனர். இவர்கள் ஐந்து கோயில்களுக்குப் பரம்பரை அறங்காவலர்களாகவும் இருந்து வந்துள்ளனர்.

தமிழ்ப்புலவர்கள் பலரை ஆதரித்தும் சைவநூல்கள் மற்றும் பல நூல்கள் பலவற்றை உருவாக்கியும் உரைநூல்கள் படைத்தும் இம்மடத்தைச் சாந்த அருளார்கள் தமிழ்த்தொண்டு புரிந்துள்ளனர்.

தமிழையும், சிவத்தையும் ஆதரித்த மன்னர்களையும், மக்களையும் இம்மடம் போற்றியுள்ளது.

# மேற்கோள் விளக்கம்

1. தருமையாதீனம், சைவசமயம் - தொடக்கவுரை,

2. முத்துராமன், சைவசித்தாந்தம், ப.154.

3. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதானசிந்தாமணி, ப.747.

4. மேலது, ப.1609.

5. க. கதிரேசன், அருள்திரு குமாரசுவாமி தம்பிரான், ஸ்ரீதெய்வசிகாமணி நான்மணிமாலை குறிப்புரை, ப. பதிப்புரை

6. மரு.பரமகுரு, திருவண்ணாமலை ஆதீன வரலாறு, ப.1

7. மேலது, ப.7

8. மேலது, ப.9.

9. சன்மார்க்க தேசிகன் ஊரன் அடிகள், சைவ ஆதீனங்கள், ப.464.

10. மேலது, ப.464.

11. சிலேடைப்புலி வேம்பத்தூர் பிச்சு ஐயர், சண்முகநாதர் உலா, கண்ணி, 172-175.

12. மரு.பரமகுரு, திருவண்ணாமலை ஆதீன வரலாறு, ப.20.

13. சன்மார்க்க தேசிகன் ஊரன் அடிகள், சைவ ஆதீனங்கள், ப.469.

14. மரு.பரமகுரு, திருவண்ணாமலை ஆதீன வரலாறு, ப.28.

15. மரு.பரமகுரு (க.ஆ) வாழ்வியல் களஞ்சியம், தொகுதி பத்து.623,624.

16. மரு.பரமகுரு, திருவண்ணாமலை ஆதீன வரலாறு, ப.28.

17. சன்மார்க்க தேசிகன் ஊரன் அடிகள், சைவ ஆதீனங்கள், ப.470.

18. ஆறுமுகதேசிக குருமூர்த்தி, குமாரசுவாமி முனிவரின் நான்மணிமாலை, ஞானவந்தாதி, ப.21.

19. சிலேடைப்புலி வேம்பத்தூர் பிச்சு ஐயர், சண்முகநாதர் உலா, கண்ணி, 172-175.

20. மரு.பரமகுரு, குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன வரலாறு, ப.32.

21. மேலது, ப.33.

22. சன்மார்க்க தேசிகன் ஊரன் அடிகள், சைவ ஆதீனங்கள், ப.474.

23. மரு.பரமகுரு, குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன வரலாறு, ப.52.

# இயல் - 2

## சமயம் - விளக்கம்

மனித மனத்தைப் பக்குவப்படுத்துவதும், மனிதனைத் தெய்வ நிலைக்கு உயர்த்துவதும் சமயமாகும். சமயம் சடங்குமுறையோ அல்லது வழிபாட்டு விதிகள் அடங்கிய அமைப்போ அன்று; அது வாழ்க்கைக்கு வழிகாட்டும் நெறிகள் அடங்கிய கருவூலம். உயிர்களில் மனிதனுக்கு மட்டுமே சமயம் என்ற பண்பாடு உண்டு. சமயம் மனிதனுக்கு ஒரு வாழ்வியல் கலை. அது வாழ்வாங்கு வாழக் கற்றுத் தருகின்றது. நம்பிக்கையின் பாற்பட்டது; நல்லறிவின் பாற்பட்டது; மனிதனின் விலங்குணர்வை அகற்றி, நல்லுணர்வை வளர்த்துத் தெய்வக்குணத்துக்கு உயர்த்துகின்றது. இத்தகைய ஆற்றல் வாய்ந்த சமயங்கள் பலவாகும். அவற்றுள் சுத்த சைவமும் அடங்கும். சுத்த சைவ ஆதினங்களில் ஒன்று குன்றக்குடி திருவண்ணாமலை ஆதினம். இவ்வாதீனம் செய்த சமயப் பணியை விளக்கிக் கூறுவதே இவ்வியலின் நோக்கமாகும்.

## சமய வகைகள்

உலகில் எண்ணற்ற சமயங்கள் உள்ளன. அச்சமயங்களின் கொள்கைகளும் பலவாகும்.

"அரிய சமயம் ஒரு கோடி
அமரர் சரணர் சதகோடி
அரியும் அயனும் ஒரு கோடி
அறிய அறியாத அடிகள் அறிய அடியேனும்
அறிவுள் அறியும் அறவுற அருள்வாயே!"

என்று அருணகிரிநாதர் அருளியுள்ளார்.

சமயங்கள் பலகோடி என ஆன்றோர்கள் கூறியிருந்தாலும், இன்று நடைமுறையில் மக்களால் பின்பற்றப்படுவது போற்றிக் காக்கப்படுவது இந்து, இசுலாம், கிறித்துவம், பௌத்தம், ஜைனம் முதலிய சிலவாகும்.

வேதத்தை வேராகக் கொண்ட இந்து மதம் ஆறு சமயங்களாகப் பிரிந்துள்ளது. அவை முறையே சாக்தம், காணாபத்யம், கௌமாரம், சைவம், வைணவம், போன்றவைகளாகும்.

தொன்மையும், மேன்மையும் உடையதாகவும், ஆழ்ந்தகன்ற அன்பு நெறியைக் கொண்டதாகவும், உலகப் பொது நோக்கினை உடையதாய் விளங்குவது சைவ சமயம். இதனை,

“தென்னாடுடைய சிவனே போற்றி

எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி”

எனத் தேவாரம் கூறுகிறது.

**சுத்தசைவம் - விளக்கம்**

‘சுத்த சைவம்’ என்பது சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டது; ‘அவரே முடிந்த முடிபு’ என்ற கொள்கை வழிப்பட்டது. இக்கொள்கையைப் பின்பற்றி சைவசித்தாந்த கருத்துக்களைப் பரப்பும் பணி உடையவர்களைச் சுத்த சைவர் என்பர்.

சைவசமயம் இந்தியாவின் ஆதிகுடிகள் எனப்படும் திராவிடர்கள் காலத்திலேயும், அவர்கள் காலத்திற்கு முன்னேயும் இருந்தது என்று ஜி.யு.போப் ஐயர், சர் ஜான் மார்ஷல் போன்ற மேல்நாட்டுப் பிற சமய அறிஞர்கள் ஒப்புக் கொண்டிருக்கின்றனர்.

அத்தகைய பழமை வாய்ந்த சைவ சமயத்தைப் பெரும்பான்மையோர் பின்பற்றி வந்தனர். சைவ சமயக் கருத்துக்கள், ஞான அடியார்கள், மடாதிபதிகள் போன்ற அடியார்கள், சைவப் பற்றுடையோர் போன்றோரால் பரப்பப்பட்டுள்ளன. இவர்களில் சைவப் பயிர் வளர்த்ததில் பெரும்பங்கு வகிப்பவர்கள் மடத்தின் அடியார்களே ஆவர்.

### மடங்கள் விளக்கம்

“சைவ மடங்கள் 18 என்று காளமேகப் புலவர் பாடிய திருவானைக்கா உலாவில்தான் குறிப்பிடப் பெறுகிறது. பின்பு திருக்காளத்திநாதர் உலா, திருப்பூவண நாதர் உலா ஆகிய உலா நூல்களிலும் சைவ மடங்கள் பதினெட்டு என்று கூறப்பெற்றுள்ளது.”(1) ‘மடங்கள்’ என்ற பெயர் பழைய வழக்கு ‘ஆதினம்’ என்று கூறும் வழக்கம் பிற்காலத்தில் ஏற்பட்டதாகும். 1910-இல் வெளிவந்த அபிதான சிந்தாமணியில் ‘சுத்த சைவ பதிணென் ஆதினங்கள்’ என்ற பெயர்ப்பட்டியல் கூறப்பட்டுள்ளது.

### சமயப்பணி

சமயப்பணியைக் குடமுழுக்கு, இலக்கியம், உழவாரம், வேதம் ஓதல், விழாக்கள் எடுத்தல், வேதாகமங்களைப் பரப்புதல், இயக்கப்பணி என பல வழிகளில் ஆதீனங்கள் ஆற்றி வருகின்றன.

### குன்றக்குடி ஆதீன ஐந்து கோவில்கள்

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்திற்குச் சொந்தமாக அதன் நிர்வாகத்தில் ஐந்து கோவில்கள் உள்ளன. ‘பிரான்மலை வகையறா

ஐந்து கோயில்கள் தேவஸ்தானம்' என்பது பொதுவான பெயர். இவ்வைந்து கோயில்களுக்கும் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனக் கர்த்தர்கள் பரம்பரை அறங்காவலர்களாக இருந்து வருகிறார்கள். அவை,

1. பிரான்மலை - கொடுங்குன்றநாதர் திருக்கோயில்
2. திருப்புத்தூர் - திருத்தளிநாதர் திருக்கோயில்
3. திருக்கோளக்குடி - ககோளபுரீச்சுரர் திருக்கோயில்
4. தேனாட்சியம்மன் கோயில் - தேனாட்சியம்மன் திருக்கோயில்
5. குன்றக்குடி - சண்முகநாதப் பெருமான் திருக்கோயில்

'கோயிலைத் தழுவிய குடிகள், குடிகளைத் தழுவிய கோயில்' என்பது தவத்திரு அடிகளார் அவர்களின் அருள் முழக்கம். அடிகளார் காலத்திற்கு முன்பு கோவில் பணி எளிய முறையில் நடைபெற்றுள்ளது. அடிகளார் அவர்கள் காலத்தில் ஆதீனக் கோவில்கள் நன்கு பராமரிக்கப்பட்டுள்ளன. குடமுழுக்குச் செய்யப்பட்டு மின்வசதிகள் ஏற்படுத்தப்பட்டு கோவில் பணிகள் சிறப்புற நடைபெற்றுள்ளதை அறிய முடிகிறது.

### பிரான்மலைத் திருக்கோயில்கள்

“சங்க காலத்தில் பாரிவள்ளல் ஆண்ட பறம்புமலை, சமயகுரவர் காலத்தில் திருக்கொடுங்குன்றமாகித் தற்பொழுது மக்களின் பேச்சு வழக்கில் பிரான்மலை ஆகிவிட்டது. வள்ளல் பாரி ஆண்ட பறம்புமலைப் பகுதியைக் குன்றக்குடி அடிகளார் ஆள்கிறார் என்பர்.

பறம்புமலையில் (பிரான்மலையில்) மூன்று கோயில்கள் உள்ளன. ஊரை ஒட்டி மலையின் அடிவாரச் சரிவில் 30 ஏக்கர் பரப்பளவில் கொடுங்குன்றநாதர் திருக்கோயில். மலையின் இடைப்பகுதியில் பைரவநாத சுவாமி திருக்கோயில், உச்சிப்பகுதியில் மங்கை பாக சுவாமி திருக்கோயில்.

கீழ்க்கோயில் - அடிவாரக்கோயில் - பாதாளம் நடுப்பகுதிக் கோயில் - பூமி, மேற்கோயில் உச்சிக்கோயில் - கயிலாயம், மேற்கோவிலாகிய மங்கைபாகர் கோயில் குடவரைக்கோயில்"[2] என்று கூறப்பட்டுள்ளது.

இக்கோயில்களில் தினப்பூசைகளும், சிறப்புப் பூசைகளும், ஆதீனக் கர்த்தர்களால் நடத்தப்பட்டு வருகின்றன. கோவிலில் உள்ள விக்கிரகங்களுக்குத் தங்க, வெள்ளி ஆபரணங்களும் அணிவித்து மகிழ்ந்துள்ளார்கள்.

அடிகளார் காலத்தில் இக்கோவில்களுக்கு மின் விளக்கு அமைத்துத் தேவாரத் திருப்பதிகங்களைக் கோயில் கல்வெட்டாக பொறித்துள்ளார்கள்.

பாண்டிய நாட்டுப் பாடல் பெற்ற 14 திருத்தலங்களில் முதல் திருத்தலம் பிரான்மலை. சேக்கிழார் பெரிய புராணத்தில் ஞானசம்பந்தப் பெருமான் பாண்டிய நாட்டில் பிரான்மலைத் திருத்தலத்திற்கே முதலில் வந்து பாடிச் சென்றார் என்பதை,

"கொடுங்குன்றத் தினிதமர்ந்த
கொழும்பவளச் செழுங்குன்றை
அடுங்குன்றும் உரித்தானை
வணங்கி அருந்தமிழ்பாடி

நெடுங்குன்றும் படர்கானும்

நிறைநாடும் கடந்து, மதி

தொடுங்குன்ற மதில் மதுரைத்

தொன்மைகள் வந்தணைகின்றார்"(3)

என்ற பாடலால் அறிகிறோம். இவ்வாறு பிரான்மலைத் திருக்கோயில் அமைந்துள்ளமை அறியமுடிகிறது.

## திருப்புத்தூர் திருக்கோயில்

இங்குள்ள திருத்தளிநாதர் திருக்கோயில் திருஞானசம்பந்தர், அப்பரடிகள் ஆகிய இருவராலும் பாடப்பெற்ற திருத்தலமாகும். சுந்தரரும், சேரமான் பெருமான் நாயனாரும் வழிபட்டதலம். சிவபெருமான் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் சங்கப் புலவராய்த் திகழ்ந்தை,

"மின்காட்டுங் கொடி மருங்குல்

விருப்பவன்காண் பொருப்பு வலிச்சிலைக் கையோன்காண்

நண்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி

நற்கனகக்கிழி தருமிக்கு அருளினோன் காண்

பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற

புனக்காந்தன் கைகாட்டக் கண்டு வண்டு

தென்நாட்டுஞ் செழும் புறவில் திருப்புத்தூரின்

திருத்தளி யான்காண் அவன் என் சிந்தையானே"(4)

எனத் திருநாவுக்கரசர் பாடியுள்ளார்.

இத்திருக்கோயில்களில் நாள் மற்றும் சிறப்பு வழிபாடுகள்

அர்ச்சனையோடு நடைபெற அடிகளார் முயன்று செயற்படுத்தி உள்ளார்கள். அடிகளாருக்கு முன் உள்ளவர்கள் பூசைகள் நடத்தி ஆபரணங்கள் அணிவித்து மகிழ்ந்துள்ளனர். சிலர் குடமுழுக்குகளும் நடத்தியுள்ளனர்.

அடிகளார் அவர்கள் இத்திருக்கோயிலின் மதில் சுவர்களில் திருஞானசம்பந்தர், அப்பர் முதலானோர் பாடிய தேவாரப் பதிகங்களைக் கல்வெட்டில் பொறித்துள்ளார்.

## குன்றக்குடித் திருக்கோயில்

குன்றக்குடித் திருக்கோயிலை,

"வீறு சேர்படை வீட்டினில் அதிகம்இவ் வீடாம்?
கூறும் முன்பதிக்கு அதிகம்ஈது என்னெனக் குறிக்கின்
மாறுஇல் தன்பெரும் பகுதிகுறித்து ஏகும் ஓர் வள்ளற்கு
ஆறு தங்கிய பதியெலாம் உயர்வு எனல் ஆமே"!"(5)

என்ற வேதாந்த சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் மயூரகிரி புராணத்தில் போற்றிப் பாடியுள்ளதைக் குன்றக்குடித் தலவரலாறு நூலில் அறிய முடிகிறது. "குன்றுதோறாடலில் முந்திய குன்றக்குடி" என்று வண்ணச்சரபம் மகான் தண்டபாணி சுவாமிகள் போற்றுகிறார். "வேதம் கைகூப்பும் குன்றக்குடி" என்பார் குன்றக்குடி மாலை ஆசிரியர்.

இத்தகைய பெருமையுடையது குன்றக்குடித் திருத்தலம். இங்கு குன்றின்மேல் சண்முகநாதப் பெருமான் திருக்கோயிலும், குன்றின் அடிவாரத்தில் வரலாற்று சிறப்புடைய குடவரைக் கோயில் அமைந்துள்ளன. இத்திருக்கோயில்களுக்குக் குன்றக்குடி ஆதீனக்

கர்த்தர்கள் வழிபாடுகளும், விழாக்களும், குடமுழுக்கும் செய்து பராமரித்து வருகிறார்கள்.

திருக்கோளக்குடித் திருக்கோயில்

தேனாட்சியம்மன் திருக்கோயில்

இவை சிறுகோயில்கள். உள்ளூர் அளவில் சிறந்து விளங்குபவை. இக்கோயில்களுக்கும் நாள் வழிபாடுகள் முறைப்படி நடைபெற்று வருகின்றன.

## குடமுழுக்குப் பணி

குடமுழுக்குப் பணி சமயப் பணிகளில் ஓர் அரியபணி. 'கோயில் இல்லாத ஊரில் குடி இருக்கக்கூடாது' என்பது வழக்கு. அதனால் கோயில் இல்லாத ஊர்களில் புதிதாகக் கோயில் கட்டிக் குடமுழுக்குச் செய்த ல், கட்டப்பட்ட கோயிலைப் பல ஆண்டுகள் ஆனதும் புதுப்பித்து நன்னீராட்டு விழா எடுப்பதால் மக்களுக்கு நல்லது நடக்கும் என்பது சமயப் பெரியோர்களின் திடமான நம்பிக்கையாகும்.

அதனடிப்படையில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன அடியவர்களில் பலர் ஆதீன ஐந்து கோயில்கள் மற்றும் பிறகோயில்களுக்கும் குடமுழுக்குப் பணி செய்து வந்துள்ளதைக் காணமுடிகிறது.

## ஆதிகுருமூர்த்திகள் அருளாலயம்

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் ஆதி குருமூர்த்திகள் அருளாலயம் திருவண்ணாமலையில் உள்ளது. இவ்வருளாலயத்தில்

தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் திருப்பணிகள் செய்து 1951-இல் திருக்குட நன்னீராட்டுச் செய்துள்ளார்கள்.

**பிரான்மலை**

சைவ அடியார்களால் பாடல் பெற்ற இத்திருத்தல மூன்றடுக்குக் கோயிலைத் தவத்திரு அடிகளார் அவர்கள் 1953-இல் புதுப்பித்து திருக்குட நன்னீராட்டுச் சிறப்பாகச் செய்துள்ளார்கள்.

இக்கோவிலிலுள்ள இராசகோபுரம் புதுப்பிக்கப்பெற்று, திருப்பணி செய்யப் பெற்று மீண்டும் 20.4.1992-இல் திருக்குட நன்னீராட்டுச் செய்யப் பெற்றுள்ளது.

**திருப்புத்தூர்**

தேவாரப் பாடல் பெற்ற இத்திருத்தலக் கோயிலின் இராசகோபுரத்தைப் புதுப்பித்துத் தவத்திரு அடிகளார் அவர்கள் 24.8.1992-இல் நன்னீராட்டுச் செய்து மகிழ்ந்தார்கள்.

**குன்றக்குடி**

ஆதீன அடியவர்களுள் சங்கரலிங்க முனிவர் (கி.பி.1710-1780) மருது பாண்டியர்களைக் கொண்டு குன்றக்குடி சண்முகநாதன் திருக்கோயிலில் விரிந்து, பரந்த அளவில் மண்டபம், மதில், கோபுரம் முதலான திருப்பணிகளும்,பிறவும் செய்து திருக்குட நன்னீராட்டுச் செய்துள்ளார்கள்.

43-ஆம் பட்டம் பெற்ற பொன்னம்பல தேசிக சுவாமிகள் (கி.பி.1928-1946) இத்திருக்கோவிலுக்கு 24.6.1940-இல் திருக்குட நீராட்டு விழாச் செய்து மகிழ்ந்துள்ளார்கள். மீண்டும் 45-ஆவது பட்டம் பெற்ற

அருணாச்சல தேசிக சுவாமிகள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) பல இலட்சம் ரூபாய் செலவில் புதுப்பித்தும் 3.5.1979-இல் திருக்குட நன்னீராட்டு விழா மிகச் சிறப்பாக நடத்தி மகிழ்ந்துள்ளார்கள்.

### தேனாட்சியம்மன் திருக்கோயில்

இத்திருக்கோயிலில் 45-ஆவது பட்டம் பெற்ற அடிகளார் அவர்கள் திருப்பணிகள் செய்து 7.2.1988-இல் திருக்குட நீராட்டுச் செய்துள்ளார்கள். திருக்கோயில் பெயரே ஊருக்கும் அமைந்துள்ளது.

### திருக்கோளக்குடி திருக்கோயில்

இத்திருக்கோயில் பூமி, அந்தரம், சுவர்க்கம் என்ற மூன்று அடுக்குகளில் அமைந்த மலைக்கோயிலாகும். அடிகளார் அவர்கள் இளவரசுப் பொறுப்பிலிருந்த காலத்தில் இத்திருக்கோயிலில் சுற்றுச்சுவர் எழுப்பித் திருப்பணி செய்து புதுப்பித்து, மின் விளக்குகள் அமைத்து 11.12.1987-இல் திருக்குட நன்னீராட்டுச் செய்துள்ளார்கள். பின் தேவையான அனைத்துத் திருப்பணிகளும் செய்து 10.7.1994-இல் திருக்குட நன்னீராட்டு விழாச் செய்து மகிழ்ந்தார்கள்.

### பிற கோயில் குடமுழுக்குப் பணி

### தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

அரளிப்பாறையிலுள்ள இத்திருக்கோயிலில் அடிகளார் திருக்குட நீராட்டு விழாச் செய்ய இருந்தார்கள். அவர்கள் பரிபூரணம் அடைந்தபின் 46-ஆவது மகாசந்நிதானம் தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பராமச்சாரியார் சுவாமிகள் திருப்பணிச் செய்து, புதுப்பித்து, ஆழ்குழாய்க் கிணறு அமைத்து 5.4.1996-இல் திருக்குட நன்னீராட்டுச் செய்துள்ளார்.

“மதுரையில் மேலமாசி வீதியில் அமைந்துள்ள இம்மையில் நன்மை தருவார் கோயிலைப் பழுதுபார்த்துள்ளார். மதுரை மீனாட்சியம்மன் கோயில் பொற்றாமரைக் குளத்தைத் தாமே முன்னின்றுத் தூர்வாரினார். இவ்வாறே ஆழ்வார்த் திருநகர் ஸ்ரீவைகுண்டம் முதலிய ஊர்களிலுள்ள திருக்குளங்களையும், குன்றக்குடியில் உள்ள சீதளி, மருகாபுரித் திருக்குளங்களையும் தூர்வாரித் தூய்மைச் செய்தார். ஆதீன ஆட்சிக்குட்பட்ட ஆலயங்களில் மட்டுமின்றிப் பிற ஆலயங்களிலும் திருப்பணிகள் செய்த பெருமை அடிகளாருக்குரியது.”[6]

## விழாக்கள்

மக்கள் விழைந்து கொண்டாடுவது விழா. விழா, கோயில் திருவிழா, தேசிய விழா, குடும்ப விழா, பொதுவிழா எனப் பலவகைப்படும். விழாக்களால் மக்களிடையே ஒற்றுமை, சகிப்புத்தன்மை, கூடிமகிழ்தல், ஊர்ப்பற்று, நாட்டுப்பற்று, மதஒற்றுமை, தெய்வ நம்பிக்கை, விருந்து உபசரித்தல், தருமச் செயல்கள், பக்தி உணர்வு, தெய்வங்களின் பெருமை அறிதல் போன்ற நற்பண்புகள் வளர்க்கப்படுகின்றன.

ஆதீன அடியார்கள் தங்கள் ஆட்சிக்குட்பட்ட கோயில்களில் முக்கிய நாட்களில் திருக்கோயில் விழா, நூல் வெளியீட்டு விழா, இலக்கிய விழா, மதநல்லிணக்க விழா போன்ற விழாக்கள் கொண்டாடி மக்களிடம் சமய, இறை ஒற்றுமை, மொழி, சேவை உணர்வுகளை ஏற்படுத்துகின்றனர். குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன அடியார்கள் ஒவ்வொரு ஆண்டும் தங்களுடைய ஆளுகைக்குட்பட்ட கோயில்களில் பல விழாக்களை நடத்தி வருகிறார்கள்.

தமிழறிஞர்கள் நினைவைப் போற்றும் விதமாக நூல் வெளியீட்டு விழா, த்தரங்கம், இலக்கிய விழாக்களும் ஒவ்வொரு ஆண்டும் குறிப்பிட்ட நாள்களில் நடத்தி இலக்கியச் சிந்தனையைத் தூண்டி வருகிறார்கள். தவத்திரு அடிகளார் அவர்கள் மாணிக்கவாசகர் மீதுள்ள ஈடுபாட்டாலும், திருவாசகப் பெருமையை மக்கள் அறியவேண்டும் என்பதற்காகவும் 'திருவாசக விழா'வை 1953-ஆம் ஆண்டு மதுரை மாநகரில் நடத்தியுள்ளார்கள். ஆண்டுதோறும் திருவாசக விழா குன்றக்குடியில் நடைபெற்றுவருகிறது.

1957-ஆம் ஆண்டு திருப்புத்தூரில் அடிகளார் அவர்கள் 'திருமுறைவிழா' தொடங்கினார்கள். ஒவ்வொரு ஆண்டும் வைகாசி மாதம் திருப்புத்தூரில் திருத்தளிநாதர் கோயிலில் திருமுறைவிழா கொண்டாடப்பட்டு வருகிறது.

குன்றக்குடியில் சித்திரைத் தமிழ்ப்புத்தாண்டில் 'பால் பெருக்கு விழா', வைகாசி விசாகத்தில் பெருமான் திருமடத்துக்கு எழுந்தருள் விழா, ஆடிக் கார்த்திகையில் திருப்படித் திருவிழா, ஆவணி மூலம், பிட்டுத் திருநாள் ஆகியன கொண்டாடப்படுகின்றன.

பிரான்மலைத் திருக்கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் திருஞானசம்பந்தர் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி வருகிறார்கள். அடிகளார் அவர்கள் 1953-ஆம் ஆண்டு மதுரையில் இம்மையில் நன்மை தருவார் கோயிலின் திருக்குளத்தைத் தூர்வைச் செய்யும் பொழுது 'பிட்டுத்திருவிழா' நடத்தியுள்ளார்.

மாதக் கார்த்திகைத் தவிர பெரிய கார்த்திகைத் திருநாள், தைப்பூசம் 10-நாள் விழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. ஐப்பசி மாதம்

கந்தர் சஷ்டி விழா நடைபெறும். அப்போது சண்முகநாதப் பெருமானுக்கு ஆறு நாட்களும் இலட்ச அர்ச்சனை நடைபெறும்.

தவத்திரு அடிகளார் அவர்கள் "1969-ஆம் ஆண்டு மதுரையில் திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டுவிழாவைப் பெரும் பொருட் செலவில் சிறப்பாகக் கொண்டாடினார்."(7) ஆண்டுதோறும் தைத்திங்களில் ஆதீன தேவாலயங்கள் தொடர்பாகச் சிற்றூர்களில் ஏர்முனை விழா, சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது.

பிரான்மலையிலுள்ள மங்கைபாக சுவாமி திருக்கோயிலில் சித்திரை மாதம் பத்து நாள்கள் விழா நடைபெறும். பத்துநாள் விழாக்களில் இரண்டுநாள் விழாவினைப் பாரி விழாவாகக் கொண்டாடி வருகிறார்கள். இவ்விழா வள்ளல் பாரியையும், சங்க காலத்தையும் நினைவு கூறும் வகையில் ஆண்டுதோறும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது.

ஒவ்வொரு ஆண்டும் பொங்கல் பண்டிகைக்கு முதல்நாள் தங்கள் அன்பர்கள், நண்பர்கள், திருமடத்தில் உள்ள பணியாளர்கள், திருக்கோயில் பணியாளர்கள் அனைவருக்கும் பொங்கல் பரிசு (பொங்கல் பானை, அரிசி, வெல்லம், மஞ்சள்) வழங்குவார்கள். தமிழர் திருநாளாம் பொங்கல் விழாவை இவ்வாதீனம் புதிய முறையில் சமுதாயப் பார்வையில் கொண்டாடி மகிழ்வது மிகவும் போற்றுதலுக்கு உரியதாகும்.

இத்திருமடம் பிற மதங்களை வெறுக்கவில்லை. தவத்திரு அடிகளார் கிறித்துவப் பண்டிகை, இசுலாமியர் பண்டிகைகளின் போது அவ்வச் சமய நண்பர்களுக்குத் தொடர்ந்து வாழ்த்துக்கள் அனுப்புவார்கள். கிறித்து பிறப்பு விழாவை ஒட்டி ஆண்டுதோறும் விரியன்பட்டிக்குச் சென்று அங்குள்ள கிறித்துவர்களுடன் கலந்துரையாடி மகிழ்வார்கள். இது

அவரது சமயக் காழ்ப்பின்மைக்குச் சான்றாகும். இவ்வாறு இவ்வாதீனத்தால் பல விழாக்கள் அன்றும் இன்றும் சிறப்புடன் கொண்டாடப்பட்டு வருகின்றன.

## உழவாரப்பணி

உழவாரப்பணி என்பது திருக்கோயில், அதன் சுற்றியுள்ள பகுதிகளைத் தூய்மை செய்தல் மற்றும் கோவில்களைச் சுற்றி நீர்த் தடாகங்களை ஏற்படுத்துதல், தடாகங்களைத் தூய்மை செய்தல் போன்ற பணிகள் 'உழவாரப்பணி' ஆகும். சமயப்பணிகளில் இது ஒரு தூய்மையானத் தொண்டுப்பணியாகும். இவ்வரியப்பணியைக் குன்றக்குடி ஆதீனம் சிறப்பாகச் செய்து வருகின்றது. 45-ஆம் மகாசந்நிதானம் அவர்கள் காலத்தில் இப்பணி அதிக அளவில் செய்யப்பட்டுள்ளது.

ஆதீன அடியார்களில் யாழ்ப்பாணத்தில் இருந்து வந்தவராகிய ஞானப்பிரகாச முனிவர் தமிழ் நாட்டிற்கு வந்து சிதம்பரம் சென்றார். அங்குத் தில்லை அம்பலவாணனை வழிபட்டதோடு மக்களுக்குப் பயன்படும் வகையில் கோயிலுக்குத் தென்கிழக்கு மூலைப் பகுதியில் திருக்குளம் ஒன்று அமைத்தார்கள்.

அந்தத் திருக்குளம் "ஞானப்பிரகாசர் திருக்குளம்" என்று பெயர் பெற்று இன்றும் வழங்கப்படுகிறது. குளத்தருகிலுள்ள ஒரு கல்வெட்டில் இச்செய்திக் குறிப்புகள் பொறிக்கப்பட்டுள்ளன. இன்று அக்குளம் பராமரிக்கப்படாமல் சுற்றுப்புறச் சீர்கேட்டால் பாதிக்கப்பட்டுள்ளது.

ஆதீன அடியவராகிய சங்கரலிங்க முனிவர் (கி.பி.1910-1780) குன்றக்குடிச் சண்முகநாதர் கோவில் அருகில் மருதாபுரி என்னும் தடாகம் உண்டாக்கினார். இன்றும் அக்குளம் அப்பெயருடன் திகழ்கிறது.

45-ஆம் மகாசந்நிதானம் அவர்கள் சிறுவயது முதலே முற்போக்குச் சிந்தனையும், சீர்திருத்த எண்ணமும் கொண்டவர்கள். ஆவணி மூலத்தில் எல்லா சிவாலயங்களிலும் பிட்டுத் திருவிழா நடக்கும். இறைவன் பிட்டுக்கு மண் சுமந்த கதையின் நினைவாகப் பூசை நடக்கும். பக்தர்களுக்குப் பிட்டு பிரசாதமாக வழங்கப்படும்.

அடிகளார் அவர்கள் பிட்டுத் திருவிழாவின் உள்ளடக்கத்தையே மாற்றினார்கள். இறைவன் உழைப்பாளியாக மாறி மக்களுக்குத் தொண்டு செய்ததைக் கொண்டாடும் உழைப்புத் திருவிழா அது என்றார். அன்று கோயில் திருப்பணிகள், தூர்வைப் பணிகள், வரத்துக்கால் துலக்கிவிடும் பணிகள் போன்ற பணிகளைப் பக்தர்கள் செய்வர். அப்படி வேலை செய்யும் பக்கதர்களுக்குப் பிட்டுப் பிரசாதம் வழங்கும் முறையை அறிமுகப்படுத்திச் செயல்படுத்தியுள்ளார்கள்.

"மதுரையில் இம்மையின் நன்மை தருவார் கோயில் ஒன்று இருக்கிறது. அற்புதமானத் திருக்கோயில். திருக்கோயிலுக்குள்ளேயே திருக்குளம்! கட்டுமானத்துடன் கூடிய திருக்குளம்! ஆயினும் திருக்குளம் முழுதும் தூர்ந்து குப்பை மேடாகிவிட்டது. 1953-இல் தண்டியடிகள் நினைவாக 30 நாட்கள் தூர்வை எடுக்கப் பெற்றது. மதுரை மாநகர மக்கள், மாணவர்கள், தொழிலாளர்கள் முதலியோர் ஒத்துழைப்புத் தந்தனர். இதுபோன்ற பணிகளைச் செய்வதுதான் புராணங்களைப் போற்றும் நெறி"[8] என்று அடிகளார் அவர்கள் கூறியுள்ளார்கள்.

திருப்புத்தூரிலுள்ள திருத்தளிக்குளம் (சீதளி) 10 ஏக்கர் பரப்பில் உள்ளது. இது நீண்ட காலமாகத் தூர்வை எடுக்கப்பெறாமல் காணப்பட்டது. அடிகளார் அவர்களின் முயற்சியில் 1987-இல் தமிழக

அரசு அறநிலையத்துறை உதவியுடன் ரூபாய் 4 இலட்சம் செலவில் தூர்வை எடுத்துப் பழுதுபார்க்கப் பெற்றது.

"திருமடத்துக்கு எழுந்தருளும் பெருமானைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க, சீர்வரிசைகளுடன் இவர்கள் எதிர்கொண்டு அழைத்து வருவதும், ஆவணிமூலத்தன்று பெருமானைக் கொற்றாள் (கூலியாள்) திருவேடத்தில் கூடை, மண்வெட்டியுடன் அலங்கரித்துத் திருக்குளக்கரையில் எழுந்தருளச் செய்து திருக்குளம், கண்மாய்ப்பணிகள் செய்வதும், நீர் வரத்துக்கால்களைச் செம்மைப் படுத்துவதும் குறிப்பிடத்தக்கது"(9) என்றும் கூறப்பட்டுள்ளது.

சிவகங்கை மாவட்டத்திலுள்ள பாடல் பெற்ற எல்லாத் திருக்கோயில்களிலும் சுழற்சி முறையில் நாள் ஒதுக்கி உழவாரத் தொண்டு தொடர்ந்து செய்துள்ளார்கள். அடிகளார் அவர்கள் ஒவ்வொரு மாதச் சதய நாளில் சுழற்சி முறையில் திருக்கோயில்களுக்குச் சென்று உழவாரப் பணியாளர்களுடன் அவர்களும் சேர்ந்து பணி செய்துள்ளார்கள். அதனால் திருக்கோயில்கள் நன்கு பாதுகாக்கப் பெற்று எப்பொழுதும் தூய்மையாகவும், பொலிவுடனும் திகழ்கின்றன.

தஞ்சை மாவட்டத்தில் தேவாரப் பாடல் பெற்ற சிவன் திருக்கோயில்கள், மங்களாசாசனம் பெற்ற திருமால் திருக்கோயில்கள் உள்ளன. இக்கோயில்கள் அனைத்தையும் பட்டியல் தயார் செய்து, ஆங்காங்கே உள்ள அன்பர்கள் துணையால் அப்பர் அடிகள் நாளாகியச் சித்திரைச் சதயநாளையொட்டி ஒரு வாரம் உழவாரத் திருத்தொண்டு இயக்கம் நடத்தி உழவாரப்பணி செய்துள்ளார்கள்.

அப்பர் அடிகளின் உழவாரப் பணி அடிகளார் அவர்களின்

திருவுள்ளம் கவர்ந்தத் திருத்தொண்டாகும். அடிகளார் 45-ஆவது பட்டம் அவர்களை நடமாடும் அப்பர் என்று மக்கள் கூறுவர். ஒவ்வொரு திருக்கோயிலுக்கும் உழவாரப் பணியாளர்களை நியமித்து அவர்களைக் கொண்டு உழவாரப் பணி செய்துள்ளார்கள். ஒவ்வொரு மாதத்திலும் வரும் சதய நாளில் உழவாரப் பணி அறிக்கைத் தயாரித்து உடனுக்குடன் செய்ய வேண்டியப் பணிகளைச் செய்துள்ளார்கள்.

அடிகளார் அவர்கள் தாம் எழுதிய 'மண்ணும் மனிதர்களும்' நூலில் "திருஞானசம்பந்தர் அடிச்சுவட்டில், பாலின்றி அழும் இலட்சக்கணக்கானக் குழந்தைகளுக்குப் பால் வழங்கல், குழந்தை காப்பகங்கள் நடத்தல், அப்பரடிகள் அடிச்சுவட்டில் உழவாரத் திருத்தொண்டுச் செய்து நம்முடையத் திருக்கோயில்களைப் பாதுகாத்தல், தண்டி அடிகள் அடிச்சுவட்டில் திருக்குளங்கள் தூய்மை செய்தல் முதலியப் பணிகளைப் பட்டியலிட்டால் விரிவடையும். இன்று திருத்தொண்டுச் செய்தால் புராணம் புத்துயிர்ப்புப் பெறும். மக்களையும் வளர்க்கலாம்; சமய நெறியையும் வளர்க்கலாம்; இன்றைய உலகு அவாவி நிற்பது தொண்டுகளையே"(10) என்பர். 'மக்கள் பணியே; மகேசன் பணி' என்பதற்கேற்ப தவத்திரு அடிகளார் அவர்கள் தொண்டு செய்வதையே தம் மூச்சாக, பேச்சாக, செயலாகக் கொண்டு வாழ்ந்துவந்துள்ளார்.

### சமய இயக்கங்கள்

தவத்திரு அடிகளார் பட்டத்திற்கு வந்த காலத்தில் தமிழ்நாட்டில் ஆத்திகம் தடம் புரண்டு நாத்திகம் தலைவிரித்தாடியது. பெரியார் ஈ.வே.ரா. பிள்ளையார் உடைப்புப் போராட்டத்தை 2.8.1952-இல் அறிவித்தார். பெரியாரின் இவ்வறிவிப்புச் சமய உலகில் மக்களிடையே பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது.

இப்படிப்பட்டப் போராட்டங்களை வலுவிழக்கச் செய்யக் காலத்திற்கேற்ற முற்போக்குச் சிந்தனையுடைய அறிவார்ந்த ஒரு சமய இயக்கம் வேண்டும் என அடிகளார் எண்ணினார்கள். எண்ணிய எண்ணத்திற்கு உடனே செயல் வடிவம் கொடுத்தார். நாடெங்கும் உள்ள சமய அறிஞர்களையும், சமயப் பேரன்பர்களையும் கூட்டிக்கலந்து பேசினர். முடிவில் அடிகளார் தலைமையில் 11.8.1950-இல் 'அருள் நெறித் திருக்கூட்டம்' உருவானது. "நன்மை பெருகு அருள் நெறியே வந்தணைந்து" என்னும் சேக்கிழார் வாக்கின் வண்ணமே தமிழ் நாட்டில் நன்மை பெருகுவதற்கு அடிகளாரின் அருள்நெறித் திருக்கூட்டம் துணையாக அமைந்தது.

அடிகளார் அவர்கள் தொடங்கிய அருள்நெறித் திருக்கூட்டம் மூலம் வாரந்தோறும் பசனைக் கூட்டமாக இருந்த வழிபாட்டுச் சங்கங்களையெல்லாம் உழவாரப்பணி செய்யும் சமுதாயப்பணி இயக்கங்களாக மாற்றியிருந்தார்.

அருள்நெறித் திருக்கூட்டக் கிளைகள் நாடெங்கும் தொடங்கப்பட்டன. ஊரெங்கும் பட்டி தொட்டி எங்கும் சீர்திருத்த நோக்குடன் கூடிய அறிவார்ந்த சமயப் பிரச்சாரம் செய்யப்பட்டது. எங்கும் திருவாசகச் சிவபுராண முழக்கம், வார வழிபாடுகள், கூட்டு வழிபாடுகள், அருள்நெறி சார்ந்த மக்கட்பணி, தீண்டாமை விலக்குப்பணி, சாதிபேதமற்ற சமுதாய அமைப்புப்பணி என்று செழித்து வளர்ந்தது.

சாதி பேதமற்றது சமயநெறி. வல்லார்க்கும், எளியார்க்கும் வாழ்வளிப்பது சமயநெறி என்பது மக்கள் உள்ளங்களில் எல்லாம் பதியலாயின. வேண்டாப் பழமைகள் விலக்கப் பெற்றன. எங்கும்

அருள்நெறி ஓங்கி வளர்ந்தது. தமிழ்நாட்டில் மட்டுமின்றி இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய கடல் கடந்த நாடுகளிலும் அருள்நெறித் திருக்கூட்டத்தின் கிளைகள் தோன்றின.

"அருள்நெறித் திருக்கூட்டத்தின் முதலாவது மாநில மாநாடு தேவகோட்டையில் 1954 ஜூலை 10,11- இருநாட்கள் நடந்தது. அம்மாநாட்டில் முதலமைச்சராய் இருந்த இராஜாஜி அவர்கள் தொடக்கவுரை ஆற்றியுள்ளார். அம்மாநாட்டில் நல்ல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. "மதமாற்றம் இந்தத் தேசத்தில் ஒரு தொழிலாகிவிட்டது. பெரும்பாலும் இச்சக மொழிகளை நம்பியே மதமாற்றம் ஏற்படுகிறது. எனவே, பாமரமக்கள் போகாமலிருக்க மதமாற்றம் செய்வதைச் சட்டப்பூர்வமாகக் கட்டுப்படுத்த வேண்டுமென மத்திய, ராஜீய அரசினரை இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது என்ற தீர்மானம் ஒரு சான்றாகும்.

48 ஆண்டுகளுக்கு முன்பு நிறைவேற்றப் பெற்ற இத்தீர்மானம் இன்றைக்கும் பொருந்தும். சொல்லப் போனால் அன்றையைவிட இன்றைக்குத்தான் அதிகம் பொருந்தும்"[11] என்பர். இவ்வாறாக அருள்நெறித் திருக்கூட்டம் அரியபணிகளைச் செய்துள்ளது.

## அருள்நெறித் திருப்பணி மன்றம்

1955-இல் அடிகளார் அவர்கள் 'அருள்நெறித் திருப்பணி' மன்றம் என்ற அமைப்பினை ஏற்படுத்தினார். இவ்வமைப்பு கல்விப் பணிக்காகத் தொடங்கப் பெற்றது. இம்மன்றம் வாயிலாகக் குன்றக்குடி ஆதீனம் அறக்கட்டளைகள் பலவற்றை ஏற்படுத்தியது.

குன்றக்குடி, பிரான்மலை, தேவகோட்டை, ஈரோடு, நாங்குனேரி முதலிய ஊர்களிலும் தஞ்சாவூர், திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களின் சில ஊர்களில் தொடக்கப்பள்ளிகள், பொதிகையடி, பாபநாசத்தில் ஒரு கல்லூரி (திருவள்ளுவர் கல்லூரி) என 16 கல்வி நிறுவனங்கள் அருள்நெறித் திருப்பணி மன்றத்தின் வாயிலாக நடைபெற்று வருகின்றன.

## தமிழ்நாடு தெய்வீகப் பேரவை

இந்தியாவில் உள்ள மாநிலங்களில் கோயில்களும், மடங்களும் மிகுதியாக உள்ள மாநிலம் தமிழ்நாடு. கோயில்களின் நிர்வாகம், இந்துசமய அறநிலையத் துறையிடமும், மடங்களின் நிர்வாகம் மடத்தலைவர்களிடமும் இருந்து வந்தது. இவைகளுக்கிடையில் ஓர் அமைப்புத் தேவை என்று உணரப்பட்டது.

அதனடிப்படையில் தமிழ்நாட்டில் 1969-இல் மு.கருணாநிதி அவர்கள் முதலமைச்சராக இருந்தபோது அடிகளார் அவர்கள் மேலவை உறுப்பினராக (எம்.எல்.சி) நியமிக்கப் பெற்றார்கள். மடத்தின் தலைவர் மேலவை உறுப்பினராக்கப் பெற்று பணிபுரிந்த வரலாறு மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

“சமயநெறிகளில் மக்களை இணைத்து மகிழ்விக்கவும், அவர்களுக்குரியப் பணிகளைச் செய்யவும் தமிழக அரசின் ஓர் உறுப்பாகத் தெய்வீகப் பேரவை 13.6.1966-இல் தொடங்கப் பெற்று 1976 வரை செயல்பட்டது. தமிழ்நாட்டில் உள்ள எல்லா திருமடங்களின் தலைவர்களும் இந்த அவையில் உறுப்பினராக இடம் பெற்றிருந்தனர். பேரவைக்கு ஈராயிரம் கிளைகள் இருந்தன”[12] என்று கூறப்பட்டுள்ளது.

அடிகளார் மேலவை உறுப்பினராக இருந்த காலத்தில் தமிழ்நாடு தெய்வீகப் பேரவைக்கும் அவர்களே தலைவராக இருந்து செயல்படுவது பொருத்தமானது என்று அனைவரும் விரும்பினர். விருப்பத்தின்படி அடிகளார் அவர்கள் 20.12.1969-இல் தெய்வீகப் பேரவையின் தலைவர் பொறுப்பை ஏற்றார்.

அடிகளார் தலைமையேற்ற காலம் தமிழ்நாடு தெய்வீகப் பேரவையின் பொற்காலம். தெய்வீகப் பேரவை பலமடங்கு வளர்ந்தது. சென்னை ஆழ்வார்ப்பேட்டை மகாராஜா சூரியராம் சாலையில் தெய்வீகப் பேரவைக்குச் சொந்தக் கட்டிடம் உருவாக்கப் பெற்றது.

அதில் பேரவைக்குச் சொந்தமாக அச்சகமும் அமைக்கப் பெற்றது. அதன் மூலம் "அருளோசை," "செய்திக்கதிர்" என்ற சமய இதழ்கள் தொடங்கப் பெற்றன. இலட்சக்கணக்கில் துண்டுப் பிரசுரங்கள், சமய நூல்கள், அறநூல்கள் அச்சிட்டு வெளியிடப்பட்டன.

தமிழ்நாடுத் திருக்கோயில்களில் எல்லாம் வாரவழிபாடு, கூட்டு வழிபாடு, உழவாரப்பணிகள் நடைபெற்றன. திருக்கோயில்களில் பல திருப்பணிகள் செய்யப் பெற்றுக் குடமுழுக்கு நீராட்டு விழாக்கள் நிகழ்ந்தன. திருக்கோயில்களில் விழாக்களின் போது சமயச் சொற்பொழிவுகள், திருமுறை இசையரங்கங்கள், கலையரங்கங்கள், பட்டிமன்றம், கவியரங்கங்கள் நடைபெற்றன.

தெய்வீகப் பேரவையின் மாவட்ட, மாநில மாநாடுகள் பல நடந்துள்ளன. 1973-இல் இரண்டாவது மாநில மாநாடு திருச்சியில் நடந்தது. அம்மாநாட்டில் சாதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்புத் தீர்மானங்கள் நிறைவேற்றப் பெற்றுள்ளன.

1975-இல் நாகர்கோயிலில் மூன்றாவது மாநில மாநாடு மிகப் பெரிய அளவில் அரசியல் மாநாடு போல் நடந்தது. தமிழ்நாட்டில் சமய வரலாற்றில் இதற்கு முன் இப்படி ஒரு மாநாடு நடந்திராது- என்று கூறும் அளவிற்கு வரலாறு படைத்த மாநாடு. இம்மாநாடு நடைபெற்றக் காலத்தில் தெய்வீகப் பேரவைக்கு 2606 கிளைகளும், 92669 உறுப்பினர்களும் இருந்தனர்.

அடிகளார் தலைமையில் ஒரு இலட்சம் உறுப்பினர்களைக் கொண்ட தெய்வீகப் பேரவை மிகவும் சிறப்பாகச் செயலாற்றி வந்தது. சிலரைத் தவிர சைவ உலகம், ஆத்திக உலகம் எல்லாம் அடிகளார் சிந்தனைக்குப்பின் நின்றது.

நாத்திக உலகமும் அடிகளாரின் சீர்திருத்தப் போக்கிற்குத் துணை நின்றது. அடிகளாரின் அனைத்துச் சமயப் பணிகளுக்கும் அரசின் ஆதரவும், முதலமைச்சர் மு.கருணாநிதியின் ஆதரவும் மிகுதியாக இருந்தன. தெய்வீகப் பேரவை வெற்றிகரமாகச் செயல்பட்டு வந்துள்ளது.

அரசியல் சூழ்நிலை காரணமாக மு.கருணாநிதி அவர்களின் தி.மு.க ஆட்சிக் கலைக்கப் பெற்றது. ஆளுனர் ஆட்சி ஏற்படுத்தப்பட்டது. நன்கு சீர்திருத்தப் போக்குடன் நடைபெற்றுக் கொண்டிருந்த தெய்வீகப் பேரவைக்கும் இடையூறு ஏற்பட்டது. அரசின் ஆதரவும் தெய்வீகப் பேரவைக்குக் குறைந்து முடக்கப் பெற்றது.

## திருவருட் பேரவை

தென்மாவட்டங்களில் மதம் மற்றும் சாதியின் பெயராலும் வேறுபல காரணங்களாலும் கலவரங்கள் நடைபெறுவதுண்டு. கன்னியாகுமரி

மாவட்டத்தில் மண்டைக்காட்டில் பகவதி அம்மன் கோயில் திருவிழா மிகவும் புகழ் பெற்றது. 1982-இல் நடைபெற்ற இத்திருவிழாவின் போது இந்து, கிறித்துவ மதங்களுக்கிடையே மோதல் ஏற்பட்டது. அதற்குப்பின் இசுலாமியச் சமூகத்திற்கும் பரவியது. இக்கலவரத்தில் உயிர்ச்சேதம், பொருட் சேதம் மிகுதியாக ஏற்பட்டது.

கலவரம் மேலும் மேலும் அதிகமாகிக் கொண்டிருக்கும் நேரத்தில் மதநல்லிணக்கத்தை ஏற்படுத்தும் நோக்கில் அடிகளார் அவர்கள் அமைதிப் பணியில் ஈடுபட்டார். இந்துமதப் பெரியோர்கள், கிறித்துவ பாதிரியார்கள், இசுலாமியப் பெரியோர்களைச் சேர்த்துக் கொண்டு ஊர்கள் தோறும் ஊர்வலமாகச் சென்று அமைதிப் பயணத்தை நடத்தியுள்ளார்.

இந்த அமைதிப் பணியில் அடிகளார் தம் உயிரையும் பொருட்படுத்தாது இரவு பகலாக உழைத்துள்ளார். இவர்களின் அமைதிப் பணிக்குப் பாதிரியார்களும், இசுலாமிய அன்பர்களும் இந்துப் பெரியோர்களும் முழுமையாக ஒத்துழைத்தனர். எல்லாச் சமூகத்தினரின் ஒத்துழைப்பையும் வேண்டிப் பெற்றுத் தன்னை வருத்தி இறுதியில் அமைதியை ஏற்படுத்தி வெற்றிகண்டார்கள்.

மண்டைக்காடு சென்று அமைதியை ஏற்படுத்தி வெற்றி வீரராய் அடிகளார் அவர்கள் குன்றக்குடிக்குப் புறப்படும் வேளை அனைத்துச் சமயத்தவரும் அவர்களுக்கு விருந்தளித்துப் பாராட்டியுள்ளனர். அந்த விருந்தின் போது நடந்த கலந்துரையாடலில் பிறந்த இயக்கம் தான் ‘திருவருட் பேரவை’ ஆகும்.

“இத்தகைய கலவரங்களுக்கெல்லாம் தீர்வு ‘மதநல்லிணக்கமே’ என்பதை நாகர்கோவிலிலிருந்த பொழுது எண்ணிப் பார்த்து அப்பொழுதே

(1982 மார்ச்) இவர்கள் அமைத்ததுதான் திருவருட்பேரவை. அனைத்துச் சமயத்துத் தலைவர்களும் திருவருட் பேரவையில் உறுப்பினர்கள் ஆயினர். மதத்தின் பெயரால் இனிமேல் கலவரங்கள் நிகழாமல் தடுக்க ஒரே வழி அமைதி ஏற்படச் செய்தல் என்ற நிலைமை ஏற்பட்டது. தமிழகத்திலுள்ள பெருநகரங்கள் தோறும் இதன் கிளைகள் அமைத்துப் பணி செய்து வருகின்றன"[13] என்பர்.

திருவருட் பேரவை தொடங்கப் பேராயர் எம். ஆரோக்கியசாமி ஆலோசனை வழங்கி ஒத்துழைத்துள்ளார்கள். இந்து, கிறித்துவ, இசுலாமிய சமயத்தின் தலைவர்களின் ஒத்துழைப்போடு பேரவை செயல்பட்டு வந்துள்ளது. எங்கெல்லாம் சமயக் கலவரங்கள், இனக்கலவரங்கள் ஏற்பட்டாலும் தடுத்து அமைதியும் சமய ஒற்றுமையும் ஏற்படுத்துவது திருவருட் பேரவையின் முக்கியக் குறிக்கோளாகும் இருந்தன. இவ்வமைப்பு இன்றும் வேலூர், கோயம்புத்தூர், திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், புதுக்கோட்டை, இராமநாதபுரம், திண்டுக்கல், மதுரை, நாகர்கோவில் ஆகிய பெரு நகரங்களில் செயல்பட்டு வருகிறது.

"1990-இல் திண்டுக்கல்லில் ஏற்பட்ட கலவரத் தீயை அணைக்க அனைத்துக் கட்சியினரையும் அழைத்துத் தாமும் உண்ணாவிரதம் இருந்து அமைதி ஏற்படச் செய்தார். செயற்கரிய செய்வார் பெரியார் என்பதற்குச் சான்றுகள் இவை"[14] என்று கூறப்பட்டுள்ளது.

## இந்து இளைஞர் மன்றம்

அடிகளார் அவர்கள் தெய்வீகப் பேரவையின் தலைவராக இருந்து சமயப் பணிகளைச் சிறப்பாகச் செயல்படுத்திக் கொண்டிருந்த வேளையில் "இந்து இளைஞர் மன்றம்" என்ற ஒன்றையும் தோற்றுவித்தார்கள்.

ஆன்மீகச் சொற்பொழிவு நிகழ்த்தியும் சமூகக் கருத்துக்களை நயம்படக் கூறியும் சிறப்புற்றுத் திகழும் சுகி.சிவம் அவர்கள் அன்று இந்து இளைஞர் மன்ற அமைப்புக்கு முன்னோடியாக இருந்து பணியாற்றியுள்ளார். இந்த அமைப்பு மூலம் இளைஞர் மத்தியில் சமய விழிப்புணர்வும், மதநல்லிணக்கமும் ஏற்படுத்தப் பெற்றது.

### சமய நூல்கள் வெளியிடுதல்

சமயங்களையும் மதக் கருத்துக்களையும் மக்களுக்குச் சென்றடையச் செய்யும் வழிகளில் ஒன்று சமய நூல்கள் வெளியிடுதல். மக்கள் மனங்களைப் பக்குவமடையச் செய்து, இறைச் சிந்தனையை ஏற்படுத்தி ஞானநிலை அடைய நல்ல சமய நூல்களை நாளும் ஓதுதல் வேண்டும் என்பது அடிகளாரின் சிந்தனை.

திருமடம் சமயத் தொண்டு எனும் நிலையில் ஒரு பகுதியாகச் சமயக் கருத்துக்கள் அடங்கிய நூல்களையும் அவ்வப்பொழுது வெளியிட்டுள்ளது. அதோடு சமய நூல்களைப் பாதுகாத்தும் புலவர்களை ஆதரித்தும், பாராட்டியும் வந்துள்ளன.

இப்பணிகளைச் சிறப்புறச் செய்து பெருமை பெற்ற ஆதீனம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம். இவ்வாதீன அடியார்கள் தொடக்கக் காலத்தில் சமய உபதேசங்கள் செய்து, வேதங்களை ஓதி வந்துள்ளார்கள்.

காலப்போக்கில் திருமடத்துக்குச் சமயக் குரவர்கள், புலவர்களின் வருகையும் அதிகரித்துள்ளது. உ.வே.சா அவர்கள் ஏடு தேட முதன்முறையாகப் பயணம் செய்த பொழுது சென்னையிலுள்ள குன்றக்குடி

ஆதீனக் கட்டளை மடத்தில் இருந்த ஆதீன அடிகள் சரவண சுவாமிகள் அவர்களுக்கு உதவினார்கள். "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்" பிழையற்ற பதிப்பு வெளிவருவதற்கு, உ.வே.சா அவர்களுக்கு ஏடு கொடுத்து உதவியது குன்றக்குடி ஆதீனம்.

ஆதீன அடியவராகிய சங்கரலிங்க முனிவர் சாந்துப் புலவரைக் கொண்டு "மயூரிக்கோவை" நூலை 1778-ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார்கள். சங்கரலிங்க முனிவர் அவர்களைச் சாந்துப் புலவர் தாம் இயற்றிய மயூரகிரிக் கோவையில்,

"சேனா பதிக்கம் விறல்வாகுக் கீந்துதன் செய்கையெல்லா
மானாத சங்கர லிங்கத் தபோநிதிக் காக்கியவே
டேனார் மயில்வெற்ப ரஞ்சம் போட்டிலர் செய்கையிலே
பானாறு முன்சொற் பொருளெடுத் தார்பொன் பல கொடுத்தே"(15)

எனப்புகழ்ந்து பாடியுள்ளார்.

அருள்திரு குமாரசுவாமி முனிவர் ஆதீனக்குரு முதல்வரைப் போற்றிப் பல பாமாலைகள் பாடியுள்ளார். ஞானவந்தாதி, தெய்வசிகாமணி நான்மணிமாலை, சிற்குருமாலை முதலியன அவர்கள் பாடியருளிய நூல்கள்.

"அருள்திரு குமாரசுவாமி முனிவர், குரு முதல்வர்மீது பாடி அருளிய ஞானந்தாதி, நான்மணிமாலை ஆகிய நூல்களை ஆதீன வித்துவான் தில்லைநாத பிள்ளையைக் கொண்டு 1887-இல் (சர்வசித்து, வைகாசி) அச்சிட்டு வழங்கினார்கள். இவ்வாறு 38-ஆம் பட்டம் பெரிய

ஆறுமுக தேசிகக்குருமூர்த்திகள் அருளாட்சி புரிந்து சிவமானார்கள்"[16] என்பர்.

44-ஆம் பட்டம் பெற்ற ஆறுமுக தேசிகச் சுவாமிகள் (கி.பி.1946-1952) பாலகவி வே. இராமநாதன் செட்டியார் அவர்களைக் கொண்டு 'தெய்வசிகாமணி நான்மணிமாலையை' மறுபதிப்புச் செய்து அருளினார்கள்.

"சாணக்கியதந்திரம் நூல் மதுரை ஜில்லா பிரான்மலை ஸ்ரீமத் தெய்வசிகாமணியாகிய ஆறுமுக தேசிகரவர்கள் மனோரதப்படி மதுரை ஜில்லா கரிசைப்பட்டி நாராயண சுவாமி அய்யரால் ஸம்ஸ்கிருதத்தினின்றும் மொழிபெயர்க்கப்பட்டு பிரான்மலை பாண்டிய நாட்டுக் குருக்களாகிய நாராயண தேசிகர்களால் பரிசோதிக்கப்பட்டு சுந்தர மீனாஷி யந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது 1987"[17] என்று கூறப்பட்டுள்ளது.

ஆதீன அடியவராகிய ஞானப்பிரகாச முனிவர் அவர்களால் "சிவஞான சித்தியார் சுபக்க உரை" என்ற அரிய உரை எழுதி வெளியிடப் பெற்றது. ஆதீன வித்வானாகிய கணேச பண்டிதர் "இளையாற்றக்குடிப் புராணம்" இயற்றியுள்ளார். ஆதீனக் கவிஞராகிய வீரபத்திரக் கவிஞர் "குன்றக்குடிக் குறவஞ்சி" பாடியுள்ளார். இப்புலவர் பெருமான் திருக்கோளக்குடியில் எழுந்தருளி இருக்கும் இறைவனுக்கு "வாகனக்கவி" என்னும் நூல்களைப் பாடியுள்ளார்.

சேக்கிழார் பாடிய பெரியபுராணத்துக்கு ஆதீனத்து ஆறுமுகத் தம்பிரான் சிறந்த பதவுரை இயற்றியுள்ளார். பெரிய புராணம் முழுவதும் உரையுடன் வெளியிட்ட பெருமை இந்த ஆதீனத்தையே சாரும்.

இப்பெரியவர் "காசியாத்திரை மான்மியம்" என்ற நூலையும் இயற்றியுள்ளார்.

"பெரியபுராணத்துக்கு முதல்முதல் பொழிப்புரை எழுதியவர் மழவை வீரசைவப் புலவர் மகாலிங்க ஐயர். அவ்வுரை முற்றுப்பெறவில்லை. திருவண்ணாமலை ஆதீனம் ஆறுமுகத் தம்பிரானார் பெரியபுராணத்தின் முக்காற் பகுதிக்குப் பதவுரை இயற்றினார். அவ்வுரையைப் பொம்மபுரம் சிவஞான பாலைய தேசிக சுவாமிகள் உதவியுடன் ஆதீனம் இராமலிங்க சுவாமிகள் முற்றுவித்தார்கள்"(18) என்பர்.

45-ஆவது மகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகளார் காலத்தில் சமய இதழ்கள், சமய நூல்கள் பல வெளியிடப்பட்டுள்ளன. ஆதீனத்தின் சார்பாக "மணிமொழி" பத்திரிக்கையைத் தொடங்கி அடிகளார் பல கட்டுரைகள் எழுதி வெளியிட்டுள்ளார்கள். 1969-இல் இருந்து அடிகளாரைச் சிறப்பு ஆசிரியராகக் கொண்டு ஆதீனம் சார்பில் "தமிழகம்" என்ற திங்கள் இதழ் ஒன்றையும் நடத்தி வந்தார்கள்.

தமிழ்நாடு தெய்வீகப் பேரவையின் தலைவராக அடிகளார் இருந்த போது 1972-ஆம் ஆண்டு முதல் "அருளோசை" என்ற திங்களிதழ் பேரவையின் சார்பாக வெளிவந்தது. இவ்விதழில் அடிகளார் அவர்கள் "திருவளர்ச் செல்வனுக்கு" என்ற தலைப்பில் தத்துவக் கட்டுரைகள் எழுதி வந்துள்ளார்கள்.

1980-ஆம் ஆண்டு முதல் "மக்கள் சிந்தனை" என்ற இதழ் ஆதீனத்துக்குச் சொந்தமான சண்முகநாத அச்சகத்தால் மாதம் இருமுறை அடிகளார் அவர்களைச் சிறப்பு ஆசிரியராகக் கொண்டு வெளிவருகிறது.

அடிகளார் அவர்கள் எழுதியுள்ள அப்பர் விருந்து, சமய இலக்கியங்கள், சமய மறுமலர்ச்சி, அருளியலும் அறிவியலும், தமிழும் சமயமும், சமுதாயமும், கடவுளைப் போன்று மனிதனை நினை, நமது நிலையில் சமயமும் சமுதாயமும், ஆலயங்கள், சமுதாய மையங்கள், சைவ சித்தாந்தமும், சமுதாய மேம்பாடும், திருவாசகத்தேன், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்று நூல்கள் சமயக் கருத்துக்கள் தாங்கிய சிந்தனைப் பெட்டகங்கள்.

மணிவாசகர் பதிப்பகத்தாரால் அடிகளார் நூல் வரிசை பல தொகுதிகளாக வெளியிடப்பட்டு வருகின்றன. அத்தொகுதிகளில் சமய இலக்கியம், சமயம் என்ற தலைப்புக்களில் 7,8,9,10,11 ஆகிய தொகுதிகள் வெளிவந்துள்ளன.

46-ஆவது மகாசந்நிதானம் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் பல காலங்களில் பல மேடைகளில் பேசிய பேச்சுக்களின் தொகுப்பாக "சமய வாழ்வு" என்ற அரிய நூல் வெளிவந்துள்ளது. அண்மையில் இரண்டு நூல்களை வெளியிட்டுள்ளார். ஆதீனத்தின் கவிஞராக, வித்வானாக விளங்கிவரும் மரு.பரமகுரு பல நூல்கள் இயற்றியுள்ளார்.

### சமயச் சொற்பொழிவுகள்

ஆதீன சந்நிதானங்கள் பலர் சித்தாந்த கருத்துக்களை மாணவர்களுக்கு உபதேசங்களாகவும், பொதுமக்களுக்கு மதபோதனைகளாகவும் செய்து வந்துள்ளார்கள்.

ஆதீன கர்த்தாக்களில் ஒருவராகிய சரவணசுவாமிகள் சென்னை மயிலாப்பூர் கட்டளை மடத்தில் இருந்து சமயப்பணி செய்தவர். இவர் சித்த மருத்துவ முறையில் மருந்துகள் செய்து, சென்னைக் கடற்கரைவாழ் மக்களுக்கு உதவி செய்து நீண்ட நேரம் சொற்பொழிவு ஆற்றி சைவநெறியை மக்களிடையே பரப்பி வந்துள்ளார்.

சென்னை நகரில் கிறித்துவர்கள் மக்களிடம் எவ்வாறு தங்கள் மதத்தைப் பரப்பினார்களோ அதே வழியில் சுவாமிகளும் இந்துமதக் கோட்பாடுகளை எடுத்துக்கூறி மதமாற்றத்தைத் தடுத்துள்ளார். இவரது சொற்பொழிவை நேரில் கேட்டு அனுபவித்த யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்கள் சரவணசுவாமிகளுக்குச் “சபாபிரசங்க சிங்கம்” என்னும் பட்டத்தை வழங்கியுள்ளார். நாவலர், சுவாமிகளை “சிவசாத்திர பண்டிதர்” எனவும் குறிப்பிட்டுள்ளார்கள்.

சொற்பெருக்கு ஆற்றுவது ஒரு அரியகலை. மேடையில் பேசுவது என்பது வேறு; சொற் பொழிவு ஆற்றுவது என்பது வேறு; திரண்ட கருத்துக்களோடு கற்றறிந்த சான்றோர்கள் முன்னிலையில் “கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்” என்ற குறளுக்கு இலக்கணமாக திகழ்ந்தவர்கள் சிலரே.

அவர்களில் மேடைக்குப் புது இலக்கணம் கண்டு, சொற்பெருக்கு ஆற்றி, கேட்பவர்கள் செவிக்கின்பம் பெற்று மகிழச் செய்தவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள். சமய உலகில் புதுப்பாதை வகுத்தவர்.

பேச்சில் தனித்துவம் பெற்ற தமிழ்த்தாயின் தவப்புதல்வராய் மகாசந்நிதானம் தவத்திரு அடிகளார் அவர்கள் சமயக் கருத்துக்களை

சமயச் சார்போடு கூறாமல், மதம் மனிதனை மனிதனாக்கி வாழ வைக்கும் கருவி என்பதைப் பேச்சால் சிந்திக்க வைத்தார்கள்.

1953-இல் மக்களிடையே பேசத் தொடங்கிய முதல் மடாதிபதி இவரே. உலக உவப்புக் கொள்கையை மேடையில் முழங்கிய முதல் முனிவரும் இவரே. அவர் பேச்சு பற்றி கவியோகி சுத்தானந்த பாரதியார் "இன்று குன்றக்குடியில் சைவத்திருக்களை தேவார திருவாசக உருக்களைக் கொண்ட தமிழருவி மகிழ்ச்சியால் விம்மித் ததும்பி அலைவீசிப் பாய்ந்து கொண்டே இருக்கின்றது. மேடைகளில் வீறிடுகின்றது. தமிழகம், இலங்கை, மலேசியா போன்ற நாடுகளில் எல்லாம் வேதநெறி தழைத்தோங்க, மிகு சைவத்துறை விளங்க முரசு கொட்டுகிறது. அரசியல் மன்றங்களில் ஆர்வக்குரலெடுத்து அருள் விழிப்பைத் தருகின்றது"(19) என்கிறார்.

குன்றக்குடி அடிகளார் பட்டி, தொட்டிகளில் எல்லாம் சொற்பொழிவாலும், மக்கள் சுவையறிந்தும் பட்டிமன்றம், வழக்காடு மன்றம் போன்றவற்றாலும் தமிழை வளர்த்தவர். கேட்டதன்பின் சிந்தித்து உறுதி செய்து பின்பற்றி ஒழுகுவதற்குத் தூண்டிவிடும் வகையில் மக்களை, இறை உணர்வு உள்ளோரை உறுதியாகப் பற்றி நிற்கும்படி தொண்டுகள் மேற்கொண்டவர். தமிழகத்தில் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் போன்ற கல்வி நிறுவனங்களிலும், சிற்றூர்களிலும், பெருநகரங்களிலுமுள்ள சமூக நிறுவனங்களிலும் அடிகளார் சொற்பொழிவுகள், கருத்தரங்குகள், பட்டிமன்றங்கள் எனப்பேச்சில் பலவித பரிமாணங்களை ஏற்படுத்தியவர்.

இவரது சொற்பொழிவுகள் தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களில்

மட்டுமின்றி இந்தியாவில் பம்பாய், தில்லி, கல்கத்தா முதலிய பெரு நகரங்களிலுள்ள தமிழ்ச் சங்கங்களிலும் நிகழ்ந்துள்ளன.

வானொலி, தொலைக்காட்சிகளிலும் சமயம் தொடர்பான உரைகள் நிகழ்த்தியுள்ளார். பல மாநிலங்களில் பலமுறை சுற்றுப்பயணம் செய்து சொற்பொழிவு ஆற்றியுள்ளார். அந்தமான் தீவுக்குச் சென்று ஒரு வாரம் சுற்றுப்பயணம் செய்து உரையாற்றியுள்ளார்.

"சிறந்த சொற்பொழிவாளராகிய திருப்பாதிரிப் புலியூர் ஞானியாரடிகள் தலைசிறந்து விளங்கினார். ஞானியாரடிகளைப் பின்பற்றி, ஆனால் மிக்க உணர்ச்சியோடு, மணிக்கணக்கில் இக்காலத்தில் குன்றக்குடி அடிகளார் சொற்பொழிவாற்றி வருகிறார்"[20] என்பர்.

அடிகளார் அவர்கள் இலங்கைக்குச் சுற்றுப்பயணம் செய்து, அங்குள்ள தமிழர்களுக்குச் சொற்பொழிவு நிகழ்த்தி அருள்நெறி அமுதம் வழங்கியுள்ளார்கள். கீழ்த்திசை நாடுகளுக்கு 28.12.1954 முதல் 27.3.1955 முடிய சுற்றுப்பயணம் செய்து சிவநெறியைப் பரப்பியுள்ளார்கள். 1971-இல் சோவியத் நாட்டுக்குச் சுற்றுப்பயணம் செய்து தமிழ்ப் பண்பாட்டு நெறியைப் பரப்பியுள்ளார். 1982-இல் மலேசியா, சிங்கப்பூர், கொரியா, ஹாங்காங், சப்பான், சீனா முதலிய நாடுகளுக்குச் சென்று சைவநெறி பரப்பியுள்ளார்.

தவத்திரு அடிகளார் ஆற்றிய அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் பற்றிச் சன்மார்க்க தேசிகர் ஊரன் அடிகள் சைவ ஆதீனங்கள் என்ற நூலில் கூறப்பட்டுள்ளதாவது,

"நமது நிலையில் சமயம் சமுதாயம்-சென்னைப்

பல்கலைக்கழகத்தில் 1975-இல் ஆற்றிய சொர்ணம்பாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு. திருவள்ளுவர் வாழ்வியல் - சமயவியல் - அரசியல் எனும் தலைப்பில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1979-இல் ஆற்றிய சொர்ணம்பாள் நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவு. 'சைவ சித்தாந்தமும் சமுதாய மேம்பாடும்' மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் ஆற்றிய ஏ.பி.சி.வீரபாகு அறக்கட்டளைச் சொற்பொழிவு.

இம்மூன்றும் நூல்களாக வெளிவந்துள்ளன. முதல் இரண்டும் பல்கலைக்கழக வெளியீடுகள். மூன்றாவது கலைவாணி புத்தகாலய வெளியீடு. இவை அறிவுலகத்திற்கு அடிகளார் அளிக்கும் விருந்து. இன்று காணப்பெறும் சமய சமுதாய சீர்கேடுகளுக்கு மருந்து"(21) என்பர்.

18.5.1951-இல் தருமபுர ஆதீனத் திருநெறியத் தெய்வத் தமிழ் மாநாட்டுத் திருமுறைத் திருநாளில் அடிகளார் சமய வாழ்க்கை, தலையாய சைவத் திருநெறி, முப்பொருள்நிலை, சைவமும் தமிழும், திருமுறைகளின் பெருமை, அருண்மொழிகளில் சில, திருமுறைகளின் பயன் ஆகிய பொருள்களில் சிறப்பாகத் தலைமை உரை ஆற்றியுள்ளார்.

5.6.1986-இல் குன்றத்தூரில் தமிழ்நாடு அரசு அறநிலையத்துறை எடுத்த சேக்கிழார் விழாவில் அடிகளார் வேதம்-எது? சமண, பௌத்த கொள்கைகள், சைவத்தின் சிறப்பு, ஊழையும் உப்பக்கம் காணலாம் போன்ற பொருள்களில் தலைமை உரை ஆற்றியுள்ளார்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் நடத்திய பெரிய புராணச் சொற்பொழிவுகளில் தலைமைப் பேருரை ஆற்றிச் சிறப்புச் செய்துள்ளார். இவ்வுரையில் தமிழகமும் சமயமும் சிவநெறியின் மாண்பு, திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், சேக்கிழார், பெரியபுராண

வரலாறு, பெரிய புராணத்தில் ஆடவர் மகளிர், பெரிய புராணத்தில் மக்கள் பேறு, பணியாள், நட்பு, மனையறம் போன்ற கருத்துக்களில் சிறந்த உரை நிகழ்த்தியுள்ளார்.

அடிகளார் அவர்கள் 1951-இல் காரைக்குடி கம்பன் விழாவில் "புதரிடைமலர்" என்ற தலைப்பில் அறிஞர்களின் நெஞ்சம் கவர்ந்த சொற்பொழிவு நிகழ்த்தியுள்ளார்கள்.

"மக்களுக்காக அறிவியல்" என்ற தலைப்பில் 1.8.1991-இல் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் ஏசுதாசன் அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்தியுள்ளார்.

அச்சொற்பொழிவில் அறிவியல் மணிமுடியாகத் திகழ்வது சமயம். சமயமும் ஓர் அறிவியலே. அறிவியல் துறையில் உயிரியல் சமயவியல் வருகிறது என்ற சிந்தனையைத் தந்துள்ளார்.

"அறிவு எத்தனை ஆண்டு கொண்ட

அற்புதம் அறியேனே"

என்பது திருவாசகம் என்று கூறியுள்ளார்.

இருபதாம் நூற்றாண்டின் அப்பரடிகளாக விளங்கிய தவத்திரு அடிகளார் 11.10.1993-இல் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தில் முத்துகணேசனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்தியுள்ளார். கலைவாணி பதிப்பகத்தால் அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நூலாக வெளிவந்துள்ளது.

அச்சொற்பொழிவில் அப்பரடிகள் பற்றிக் கூறும்பொழுது,

அப்பரடிகளின் அடிச்சுவட்டில் பக்தியும் தொண்டும் வளர்ந்தால் நாடு வளரும்; சிவநெறி வளரும்; செந்தமிழ் வளரும்; அல்லன அகலும்; அறம் வளரும்; அன்பும் அமைதியும் இன்பமும் வளரும்; எங்கும் அன்பே அமையும்; பெரு வாழ்வு தோன்றும் என்று கூறியுள்ளார்.

சுந்தரர் பற்றிக் கூறும்போது, சுந்தரர் வரலாறு நட்பில் சிறந்து விளங்கத் துணைசெய்யும். உயிர்த்தோழமை மனிதனை வளர்க்கும்; வாழ்விக்கும். நட்பு என்பது கடமை வழிப்பட்டது; சிறந்த நட்பில் பிழைகள் தெரியாது என்பர்.

மாணிக்கவாசகரைப் பற்றிக் கூறும்பொழுது ஞானவேட்கை கொண்ட மாணிக்கவாசகர் என்பர். மாணிக்கவாசகர் வரலாறு மூலம் சிறந்த தத்துவத்தை உணரலாம் என்கிறார். பகற்பொழுது இம்மையாகவும் இரவுப் பொழுது துன்பமாகவும் இருக்கும் என்பதை உணரவே பகலில் இன்பம் பயக்கும் பரிகள், இரவில் நரிகளாகித் துன்பம் விளைவிக்கும் என்ற தத்துவம் உணர்த்தப் பெறுகிறது என்று கூறியுள்ளார். அடிகளார் சமய இலக்கியக் கருத்துக்களில் எல்லாம் அற்புதமான சிந்தனையைச் சமய உலகுக்கு வழங்கி, மக்களுக்குச் செவிக்கின்பம் அளித்துள்ளார். இறை உணர்வு அவர்களின் சொற்பொழிவுகளின் ஒவ்வொரு வார்த்தைகளிலும் மிளிரும்.

46-ஆவது மகாசந்நிதானம் திருபெருந்திரு பொன்னம்பல அடிகளார் ஆன்மிகக் கருத்துக்களையும், சமூகக் கருத்துக்களையும் பல மேடைகளில் மக்களுக்கு வழங்கி வருகிறார்.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் அடிச்சுவட்டில் தடம்பதித்துச் செல்லும் இளைய ஞாயிறாகத் திகழ்கிறார்கள். அவர் பல

காலங்களில் பேசிய பேச்சுக்களின் தொகுப்பாக வெளிவந்துள்ள நூல் "சமய வாழ்வு" என்பது. அந்நூல் இருபத்து நான்கு தலைப்புக்களில் சமய மணம் கமழ, சமய சிந்தனையைப் படிப்பவர்களின் நெஞ்சங்களில் ஏற்படுத்தும்.

7.3.2002-இல் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் நடத்தப்பட்ட ரெ.முத்துக்கணேசனார் மணிவிழா அறக்கட்டளைச் சொற்பொழிவில் மகாசந்நிதானம் அவர்கள் பெரிய புராணம் காட்டும் சமுதாயம் என்னும் தலைப்பில் உரையாற்றினார்.

இறைவன் நாயன்மார்களின் பூசைகளில் ஏழை நாயனாராகிக் கண்ணப்ப நாயனாரின் பூசனையையே விரும்பி ஏற்றுக் கொண்டார் என்று பல அரிய கருத்துக்களை வழங்கிச் செவிக்கின்பம் அளித்தார்கள்.

## தொகுப்புரை

சைவத் திருமடங்கள் பதினெட்டில் குன்றக்குடித் திருமடமும் ஒன்று. நிருவாகத்தின் கீழ் ஐந்து திருக்கோயில்கள் உள்ளன.

இத்திருக்கோயில்களுக்குப் பலர் பல காலங்களில் திருப்பணிகள் செய்த போதிலும் தவத்திரு அடிகளார் காலத்தில் திருப்பணிகள் மிகுதியாக நிகழ்ந்துள்ளன.

திருக்கோயில்களில் திருவிழா எடுத்தல், உழவாரப்பணி, சமய நல்லிணக்க இயக்கங்கள் தோற்றுவித்து அவற்றின் வழி தொண்டு செய்தல். அருள்நெறித் திருப்பணி மன்றம், தமிழ்நாடு தெய்வீகப் பேரவை தொடங்கி நற்பணிகள் செய்தல். சமய, சமூக நூல்கள்

வெளியிடுதல் போன்ற பல அரிய நற்பண்புகளை இத்திருமடம் செய்து வருகின்றது.

உ.வே.சா போன்ற தமிழ்ப் புலவர்களை ஆதரித்து அவற்றின் வழியும் தமிழ்ப்பணியும் ஆற்றி வருகின்றனர்.

மடாதிபதிகள் இந்திய மாநிலங்கள் பலவற்றில் பலமுறையும், அந்தமானிலும், வெளிநாடுகள் பலவற்றிலும் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளனர்,

பல பல்கலைக்கழகங்களில் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி மாணவர்களுக்கும், பொதுமக்களுக்கும் தமிழ் அறிவு ஊட்டியுள்ளனர்.

# மேற்கோள் விளக்கம்

1. சன்மார்க்க தேசிகன் ஊரன் அடிகள், சைவ ஆதீனங்கள், ப.7.

2. மேலது, ப.474.

3. மரு. பரமகுரு, பறம்புமலை திருக்கொடுங்குன்றம், ப.

4. சன்மார்க்க தேசிகன் ஊரன் அடிகள், சைவ ஆதீனங்கள், ப.475.

5. மரு.பரமகுரு, குன்றக்குடி தலவரலாறு, ப.7.

6. பா.சுந்தர், அருள்நெறித்தந்தை அடிகளார், ப.9.

7. மேலது, ப.17.

8. அடிகளார், மண்ணும் மனிதர்களும், ப.151.

9. தமிழ்மாமுனிவர், அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் முதலாம் ஆண்டு குருபூசை மலர், ப.124.

10. அடிகளார், மண்ணும் மனிதர்களும், ப.151.

11. சன்மார்க்க தேசிகன் ஊரன் அடிகள், சைவ ஆதீனங்கள், பக்.483-484.

12. சோமலே, செட்டிநாடும் செந்தமிழும்,(கனியன் பூங்குன்றனார் காலம் முதல் கண்ணதாசன் காலம் வரை) ப.55.

13. தமிழ்மாமுனிவர், அருள்நெறித் தந்தைத் தவத்திரு குன்றக்குடி அடிகளார், முதலாம் ஆண்டு குருபூசை மலர், ப.130.

14. தமிழ்மாமுனிவர், அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார், முதலாம் ஆண்டு குருபூசை மலர், ப.131.

15. சாந்துப்புலவர், மயூரகிரிக் கோவை, ப.எசு.

16. மரு.பரமகுரு, ஆதீன வரலாறு, ப.18.

17. மதுரை ஜில்லா கரிசைபட்டி நாராயணசுவாமி அய்யர், சாணக்கிய தந்திரம், முன்பக்க அட்டை.

18. தமிழ்த் தென்றல் திரு.வி.க., சேக்கிழார் பெருமான் அருளிய திருத்தொண்டர் புராணம், பெரிய புராணம் அரும்பதவுரை, ப.14.

19. பொன்னீலன், தமிழகத்தின் ஆன்மீக வழிகாட்டி, ப.

20. சோமலெ, வளரும் தமிழ், பக்.95-96.

21. சன்மார்க்க தேசிகன் ஊரன் அடிகள், சைவ ஆதீனங்கள், ப.512.

# இயல் - 3

## சமுதாயம் - விளக்கம்

பல இனத்தவர், பல மதத்தவர், பல மொழிப் பேசுபவர், பல நிறத்தவர் அனைவரும் ஒன்றிணைந்து வாழும் அமைப்பே சமுதாயம். அதாவது, கூடிவாழும் மக்கள் கூட்டமே சமுதாயமாகும். ஒவ்வொரு தனிமனிதனும் சமுதாயத்தின் அங்கம். தனிமனிதன், சமுதாயம் இரண்டையும் ஒன்றினின்றும் ஒன்றைப் பிரித்தல் இயலாது.

"வீட்டுத் திண்ணையின் முன்னே தாழ்வாரம் இருந்தால் வெளியே இருக்கிற வெப்பமும், தட்பமும் தாக்காத வண்ணம் வசிக்கலாம். இல்லையானால் வெட்பமும், தட்பமும் வீட்டில் வசிப்பவர்களைத் தாக்கவே செய்யும். அதுபோல, சமுதாயம் என்ற தாழ்வாரம் இருந்தால் அதனுள் அடங்கிய தனிமனித வாழ்க்கை, இன்பம் தழுவியதாக இருக்கும்"[1] என்பது தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் சமுதாயம்- தனிமனிதன் பற்றிய சிந்தனைத் துளிகளாகும்.

## சமுதாய அமைப்பு - வகைகள்

எந்தவொரு பொதுப்பணிக்கும் ஓர் அமைப்பு என்பது இன்றியமையாதது. சமுதாயப் பணிக்கென்று பல அமைப்புக்கள் எல்லா நாடுகளிலும் அன்றும் இன்றும் செயல்பட்டு வருகின்றன. சமூகத் தொண்டுகளுக்காகச் சமூக விழிப்புணர்வு மையங்கள், தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள், பெண்களுக்கான சேவை மையங்கள், குழந்தைகள் காப்பகங்கள், முதியோர் இல்லங்கள், ஊனமுற்றோர் மறுவாழ்வு மையங்கள், கருணை இல்லங்கள், அரிமா சங்கங்கள்,

இளைஞர், மகளிர் நற்பணி மன்றங்கள், சமய, சமுதாய அமைப்புக்கள் போன்ற பல பொதுநல, தனிமனித, சமூக அமைப்புக்கள் சிறப்பாகச் செயல்பட்டு வருவதைக் காணமுடிகிறது.

சமய நிறுவனங்களாகிய திருமடங்கள், கத்தோலிக்க நிறுவனங்கள், இசுலாமியத் தொண்டு நிறுவனங்கள் போன்றவைகள் சமயத்தைச் சமுதாயப் பணிகள் மூலம் மக்களிடம் கொண்டு செல்கின்றன. ஏனெனில் தனிமனிதன் தன் தேவைகள் நிறைவானால்தான் தெய்வத்தையோ, மதக்கொள்கைகளையோ ஏற்றுக்கொள்வான்.

அதனால்தான் சமய அமைப்புக்கள் முதலில் மனிதனின் அடிப்படைத் தேவைகள் என்னென்ன என்பதைக் கண்டறிந்து அதை நிறைவு செய்தபின் மதத்தைப் போதிக்க ஆரம்பிக்கின்றன. அவ்வாறு பரவியது தான் கிறித்துவ மதம்.

### *சமுதாயப் பணி - விளக்கம்*

சமுதாயப் பணி ஓர் அறப்பணி; கடவுள் பணி, சமயம், மொழி, கல்வி, தொழில்நுட்பம், நாகரிகம், பண்பாடு, கலை, பொருளாதாரம் போன்றவைகளில் நம் நாடு இன்று முன்னேற்றப் பாதையில் செல்வதற்குக் காரணம் சமுதாயப் பணிச் சிறப்புடன் நடப்பதால் தான்.

"கடைக்கோடி மக்களையும் கடைத்தேற்ற" சமுதாய அமைப்புக்கள் சேவை மனப்பான்மையுடன் உண்மையான சமுதாயப் பணியாற்றிட வேண்டும். "சமூகப் பணி" ஒரு தொழிற்பணியாகக் கருதப்படுகின்றது. "சமூகப் பணி" என்பது ஒரு தனிமனிதனுக்கோ, குழுவிற்கோ, சமுதாயத்திற்கோ அதன் தேவைகளுக்கேற்பத் தேவைகளை நிறைவேற்ற

வாய்ப்புக்களை ஏற்படுத்திக் கொடுப்பது அல்லது வாய்ப்புக்களை எவ்வாறு அறிவது, அதை அறிவியல் துறையில் எவ்வாறு பயன்படுத்திக் கொள்வது என்பனவற்றை ஒருங்கிணைத்துத் தருவது. மேலும், வெர்னர் டபுள்யூ போகம் என்பவர் "சமூகப் பணி" என்பது மனிதனின் சமூகச் செயல் திறனை உயர்த்துவது."(2) என்கிறார்.

சமய நிறுவனங்களில் திருமடங்கள் சமுதாயப் பணியைப் பல கோணங்களில், பல காலமாக வழிவழியாகச் சிறப்புடன் செய்து வருவதை உணரமுடியும். "மடங்கள்" என்றால் "மந்திரங்கள் ஒலிக்குமிடம்" என்ற பழைய வழக்கு மாறி இன்று மடங்கள் என்றால் "மக்கள் பணி நடக்கும் ஒரு சமூக நிறுவனம்" என்ற புது வழக்கு உதயமானது.

சைவ ஆதீனங்கள் பதினெட்டில் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் சைவப்பயிரைவிட சமுதாயப் பயிரையும், தமிழ்ப் பயிரையும் நன்கு வளர்த்து வருகின்றது என்பதில் ஐயமில்லை. இவ்வாதீனம் செய்துள்ள சமுதாயப் பணியை ஆதீனக் குருமுதல்வர் காலத்திலிருந்து விளக்கிக் கூறுவதே மூன்றாவது இயலாகிய சமுதாயப் பணியின் நோக்கமாகும்.

## ஆதீன குருமுதல்வர்

திருவண்ணாமலை ஆதீனக் குருமுதல்வர் திருவருள் திரு.தெய்வசிகாமணி தேசிக பரமாச்சாரியச் சுவாமிகள் ஞானக்குழந்தையாக இம்மண்ணில் அவதரித்து, இறையருளால் அவர்கள் பல அற்புதங்கள் நிகழ்த்தியதை வரலாறு சுட்டுகின்றது.

திருவண்ணாமலையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்து

வந்தவர் "வீரவல்லாள தேவன்." அவர் ஆட்சிக்காலம் கி.பி.1291-1342. அவரது ஆட்சியின் தொடக்கக் காலத்தில் 40 வயது நிறைந்தவராகக் குருமுதல்வர் விளங்கினார்.

"வீரவல்லாள தேவன்" திருவண்ணாமலையைத் தலைநகராகக் கொண்டு (கி.பி. 1291-1312) ஆட்சி செய்தார். அக்காலத்தில் ஒருநாள் அவர், குதிரை வீரர்கள் புடைசூழப் பவனி வந்தார்.

அப்போது அவருடைய பட்டத்துப் புரவி பதறி வீழ்ந்தது; வாயில் நுரை கக்கிற்று; சிறிது நேரத்தில் உயிரிழந்தது; இதனால் எங்கும் பரபரப்பானது. அரசர் மிகுந்த கவலையுற்றார். மக்கள் வருந்தினர்.

அவ்வேளையில் அருட்பெருங்குரவராகிய குருமுதல்வர் அங்கே தோன்றினார். அரசர் தவமுனிவரின் திருவடியை வணங்கினார். குறை நீக்க வேண்டினார். அரசரை நோக்கிக் குருமுனிவர் குறுநகை புரிந்தார். திருநீறெடுத்துத் திருமந்திரம் திருவைந்தெழுத்தை ஓதித் திருவருளைச் சிந்தித்தார்; திருநீற்றைப் புரவிமீது தெளித்தார். புரவி படுத்துறங்கி விழித்தெழுந்தது போல் எழுந்தது. மன்னர் மட்டிலா மகிழ்ச்சி கொண்டு கரங் குவித்து அண்ணலை வணங்கினார். மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் அழுந்தினர். குருமுனிவர் தம் திருக்கரத்தால் மன்னனையும், மக்களையும் வாழ்த்தி அருளினார்.

கருணை நிறைந்த குருமுதல்வரின் இந்த அற்புத வரலாற்றைத் திருவண்ணாமலை அருணாச்சலேசுவரர் திருக்கோயிலின் தெற்கு மதிற் சுவரிலுள்ள புடைப்புச் சிற்பம் உணர்த்துகின்றது. குருமுதல்வரின் திருவருளால் மேலும் பற்பல சித்துக்கள் நிகழ்ந்தன; கொடிய விலங்குகள்

தம் குணம் நீங்கி உறவு கலந்து வாழ்ந்தது. சிறுத்தையும் பசுவும் ஒன்று கூடி மகிழ்ந்து விளையாடின. இந்த உலகம் அறியாத புதுமை கண்டு, மக்கள் வியந்தனர்"[3] என்பர்.

வீரவல்லாள தேவரின் பட்டத்துப் புரவியை எழுப்பித் தருமாறு அமைச்சர் முதலியோருடன் வீரவல்லாள தேவர் குருமுதல்வரிடம் வேண்டும் காட்சி, மன்னரின் பட்டத்துப் புரவியை எழுப்பித்தர எழுந்தருளுவதாகக் குருமுதல்வர் திருவுள்ளம் கொண்டருளும் காட்சி போன்றவைகளோடு பட்டத்துப் புரவியை உயிர்ப்பிக்கும் காட்சி, அரசரின் அழைப்பை ஏற்று அரண்மைக்குச் சிவிகையில் எழுந்தருளும் காட்சி, பட்டத்து அரசியுடன் அரசர் வந்து குருமுதல்வரைக் கண்டு தன் குழந்தையின் நோய் தீர்க்க பிராத்திக்கக் குருமுதல்வர் அருளாசி வழங்கும் காட்சி ஆகியவைகளைத் திருவண்ணாமலை அருணாச்சலேசுவரர் திருக்கோயில் தெற்கு மதில் சுவரில் காணமுடிகிறது.

இவ்வாறு குருமுதல்வர் ஞானக்கடலாக இருந்து மக்களின், மன்னனின் துயர் துடைத்துச் சமுதாயப் பணியில் கடவுள் நிலையில் உயர்ந்து நின்ற அவரின் அற்புதச் செயல்பாடுகள் என்றும் நிலைத்து நின்று ஆதீனத்திற்குப் பெருமை சேர்க்கின்றன.

## குருமுதல்வருக்குப் பின் வந்த சுவாமிகளின் சமுதாயப் பணிகள்

திருவண்ணாமலை ஆதீன குருமுதல்வருக்குப் பின் வந்த சுவாமிகளில் பலர் திருவருள் பணியும், சைவப் பணியும், தமிழ்ப் பணியும் செய்துள்ளனர். சிலர் போற்றுதலுக்குரிய சமுதாயப் பணியில் உயர்ந்து நின்றுள்ளனர்.

40-ஆம் பட்டம் தாண்டவராயத் தேசிக சுவாமிகள் (கி.பி.1893-1902) அவர்கள் மக்களுக்குப் பல உதவிகள் செய்து சிறந்த கொடை வள்ளலாகத் திகழ்ந்துள்ளார்கள். "வறியவருக்கு ஒன்று ஈவதே ஈகை" என்பதற்கேற்பச் சுவாமிகள் ஏழை மக்களுக்கு ஆதீனத்தின் வருவாயைக் கூட நினைக்காமல் வாரி வழங்கியுள்ளனர். இவர்களின் கொடைத் தன்மைப் பற்றி, குன்றக்குடி சங்கீத சாகித்ய வித்வான் இரட்டைப் பல்லவி சக்கரதானம் கிருஷ்ண ஐயர்,

"நீண்டகை யான்; புகழ் நீதிகள் ஞானம் நிலைக்க வந்த
பண்டவர் தோழன், இவன் என்று பாரீர் பணிந்திடுவர்
வேண்டும் எலாம் தரும் மேகம், சுரபி, தருவியக்கும்
தாண்டவராய தயாநிதி தன் கொடைத் தன்மை கண்டே"(4)

என்று பாடியுள்ள இப்பாடல் இவரின் கொடைத் தன்மைக்குச் சான்றாகும்.

41-ஆம் பட்டம் நடராச தேசிக சுவாமிகள் (கி.பி.1902-1905) சிறந்த புண்ணிய சீலராக விளங்கியுள்ளார்கள். இவர்களின் அருளாட்சிக் காலத்தில் திருமடத்தின் சொத்துக்களும், திருக்கோயில் சொத்துக்களும், வெளியார் கைவசம் இருந்துள்ளன. அவர்களிடமிருந்து சொத்துக்களைக் காத்து அபிவிருத்திச் செய்து மக்களுக்குப் பொருள் உதவியும் பிற உதவிகளும் செய்துள்ளார்கள்.

45-ஆம் பட்டம் திருவருள் திரு தெய்வசிகாமணி பரமாச்சாரிய சுவாமிகளைக் குன்றக்குடி ஆதீனத்திற்கு அழைத்துவந்து பெருமை சேர்த்தவர் 44-ஆம் பட்டம் ஆறுமுக தேசிக சுவாமிகள் ஆவர். இவர்கள்

குன்றக்குடியில் "வானொலிப் பூங்கா" அமைத்துள்ளார்கள். மற்றும் திருக்கோளக்குடித் திருக்கோவிலுக்கு மின்சார வசதி செய்துள்ளார்கள்.

ஆதீன அடியவர்களில் மிகவும் போற்றுதலுக்குரியவர் ஞானப்பிரகாச முனிவர். இவர்கள் காலச் சூழலால் இலங்கையில் இருந்து தமிழகத்திற்கு வந்தார்கள்.

தமிழகத்தில் திருவண்ணாமலையில் இருந்த திருவண்ணாமலை ஆதீனத்தை அடைந்து ஆதீன குருமூர்த்திகளின் கட்டளைப்படி வடநாட்டிற்குத் தீர்த்த யாத்திரை மேற்கொண்டு மீண்டும் திருவண்ணாமலை ஆதீனத்தை அடைந்து அக்காலத்தில் இருந்த குருமூர்த்திகளிடம் சந்நியாசம் பெற்றுக்கொண்டு சிவாகமங்களை ஓதி உணர்ந்தார்.

திருவண்ணாமலையில் சிலகாலம் இருந்த பின் சிதம்பரம் சென்றார். அங்குச் சிற்றம்பலத்தாரை வழிபட்டதோடு மக்களுக்குப் பயன்படும் வகையில் சிறந்த சமுதாயத் தொண்டும் செய்து வந்துள்ளார்.

சிதம்பரத்தின் திருக்கோயிலுக்குத் தென்கிழக்கு மூலைப் பகுதியில் திருக்குளம் ஒன்று அமைத்தார். அந்தத் திருக்குளம் இன்றும் "ஞானப்பிரகாச திருக்குளம்" என்ற பெயரோடு வழங்கப்படுகிறது. இதற்குச் சான்றாக அக்குளத்திற்கருகில் கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது.

சங்கரலிங்க முனிவர் (கி.பி.1710-1760) ஆதீனம் பிரான்மலையில் இருந்த போது குன்றக்குடியில் தங்கியிருந்த மாமுனிவர் இவர்கள் காலத்தில் விடுதலைப் போராட்ட வீரர்களாகிய மருதுபாண்டியர்கள்

சிவகங்கைச் சீமையை ஆண்டுவந்தார்கள். மருது பூபதிக்கு ஏற்பட்ட ராஜபிளவை நோய் காடன் செட்டியார் குன்றக்குடி முருகப் பெருமானை நினைத்துப் போட்ட திருநீரால் நீங்கியது என்பது வரலாற்று உண்மையாகும். மருது மன்னர் காடன் செட்டியாருடன் குன்றக்குடி வந்து சங்கரலிங்க முனிவரை வணங்கி, அவரிடம் அளவுகடந்த பொற்காசுகளைக் காணிக்கையாக வழங்கினார். அதனை ஏற்க மறுத்த முனிவர் அதனைக் கொண்டு "செம்பொன்மாரி" என்ற கிராமத்தை உருவாக்கினார் என்பதும் வரலாறாகும்.

வேலாயுத தம்பிரான் சுவாமிகள் "பரதேசி முத்திரை" என்ற மரியாதையைப் பெற்றவர். இவர் ஒரு சமயம் குன்றக்குடிக்கு அருகிலுள்ள "காட்டாத்தாங்குடி" என்னும் சிற்றூருக்குச் சென்றுள்ளார். அப்பொழுது ஆதீனத்தின் சார்பாக அவ்வூரில் உள்ள பொய்சொல்லா மெய்யர் என்னும் அய்யனாருக்குப் பூசை நடந்தது. அப்பொழுது மழையில்லாமல் மக்கள்படும் துன்பத்தை ஊர் மக்கள் சுவாமிகளிடம் கூறினர்.

மக்களின் அத்துன்பத்தைப் போக்க சுவாமிகள் அவ்வூர் அய்யனாரை நோக்கி ஒரு திருப்பாடல் பாடியுள்ளார். பின்பு அய்யனார் அருளால் அப்பகுதியில் நன்கு மழை பெய்து; மக்கள் மனம் குளிர்ந்து; வறட்சி நீங்கியுள்ளது. இவ்வாறு ஆதீன அடியவர்கள் அவர்கள் காலத்தில் மக்களுக்கு எது தேவையோ அதையறிந்து காலத்திற்கேற்ற சமுதாயப் பணி ஆற்றியுள்ளார்கள்.

## 45-வது மகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் சமுதாயப் பணிகள்

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனக்குருமகா சந்நிதானங்களில் அளப்பறிய பயனுள்ள சமுதாயப் பணிகள் செய்து "குன்றில் விட்ட விளக்காக" "வெள்ளிடை மலையாக" விளங்கியவர் தவத்திரு அடிகளார் என்றால் அது மிகையாகாது.

"தொண்டிலே மனிதநேயம் தொடங்குகிறது

தியாகத்தில் மனிதம் முழுமை பெறுகிறது"

என்ற வைரவரிகளுக்குப் பாத்திரமானவர்.

"மக்களுக்குச் செய்யும் தொண்டே

மகேசனுக்குச் செய்யும் தொண்டு"

என்ற கொள்கையில் வாழ்ந்து காட்டிய தீயாகச் சுடர் "மெழுகு" போல் சமூகத்தின் ஒளிக்காகத் தன்னையே எரித்துக் கொண்ட அணையா விளக்கு. அவர்களின் சிந்தனை, செயல், உழைப்பு, முயற்சி, நம்பிக்கை அத்துனையும் மக்கள் நலனை முதன்மை நோக்காகக் கொண்டவை.

### அடிகளாரின் சமுதாய முற்போக்குச் சிந்தனைகள்

சமயம், சமுதாயம் தனித்தனி அமைப்பல்ல; இணைந்த இரண்டு கைகள் போன்றதாகும். "சமயம்" சமுதாயத்தை உயர்த்தத் தோன்றிய உன்னதமான அமைப்பு. சமுதாய வளர்ச்சிக்குச் சமயம் பெரும்பங்கு வகிக்கிறது. சமயத்தால் தான் தனிமனித ஒழுக்கமும், சமூக ஒழுக்கமும்

காக்கப்படுகிறது- என்ற உயரிய சமூகச் சிந்தனை உடையவர் அடிகளார் அவர்கள்.

சமுதாயத்தில் சமயத்தின் பங்கு, சமயப் பெரியவர்களின் பங்கு என்ன என்பதில் அடிகளார் ஒரு புதிய நெறியை உருவாக்கினார்கள். மக்களிடமிருந்து எட்டி நிற்பதல்ல மடமும், ஆதீனமும்; அவை இணைந்து நிற்க முடியும்; இணைந்து நிற்கவேண்டும் என்ற புதிய சிந்தனை கொண்டவர்கள்.

"பழையன கழிதலும்

புதியன புகுதலும்

வழுவல; கால

வகையினனானே"

என்பது மதத்திற்கு மாறுபட்ட கருத்தல்ல என்ற சிந்தனை கொண்டவர்கள்.

"சத்தியம் வளரும்; மாறும்

தருமங்கள் மாறும்; வாழ்வில்

உத்தி மற்றொழுக்கம் மாறும்;

உயர்ந்தவை என்று கண்ட

தத்துவம் மாறும்"

என்ற அணுகுமுறையோடு செயல்பட்டவர் அடிகளார். "தனிமனிதனைச் சமுதாய வாழ்வுக்கு அழைத்துச் செல்வது சமயம், ஆசைகள் இருக்கலாம்;

அது மனித இயற்கை. தன்னலம் பிறர் நலத்தின் மீது கைவைக்காதபடி தடுத்து நிறுத்தி ஒழுக்க நெறியைக் காட்டுவது சமயம்"[5] என்ற சிந்தனையைச் சமுதாயத்திற்கு வழங்கி, தானும் அந்தச் சிந்தனைப்படி வாழ்ந்து பிறரையும் வாழ வைக்க அயராது உழைத்தவர்.

## அடிகளார் நோக்கில் தனிமனிதன் - சமுதாயம்

மக்கள் கூட்டம் சமுதாயம் எனப்படும். ஒவ்வொரு தனிமனிதனும் சமுதாயத்தின் உறுப்பினன். தனிமனித வளர்ச்சி சமுதாய வளர்ச்சிக்கு உறுதுணையாக அமைகின்றது. தனிமனித உரிமைகள் போற்றப்பட வேண்டும். "நான்" என்ற தன்னலச் சார்பு சமுதாய வளர்ச்சிக்குக் கேடு பயக்கின்றது; சமுதாயத்தைச் சுரண்டி வாழவும் தூண்டுகின்றது.

"நான்" என்ற உணர்ச்சி "நாம்" என்ற நிலைக்கு வளர்ச்சியடைய வேண்டும். "நாம்" என்னும் பொதுநல உணர்வு வளர்ந்தால் அதனுள் அடங்கிய "நான்" என்னும் தனிமனித உரிமைகளும் வளரும் என்பது அடிகளார் அவர்களின் கருத்து.

நாம் எந்த அளவிற்குச் சமுதாயத்திலிருந்து பெற்றுக் கொள்கிறோமோ குறைந்தது அந்த அளவிற்காவது சமுதாயத்திற்குப் பயன்படல் வேண்டும்.

பாராட்டு, விளம்பரம், புகழ் முதலிய மயக்கங்களிலிருந்து விடுபட்டு சிறுதளவேனும் சமுதாய நலனுக்கு உழைத்தல் வேண்டும். இவ்வாறு தனிமனித சமுதாய இணைப்புப் பாலம் உருவாதல் வேண்டும் என்பது அடிகளார் விருப்பமாகும்.

## அடிகளார் ஆற்றிய சமுதாயப் பணிகள்

உத்தரவு போடும் சந்நிதானங்கள் பாணியில் இல்லாமல் சமுதாய அமைப்பைச் சரியான வழியில் இயக்கும் சனநாயகத் தலைவரின் சகல பண்புகளும் அடிகளார் அவர்களிடம் குடியிருந்தன.

திருமடத்தின் தலைவராக இருந்த அவர் வெறும் சமயப் பணிகள் மட்டும் செய்ய விருப்பம் கொள்ளாமல் சொல்லுதற்கரிய, போற்றுதலுக்குரிய மிகச்சிறந்த சமூகப் பணிகளாற்றியுள்ளார்கள்.

நாடு விடுதலைப் பெற்றுப் பல பத்தாண்டுகள் கடந்தும் வறுமையும்; எழுத்தறிவின்மையும் ஒழிக்கப்படாமையும், பிற வழிபட்ட சாதி வேற்றுமை நாளும் உரம் பெற்று வருவதையும் எண்ணிக் கவலை கொண்டார். மத மரபுகள் காத்துச் சமயப்பணி ஆற்றும் பொறுப்பு மிக்கவராயினும், மக்கள் பணி ஆற்றுவதிலே ஆர்வம் கொண்டவரானார்.

"நமக்குப் போர்க்குணம் மிகுதியும் உண்டு, ஆனால் ஒரேவொரு குறை. நமது போர்க்குணம் மனிதர்களுடன் போராடுவதிலேயே கழிகின்றது. மனித குலத்தின் பொதுப் பகையாகிய சாதி வேற்றுமைகள், வறுமை ஆகியவற்றை எதிர்த்துப் போராடுவதில் ஈடுபடுத்தப்படுவதில்லை"(6) என்று அடிகளார் கூறுவார்கள். சமயத் தொண்டுகள் பொருளுடையதாக வேண்டுமானால் சமுதாய வாழ்வில் படிந்துள்ள குறைகள் நீக்கப்பட வேண்டும் என்றும் கூறுவர்.

"சமயம் அமைந்தது சமுதாயம் நலன் காக்கவே" என்னும் நோக்கம் அடிகளாரிடம் மேலோங்கிய போது சமயவாதிகள் குறிப்பாக ஆதீனங்கள் அடிகளார் சமய மரபைக் காக்கவில்லை என்றுகூடக் குறை பேசினார்கள்.

ஆனாலும் அடிகளார் அவற்றைப் பொருட்படுத்தாமல் தமது பாதையில் தொடர்ந்து நடைபோடலானார். "உலகம் வாழ வாழ்வது தான் துறவு நெறி" என்ற புதிய நெறிகண்ட புது வேதம் தான் அடிகளார் அவர்கள். இன்றைய சமுதாயம் பற்றிக் கூறும் போது, இன்றைய சமுதாயம் ஒழுங்கான பழத்தோட்டம் போல் இல்லாமல் ஒழுங்கற்ற காடுகள் போல் தான் விளங்குகின்றன என்பார்.

"மனித சமுதாயம் ஆயிரமாயிரம் ஆண்டுகளாகத் தோன்றி வளர்ந்து வந்திருக்கிறது. மனித வரலாற்றில் எத்தனையோ ஏற்றங்களும் இறக்கங்களும் ஏற்பட்டுள்ளன. பல திருப்பங்களும் ஏற்பட்டுள்ளன. மனித வரலாற்றில் நீண்ட நெடிய இழையோட்டமாகத் தொடர்ந்து வருவது அறவுணர்வும், நீதி உணர்வுமாகும். இவ்வுணர்வுகள் சமுதாயத்தில் மேம்பட்ட காலத்தில் எல்லாம் சமுதாயம் மேலோங்கி வளர்ந்திருக்கிறது. அது தளர்ந்த பொழுதெல்லாம் சமுதாயம் தாழ்வில் தங்கிக் கிடந்திருக்கிறது"(7) என்பர். இதுதான் இன்றைய சமுதாய நிலை.

இந்நிலையை மாற்ற அடிகளார் அவர்கள் மேற்கொண்ட சமுதாயப் பணிகளை,

1. பூதான இயக்கப் பணிகள்.
2. நாயன்மார்கள் அடிச்சுவட்டில் சமுதாயப் பணிகள்.
3. குடிகளைத் தழுவிய பணிகள்.
4. அடிகளாரது கிராமப்புற வளர்ச்சிப் பணிகள்.
5. கிராம ஏற்புத்திட்டப் பணிகள் இயக்கம்.

6. கல்விப் பணிகள்.

7. தீண்டாமை ஒழிப்புப் பணிகள்.

8. துயர்துடைப்புப் பணிகளில் அடிகளார்.

9. அமைதிப் பணிகள்.

10.பிறபணிகள், என வரையறை செய்யமுடியும்.

## 1. பூதான இயக்கப் பணிகள் அடிகளார்.

ஏழை மக்களின் நல்வாழ்விற்காகப் பூதான இயக்கத்தை வினோபாபாவே தொடங்கினார். "பூதான இயக்கம்" என்பது நிலமற்ற ஏழைகளுக்கு நிலசுவான்தார்களிடம் இருந்த நிலம் பெற்று நன்கொடையாக வழங்குவது ஆகும்.

இவ்வரிய பணியைத் தமிழகத்தில் வினோபாபாவே செய்து வந்தார்கள். தமிழகத்திற்குப் பூதான இயக்கத்தின் பொருட்டு வினோபாபாவே கால்நடைப் பயணம் மேற்கொண்ட பொழுது அடிகளார் நிலநன்கொடை பெற உதவினார். அதோடு குன்றக்குடி ஆதீனத்திற்குச் சொந்தமான நிலங்களில் சில பகுதிகளை நன்கொடையாக வழங்கினார். இதற்குப் பல மடங்களில் இருந்து எதிர்ப்புத் தோன்றிய பொழுது,

"வாழ்வோர்க்கே வழக்குரைக்கும் இன்றைய மதநெறி மாறி, பாமரனையும் பரமனின் பதம் அழைத்துச் செல்லும் உண்மையான அருள்நெறி பரவ வேண்டுமானால் இவை போன்ற கொடைகள் இன்றியமையாதன. ஆகையால், தேவையானால் சமயத்தை வளர்க்க நமது மடத்தில் கடைசிக் கல்லையும் பெயர்த்துத் தானமாக

வழங்குவோம்"[8] என்று கூளுரைத்தார். அதனால் அவர்கள் மேற்கொண்ட பூதான இயக்கப் பணிகளில் "முன்வைத்த காலை பின்வைக்காமல்" முன்னேறி வெற்றி கண்டுள்ளனர்.

## 2. நாயன்மார்கள் அடிச்சுவட்டில் சமுதாயப் பணிகள்

"மக்களின் நலத்துக்கு மதமா? அன்றி மதத்தின் நலத்துக்கு மக்களா? சொல்வீர்"[10] என்று கேள்வி கேட்டார் பாரதிதாசன். சமயம் சார்ந்த சமுதாயம் காணுவதையே நோக்கமாகக் கொண்ட அடிகளார் மக்கள் வாழ்வை வளப்படுத்தும் முயற்சியில் தோன்றியவையே மதங்கள் என்கிறார்.

சமயப் பணிகளுடன் சமுதாயப் பணிகளையும் இணைத்துச் செயல்படுத்தி வந்தார். அப்பரடிகளின் வாழ்க்கையில் சமயப் பணிகளை விட, சமுதாயப் பணிகளே மிகுதி என்பர். நாயன்மார்கள் அறுபத்து மூவரின் திருத்தொண்டுகளைக் கூறும் திருத்தொண்டர் புராணம் தொண்டின் பெருமையால் "பெரிய புராணம்" எனப் பெயர் பெற்றது என்ற எண்ணம் கொண்டவர்.

ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய அப்பரடிகள் பக்தி நெறியுடன் தொண்டு நெறியையும் பரப்பினார். பாடும் பணியுடன் உழவாரத் தொண்டையும் செய்தார். திருக்கோயில்கள் மட்டுமின்றி வீதிகளையும் தூய்மை செய்தார். இதனைப்

"பார்வாழ் திருவீதிப் பணி செய்வார்"

என்னும் பெரிய புராணப் பாடல் அடிகளைக் கொண்டு அறியலாம். பாரதியாரும்,

“சந்தி தெரு பெருக்கும் சாத்திரம் கற்போம்”[10]

என்று அப்பரடிகள் அடிச்சுவட்டில் பாடியுள்ளார்.

இவ்வாறான கருத்துக்களின் மீது கொண்ட ஈடுபாட்டால் அடிகளார் 1972-ஆம் ஆண்டில் பெரிய புராணத்தில் இடம் பெற்றுள்ள அடியார்களது திருநாள்களில் ஆற்ற வேண்டிய சமுதாயப் பணிகளை நிரல்படுத்தி, “நாயன்மார்கள் அடிச்சுவட்டில்” என்னும் ஒரு நூலை வெளியிட்டுள்ளார்.

அந்நூலில் உள்ளவாறு அடியார்களது திருநாளில் திருமடத்தின் சார்பில் சமுதாயப் பணிகளைத் தொடர்ந்து ஆற்றி வந்தார். இதன் பொருட்டுத் தமது அலுவலகத்தில் தனிப்பிரிவு ஒன்றையும் தொடங்கி நடத்தி வந்தார்.

பெரிய புராண அடியார்களது திருநாள்களை அறுசுவை உணர்வுடன் கூடிய விழாக்களாகவும், பேச்சு மேடையாகவும் கொண்டாடாமல் அடிகளார் சமுதாயத்தின் துயர் துடைப்புப் பணிகளுக்குரிய நாள்களாகவே செய்து வந்தார்.

திருக்குறிப்புத் தொண்ட நாயனார் நாளில் பரிவட்டத் தூய்மை, நமிநந்தியடிகள் நாளில் திருவிளக்குகள் சீர்மை செய்தல், திருநாளைப் போவார் (நந்தனார்) நாளில் தீண்டாமை விளக்குப்பணி, சுந்தரமூர்த்தி சுவாமிகள் நாளில் சிவாச்சாரியார்களின் நிலை பற்றி ஆய்வு செய்து அவர்களுக்கு ஆவன செய்தல், குலச்சிறையார் நாளில் சமயப் பாதுகாப்பு, கண்ணப்பர் நாளில் பார்வை குறைபாடு உள்ளவர்களுக்குக் கண் பரிசோதனை, கண் மருத்துவம், கண்ணாடி வழங்கல், உருத்திர பசுபதியார் நாளில் உருத்திர செபம், ஆனாயர் நாளில் மங்கல இசைக்

கருவிகள் சீரமைத்தல், திருஞானசம்பந்தர் திருநாளில் தமிழ் வளர்ச்சிக்குரிய பணிகள், அப்பரடிகள் நாளில் உழவாரப்பணி என ஒவ்வொரு நாயன்மார் திருநாளிலும் அவரவர் செய்த திருத்தொண்டுகளைச் செய்தல், என்றொரு நடைமுறைத் தொண்டை நாயன்மார் அடிச்சுவட்டில் ஏற்படுத்தி நடத்திவந்தார் அடிகளார். பெரிய புராணத்திற்குச் செயல் வடிவம் கொடுத்தவர் அடிகளார்"[11] என்று கூறுவர்.

## 3. குடிகளைத் தழுவிய பணிகள்

இன்று சமயம், சமுதாயத்தினின்றும் விலகித் திருக்கோயில்களிலும், திருமடங்களிலும் வாழ்கின்றது. "நீங்கள் யாருக்கு மதபோதனை செய்ய விரும்புகின்றீர்களோ அவர்கள் இடைவிடாமல் தங்கள் வயிற்றுப் பிழைப்பைப் பற்றியே சிந்திக்க வேண்டியவர்களாக இருக்கின்றார்கள். அவர்களுக்கு இந்தக் கவலையில்லாமல் செய்தாலன்றி உங்கள் உபந்நியாசங்களும் பிறவும் எவ்வகைப் பயனும் தரமாட்டா"[12] என்னும் விவேகானந்தர் கூற்றுப்படி, வாழும் மனிதர்களுக்கு வாழும் வழிமுறைகளைக் காட்டி நிற்பதே உண்மையான சமுதாயப்பணி என்ற கருத்தில் வலுவான நம்பிக்கை கொண்டவர்கள் அடிகளார். மேலும்,

"கோவிலைத் தழுவிய குடும்பங்களும்
குடும்பங்களைத் தழுவிய கோவிலும்
அமைகிற சமுதாயத்தை உருவாக்குவதே
நம்பணியின் குறிக்கோளாக இருத்தல் வேண்டும்"[13]

என்ற கொள்கை உடையவராக வாழ்ந்தார்கள்.

திருக்கோயில்களில் கிடைக்கும் வருவாயை அந்தத் திருக்கோயில் வழியோ அல்லது வேறொரு திருக்கோயில் மூலமாகவோ சமுதாயப் பணிக்காகச் செலவு செய்து வந்தார்.

"ஆதீனக் குடிமக்கள், பரம்பரைப் பணியாளர்கள் மட்டுமல்ல; திருமடத்தில் பணியாற்றும் அனைவரையும் நிலத்தின் குத்தகைதாரர்களையும், விவசாயிகளையும் தமது குடிமக்களாகப் பார்த்த பெருந்தன்மை மகாசந்நிதானத்துக்கு உண்டு. தலைமுறைகள் கடந்தும் பணியாற்றுகின்ற பணியாளர்களும் பலர் உண்டு"(14) என்பர். ஆதீன குடிமக்களுக்கு அடிகளார் குளிர் நிழல் தரும் ஆலமரம் போல் இருந்துள்ளார்.

"நமது சமுதாயத்தில் சமய நிறுவனங்கள் ஆடம்பரமான வாழ்க்கை முறை படோபமான திருவிழாக்கள் நடத்துகின்றன. அதே போழ்து நமது சமுதாயத்தைச் சேர்ந்த பலகோடி மக்கள் ஊமையராய்ச் செவிடராய்ப் பாழ்பட்டுப் புழுதியில் கிடப்பதைச் சமயத் தலைவர்கள் உணரத் தவறுகின்றனர். மக்களைத் தழுவி வளர்க்காத சமய நிறுவனங்கள் எதற்காக? என்ற வினாக்களை வரலாறு எழுப்பத்தான் செய்யும்"(15) என்னும் அடிகளாரது கூற்று சமய நிறுவனங்கள் என்றும் எண்ணிப் பார்க்கத்தக்கதாகும்.

## 4. கிராமப்புற வளர்ச்சிப் பணிகள்

அருள்நெறித் தந்தையின் கிராமப்புற வளர்ச்சிப் பணிகள் நீண்ட நெடிய விவரிக்க முடியாத பணிகள் என்றுகூடக் கூறலாம். "கிராமங்களுக்குச் சேவை செய்வது சுயராஜ்யத்தை நிலை

நிறுத்துவதாகும். இதைத் தவிர மற்றவை எல்லாம் சோம்பேறித்தனமான கனவேயன்றி வேறில்லை" என்பது காந்தியடிகளின் அமுத வாக்கு.

அருள்நெறித் தந்தை அடிகளார் கிராமத்தில் தோன்றி வளர்ந்தவர்கள். கிராம மக்களின் அவல நிலைகளை நேரில் கண்டறிந்தவர்கள். மேலும் இந்தியத் தலைவர்களான காந்தியடிகள், நேருஜி, வினோபாவே முதலியவர்களின் கோட்பாடுகளில் ஆழ்ந்த நம்பிக்கையும் ஈடுபாடும் உடையவர்கள். ஆகையால் கிராமப்புற மேம்பாட்டுப் பணி என்பது அருள்நெறித் தந்தையின் குருதியோடு கலந்த இலட்சியமாகும்.

ஆதீன அருளாட்சிப் பொறுப்பேற்றதும் குன்றக்குடி மக்கள் நல மேம்பாட்டுப் பணிகளைத் தொடங்கிவிட்டார். சிறுசிறு பணிகள் முதலில் தொடங்கப் பெற்றன. 1959-இல் மருதுபாண்டியன் காந்தி கிராமத் தொழிற்சங்கம், 1960-இல் கூட்டுறவு விவசாய நாணய சங்கம், 1962-இல் கூட்டுறவு பால் பண்ணை, 1966-இல் நேருஜி அட்டைப் பெட்டித் தொழிற் கூட்டுறவுச் சங்கம், தீப்பெட்டித் தொழிலகம் எனப் படிப்படியாகத் தொடங்கி நடத்திவந்துள்ளார்.

1976 அக்டோபர் 2-ஆம் நாள் அண்ணல் காந்தியடிகளின் பிறந்த நாளன்று ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப் பெற்றது. குன்றக்குடி கிராமத்திலுள்ள முக்கியமானவர்கள் அந்தக் கூட்டத்திற்கு அழைக்கப் பெற்றனர். கிராமப் பணிக்கு ஒத்துழைப்புக் கோரப்பட்டது. அவர்களும் இசைந்தனர்.

திட்டம் தொடங்கப் பெற்றது. குன்றக்குடி கிராமத்தில் உள்ள குடும்பங்களின் பொருளாதார நிலை, கல்வி நிலை முதலியன பதிவு

செய்யும் வகையில் ஒவ்வொரு குடும்பத்திற்கும் குறிப்பேடு அச்சிடப் பெற்றது. ஒவ்வொரு நாள் காலையிலும் ஐந்தாறு குடும்பத் தலைவர்கள் அழைக்கப் பெற்றனர்.

அவர்களின் குடும்பநிலை, வருவாய் நிலை, கல்வி நிலை, வேலையற்றோர் நிலை முதலிய விவரங்கள் குடும்பக் குறிப்பேட்டில் பதிவு செய்து கொள்ளப் பெற்றன.

வேலை இல்லாதோர் அனைவருக்கும் வேலை வாய்ப்பு அளிப்பதில் இடர்ப்பாடு ஏற்பட்டாலும் அவர்களின் பொருளாதார நிலை மேம்பாடு அடையும் வகையில் வழிநடத்தப் பெற்றனர். பெரும்பாலான குடும்பங்களுக்கு வங்கிக்கடன் பெற்று அரசு மானியத்தோடு கறவைமாடுகள் வாங்கித்தரப் பெற்றன.

இப்படிப்பட்ட கிராமப்புற வளர்ச்சிப் பணிகள் நடைபெற்றுக் கொண்டிருந்த போதுதான் காரைக்குடி மத்திய மின்வேதியியல் ஆய்வகத்தின் தொடர்பு அடிகளாருக்கு வாய்த்தது. அப்போது ஆய்வகத்தின் இயக்குநராக இருந்த எச்.வி.கே உடுப்பா அவர்களும், ஆய்வக விஞ்ஞானிகளும் குன்றக்குடி கிராமத் திட்டப் பணிக்கு உதவ முன்வந்தனர்.

## குன்றக்குடித் திட்டம்

1977 அக்டோபர் 2-ஆம் நாள் "குன்றக்குடி கிராமத் திட்டக்குழு" உருவானது. காரைக்குடி மத்திய மின்வேதியியல் ஆய்வகத்தில் அப்போது உதவி இயக்குநராக இருந்த சி.வி.சூரிய நாராயணா திட்டக் குழுவின் முதல் தலைவரானார். அடிகளார் நெறியாளரானார். மாவட்ட அளவில்

உள்ள அரசு அலுவலர்களும், வங்கி அதிகாரிகளும் சிறப்பு அழைப்புக்கு உரியவரானார்கள். கிராமப்புறப் பேராளர்கள் திட்டக்குழு உறுப்பினர்கள் ஆயினர்.

இப்பணியைச் சிறப்புடன் செயலாற்ற அடிகளார் அவர்கள் முனைப்புடன் ஈடுபட்டனர். விஞ்ஞானிகளின் அறிவும், அரசு அலுவர்களின் ஆதரவும் கொடையும், வங்கிகளின் நிதி உதவியும் இணைந்தன. ஐந்தாண்டுத் திட்டம் தீட்டப்பட்டது. திட்டப் பணிகள் விறுவிறுப்பாக நடந்தன. திட்டக்குழு அதன் இலட்சியத்தை நோக்கி முன்னேறியது.

இந்தத் திட்டக்குழுவின் இரண்டாவது தலைவரானார், விஞ்ஞானி பி.ஏ..ஷெனாய் அவர்கள் "STAR" என்று ஒரு முழக்கத்தைத் திட்டக்குழுவினரின் முன்வைத்தார். "S-Science " அறிவியல் "T-Technology" தொழிற்நுட்பம் "A-Agricultural & Animal Husbandry" வேளாண்மை & கால்நடை வளர்ச்சி "R-Religion" சமயம் என்பன அந்த முழக்கத்தின் விரிவு.

இந்த முழக்கத்தை ஏற்றுப் பணிகள் தொடர்ந்தன. கிராமப்புற மக்களுக்கு ஏற்றவாறு, மண்ணுக்கு ஏற்றவாறு தொழில் நிறுவனங்கள் அமைக்கப் பெற்றன. அதன்பின் தொழில் நுட்பம் சார்ந்த தொழிலகங்கள் நிறுவப் பெற்றன. "வீட்டுக்கு ஒருவருக்கு வேலை" என்பதை நோக்கமாகக் கொண்டு வேலை வாய்ப்பு எல்லோருக்கும் வழங்கப்பெற்றது.

இவ்வாறு வளர்ந்து வந்த குன்றக்குடி கிராமத் திட்டக்குழுப்

பணியின் சிறப்பை ஆங்கில இதழான "The Hindu" -இல் அன்றைய பிரதமர் அன்னை இந்திரா காந்தி 1984 செப்டம்பரில் "This is what I should like for all other villages" - என்று பாராட்டி உள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்திய அரசுத் திட்டக்குழுவின் கவனத்திற்கு இந்தப் பாராட்டுச் செய்தி சென்றது. திட்டக்குழு ஆலோசகர் கே.வி.சுந்தரம் அவர்கள் குன்றக்குடிக்கு வருகை தந்து, கிராமத் திட்டப் பணிகளைக் கண்டு வியந்துள்ளார். இந்தியாவின் எல்லாக் கிராமங்களும் இப்படி வளர்ச்சி பெற வேண்டுமானால் ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒவ்வொரு அடிகளார் வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார்.

அவர்கள் புதுதில்லி சென்றதும் இந்திய அரசு திட்டக்குழுவின் வெளியீடான "Towards Improvement local level Planning for Rural Development" என்ற புத்தகத்தில் குன்றக்குடித் திட்டக்குழுவின் அணுகுமுறைகளையும், செயல் முறைகளையும் விளக்கி "குன்றக்குடித் திட்டம் முன்மாதிரியானது" என்று குறிப்பிட்டார்.

அதன்பின் இந்திய நாட்டளவில் உள்ள வறட்சி மிகுந்த மாவட்டங்களின் ஆட்சித் தலைவர்கள், இந்திய ஆட்சிப்பணி அலுவலர்கள் என 17பேர் கொண்ட குழு குன்றக்குடிக்கு வருகை தந்து பார்வையிட்டுப் பாராட்டிச் சென்றுள்ளனர்.

"குன்றக்குடி மாதிரித் திட்டம்" இந்திய அளவில் அறிமுகமானது. இத்திட்டத்தால் குன்றக்குடி, சொறிப்பாறைப்பட்டி, கண்ணிராஜபுரம், கீழ்க்கண்டனி ஆகிய கிராமங்களை மையமாகக் கொண்டு 57 கிராமங்களை இத்திட்டக்குழு தத்தெடுத்துச் சிறப்புடன் பணியாற்றி வந்தது என்று கூறப்படுகிறது.

உண்மையுணர்வோடு தொடங்கி ஆற்றல் சான்ற உழைப்பினால் கிராமப்புற வளர்ச்சிப் பணிகள் வளர்ந்தன; போற்றப் பெற்றன. அடிகளார் அவர்களின் இப்பணியை ஒரு வேள்வியாகவே செய்தார். அடிகளார் அடிச்சுவட்டில் எல்லாரும் பணி செய்தால் இந்தியா சொர்க்க பூமியாகிவிடுவது திண்ணமாகும்.

## குன்றக்குடியில் கூட்டுறவு நிறுவனங்கள்

குன்றக்குடி கிராமத் திட்டக் குழுவின் மூலம் அடிகளாரின் பெரு முயற்சியால் குன்றக்குடியில் கூட்டுறவு நிறுவனங்கள் பல செயல்பட்டு வருகின்றன. இவற்றால் ஏராளமான தொழிற்பணிகள் செவ்வேன நடைபெற்றன. இத்தொழிற்பணிகளை,

அ) குன்றக்குடியில் நிறுவப் பெற்றுள்ள கூட்டுறவு நிறுவனங்கள் (1977-க்கு முன்பு)

ஆ) திட்டக்குழுவால் அமைந்துள்ள கூட்டுறவு நிறுவனங்கள் (1977-க்குப் பின்பு) என்று வகைப்படுத்திக் கூறுவர்.

அ. குன்றக்குடியில் நிறுவப் பெற்றுள்ள நிறுவனங்கள் (1977க்கு முன்பு)

1. கூட்டுறவு நாணயச் சங்கம்

2. வைகை அங்காடி

3. கூட்டுறவு பால் வழங்கும் சங்கம்

4. கூட்டுறவு தொழிலாளர் ஒப்பந்தச் சங்கம்

5 மருதுபாண்டியர் காதிகிராமத் தொழிற் கூட்டுறவுச் சங்கம்.

6. கூட்டுறவு கிராம வீடுகட்டும் சங்கம்.

7. திருவண்ணாமலை ஆதீனம் தேவாலயம் சிப்பந்திகள் சிக்கன நாணயக் கூட்டுறவுச் சங்கம்.

8. திருவள்ளுவர் மாணவர் கூட்டுறவு பண்டக சாலை.

9. நல்வாழ்க்கைக் கூட்டுறவு சங்கம்.

10. நேருஜி பாலிதீன் தொழிலாளர் தொழிற் கூட்டுறவுச் சங்கம்.

ஆ. திட்டக்குழுவால் அமைந்துள்ள கூட்டுறவு நிறுவனங்கள் (1977-க்குப்பின்பு)

1. குன்றக்குடி பாரதி தொழிற் கூட்டுறவு குளோரேட் தொழிற்சாலை, குன்றக்குடி.

2. பெரியார் முந்திரி தொழிலாளர் தொழிற் கூட்டுறவுச் சங்கம் - குன்றக்குடி.

3. பெரியார் முந்திரி ரெட் ஆக்சைடு பெயின்ட் தொழிற்சாலை, குன்றக்குடி.

4. குன்றக்குடி பசுமைப் பண்ணை- குன்றக்குடி.

5. அறிஞர் அண்ணா லெட் ஆசிட் பாட்டரி தொழிற்சாலை, குன்றக்குடி.

6. ஹெனாய் அலுமினிய கட்டடப்பொருள் தொழிற்சாலை, கொரட்டி.

7. காமராசர் பாலிதீன் ஓவன் சாக்ஸ் தொழிற்சாலை- அரண்மனைப்பட்டி.

மேலும் அரசு நிறுவனங்கள், தனியார் நிறுவனங்கள் என்று சில

நிறுவனங்கள் செயல்பட்டு வரவும் அடிகளார் உறுதுணையாக இருந்துள்ளார். அவை,

**அ) அரசு நிறுவனங்கள்**

1. கால்நடை மருந்தகம்
2. திருவளர் சோலை பழத்தோட்டம், நேமம்.
3. அன்னை இந்திரா நேபாளித் தறிக்கூடம்
4. பட்டுப்புழு வளர்ப்பு மாதிரிப் பண்ணை
5. பனைநார் பிரஷ் தொழிற்சாலை
6. தேசிய ஆராய்ச்சி வளர்ச்சிக் கழகம் (NRDC)

**ஆ. தனியார் நிறுவனங்கள்**

1. சண்முகநாதன் அச்சகம்
2. பாலமுருகன் மெட்டல் ஒர்க்ஸ்
3. குன்றக்குடி எலெக்ட்ரானிக்ஸ்

## 5. கிராம ஏற்புத்திட்டப் பணிகள் இயக்கம்

காரைக்குடி மத்திய மின்வேதியல் ஆராய்ச்சி நிறுவன விஞ்ஞானிகளின் தொழிற்நுட்ப வழிகாட்டுதல் பாரத மாநில வங்கி, கூட்டுறவு மத்திய வங்கி, பஞ்சாப் நேசனல் வங்கி, இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, கனரா வங்கி முதலியவற்றின் நிதியுதவி, மத்திய-மாநில அரசுகளின் அலுவலர்களின் ஒத்துழைப்பு ஆகியவற்றுடன் பொதுமக்களே முன்னின்று

நடத்தும் கிராம ஏற்புப்பணி இயக்கம் நடைபெற்று வந்தன. அ தி ல் பங்கு பெற்ற மொத்தக் கிராமங்கள் 103 ஆகும்.

1. குன்றக்குடி கிராம ஒருங்கிணைப்புத் திட்டக்குழு கிராமங்கள் 22.

2. திருக்கோளக்குடி கிராம ஒருங்கிணைப்புத் திட்டக்குழு கிராமங்கள் 8.

3. பிரான்மலை கிராம ஒருங்கிணைப்புத் திட்டக்குழு கிராமங்கள் 10.

4. கன்னிராசபுரம் கிராம ஒருங்கிணைப்புத் திட்டக்குழு கிராமங்கள் 5.

5. சிவகங்கை ஒன்றிய கிராமங்கள் 3

மொத்தக் கிராமங்கள் 103.

இன்றைய அரசு செயற்படுத்தி வரும் தொழிற் முனைவோர் திட்டம், மகளிர் சுயஉதவிக்குழுத் திட்டம் போன்றவைகளுக்கு அடிகளார் நடத்திய மேற்காணும் திட்டங்கள் எல்லாம் முன்னோடிகளாக அமைந்தன.

## குன்றக்குடி ஆதீன, தேவாலய ஆதரவு பெற்று இயங்கிவரும் பொதுநிறுவனங்கள்

1. அரிசன சேவாச் சங்கம்

2. இசைஞானியர் மாதர் சங்கம்

3. திருவள்ளுவர் தேசிய வாலிபர் சங்கம்

4. திருக்குறள் பேரவை (கிளை)

5. அருள்நெறித் திருக்கூட்டம் (கிளை)

6. திருமுறை வகுப்பு

7. நேருமாமா சிறுவர் சங்கம்

8. காமராசர் அருள்நெறிச் சிறுவர் பூங்கா

9. இளைஞர் அருள்நெறி மன்றம்.

10. அருள்நெறி திருக்கூட்டம் (மாதர் பகுதி)

11. கிராம நலச்சங்கம்

## 6. கல்விப் பணிகள்

உடலுக்கு நலம் பயப்பது நல்லுணவு. உயிர்க்கு நலம் பயப்பது நல்ல கல்வி. வறுமையைவிட அறியாமை கொடியது. அறியாமை நீங்க வேண்டுமானால் நல்ல கல்வி தேவை. அதனால் தான்,

"கண்ணுடையார் என்பவர் கற்றோர் - முகத்திரண்டு

புண்ணுடையார் கல்லா தவர்"(16)

என்றார் திருவள்ளுவர். கல்வி எல்லோருக்கும் கிடைக்க வேண்டுமென்று தவத்திரு அடிகளார் விருப்பம் கொண்டார். அதன் பயனாக 1955-இல் தோன்றியது தான் அருள்நெறித் திருப்பணி மன்றம்.

இந்த மன்றம் கல்விப் பணியை முதன்மை நோக்கமாகக் கொண்ட அமைப்பாகும். இந்தப் பணிகள் நன்கு வளர்ந்து, ஒரு முதல்தரக் கல்லூரியையும், இரண்டு மேல்நிலைப்பள்ளிகளையும், நான்கு உயர்நிலைப்பள்ளிகளையும், நான்கு நடுநிலைப்பள்ளிகளையும், மூன்று

தொடக்கப்பள்ளிகளையும், இரண்டு பாலர் பள்ளிகளையும் உருவாக்கி 16 கல்வி நிலையங்களை நடத்தி வருகிறது.

இவைகளில் ஒரு சில கல்வி நிறுவனங்களைத் தவிர பிறவெல்லாம் கிராமப்புறங்களில் இயங்கி வருகின்றன.

## கல்வி நிறுவனங்களின் பெயர்கள், ஊர்கள்

1. தெய்வசிகாமணி அருள்நெறித் தொடக்கப்பள்ளி- குன்றக்குடி.

2. தருமைக் கயிலைக் குருமணி மேனிலைப்பள்ளி- குன்றக்குடி.

3. அறிஞர் அண்ணா சிறுவர் பள்ளி - குன்றக்குடி.

4. திருவள்ளுவர் அருள்நெறி நடுநிலைப்பள்ளி - தேவகோட்டை

5. வள்ளல் பாரி உயர்நிலைப்பள்ளி - பிரான்மலை

6. திருவள்ளுவர் அருள்நெறி நடுநிலைப்பள்ளி- கொறுக்கை

7. சரஸ்வதி தொடக்கப்பள்ளி- மலையான் குத்தகை.

8. அருள்நெறி உயர்நிலைப்பள்ளி - அம்மன்பேட்டை

9. அருள்நெறி திருப்பணிமன்றம் உயர்நிலைப்பள்ளி - ஈரோடு.

10. திருப்பதி அருள்நெறி மேனிலைப்பள்ளி - கள்ளிமந்தயம்.

11. கோமதி அருள்நெறி மகளிர் உயர்நிலைப்பள்ளி - களக்காடு

12. பாலர் பள்ளி - களக்காடு

13. அம்பேத்கார் தொடக்கப்பள்ளி - நாங்குநேரி.

14. அருள்நெறி இந்து நடுநிலைப்பள்ளி - திருமலையப்பபுரம்.

15. இந்து அருள்நெறி நடுநிலைப்பள்ளி - விசய அச்சம்பாடு

16. திருவள்ளுவர் கல்லூரி, பொதிகையடி பாபநாசம்.

இவைகளோடு குன்றக்குடியில், திருவாதவூரர், திரு.வி.க.புண்ணிய விடுதி (சிறுவர், சிறுமியர் விடுதி) நடைபெற்று வருகிறது.

"பாரதியை அறம் எது? என்று கேட்டால் அவன் "அன்னசத்திரம் அமைப்பதில்லை; ஆலயங்கள் ஆயிரம் கட்டுவதில்லை; இவை எல்லாவற்றிலும் சிறந்த அறம் கல்வி வழங்கலே" என்றான். வாழும் மாந்தருக்குக் கல்வி அறிவு தரும் பொறுப்பைச் சமூகம் ஏற்க வேண்டும்; அரசு ஏற்க வேண்டுமென்ற நடைமுறை பிறந்தது. கல்விக்குச் செலவிடும் தொகை செலவல்ல; அதுவொரு முதலீடு என்ற எண்ணம் நமது சமூகத்தில் வளர வேண்டும்"(17) என்ற அடிகளாரின் கருத்து நோக்கத்தக்கதாகும்.

## 7. தீண்டாமை ஒழிப்புப் பணிகள்

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்பது வள்ளுவம். ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்றார் திருமூலர்.

"சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதிவழுவா நெறிமுறையின் - மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழி குலத்தார்
பட்டாங்கில் உள்ள படி."

என்று நல்வழியில் ஈயாமையின் இழிவு பற்றிக் கூறும் போது, பூமியில் இரண்டு சாதியைத் தவிர வேறில்லை என்று ஔவையார் குறிப்பிடுகிறார்.

"சாதிகள் இல்லையடி பாப்பா - குலத்

தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்"(18)

என்றார் பாரதியார்.

இந்த அறிவுரைகள் அனைத்தையும் கேட்டும் தெரிந்தும் மனிதர்கள் சாதிப்பாகுபாடும், தீண்டாமைக் கொடுமையும் பின்பற்றி வருகிறார்கள். இக்கொடுமையை நீக்க அடிகளார் மேற்கொண்ட பணிகள் பலவாகும். விரித்துக்கூற முடியாவிட்டாலும் ஒரு சில கருத்துக்கள் கூற வேண்டியது இன்றியமையாததாகும்.

அடிகளார் அவர்கள் 1960-ஆம் ஆண்டில் மத்திய சமூக நலக்குழு உறுப்பினராக நியமனம் செய்யப் பெற்றார். இந்தப் பொறுப்பில் இருந்த காலத்தில் தமிழ்நாட்டில் ஆதிதிராவிடர்கள் மேம்பாடு குறித்துப் பயணம் மேற்கொண்டு வந்தபோது ஆதிதிராவிடர் மாணவர் இல்லங்களில் ஆதிதிராவிடர் வகுப்பைச் சேர்ந்த மாணவர்களை மட்டுமே சேர்த்து வந்ததை அறிந்தார்கள்.

இப்படிப் படிக்கும் மாணவர்களைப் பிரித்து வந்தால் என்று தீண்டாமை போவது? தீண்டாமை என்பது ஆதிதிராவிடர்களிடம் இல்லை, மற்றைய சாதியரிடம் உள்ள மனப்பான்மைதானே தீண்டாமை என்பர். ஆதலால், ஆதிதிராவிடர் மாணவர் விடுதியில் நூற்றுக்குப் பத்து மாணவர்கள் இதர சாதிப் பிரிவு மாணவர்களைச் சேர்க்க வேண்டும்

என்று திருவுள்ளம் கொண்டார்கள். கங்கையும் காவேரியும் கலப்பதற்கு நாளானாலும் சாதிகளைக் கலக்கும்படி செய்ய வேண்டும் என்ற கருத்தை அரசுக்குப் பரிந்துரை செய்தார்கள். அரசும் ஏற்றுக் கொண்டது. இன்றும் அது நடைமுறையில் உள்ளது.

ஆதீனத்திற்குச் சொந்தமான திருப்புத்தூர் மடத்தில் ஆதிதிராவிடர் மாணவர் விடுதி ஒன்று நடந்து வந்துள்ளது. இந்த விடுதியிலும் அடிகளார் பிற இன மாணவர்களும் கலந்து தங்கிப் படிக்கும் முறையைக் கொண்டு வந்தார்.

இதேபோல் தாழ்த்தப்பட்ட மக்களைத் தாய்போல் அணுகும் நெஞ்சம் கொண்ட அடிகளார் அவர்கள் சமபந்தி விருந்து முறையைச் செயற்படுத்தினார்.

திருமடத்தில் நடைபெற்ற சமபந்தி விருந்துக்குத் தாழ்த்தப்பட்ட வகுப்பினைச் சேர்ந்த பெண்களையும், ஆண்களையும் சமைக்கச் செய்து, அந்த உணவை அவர்களையே பரிமாறும்படிச் செய்து; எல்லா வகுப்பினரையும் சமபந்தியில் ஒருங்கிருந்து உண்ணச் செய்தார். ஒன்றே அடிகளார் அவர்களின் தீண்டாமை விலக்குப் பணியை எடுத்துக் காட்டுவதற்குப் போதுமானதாகும்.

அடிகளார் அவர்கள் தமது ஆதரவாளர்களுடன் அரிசனர் வாழும் பகுதிக்குச் சென்று, அவர்களது குழந்தைகளைக் குளிப்பாட்டிப் புத்தாடை அணிவிப்பார். அவர்கள் வாழும் வீதிகளைத் தாமே துப்புரவு செய்வார்.

15.12.1961-இல் அடிகளார் தம் தலைமையில் குன்றக்குடியில் ஆதிதிராவிடர்கள் நலக்கருத்தரங்கம் நடத்தியுள்ளார். தீண்டாமை ஒழிப்புத் தீவிர இயக்கத்தின் தலைவராக இருக்கின்ற அடிகளார் 11.8.84 முதல் 15.8.84 வரை நடைப் பயணமாகத் தீண்டாமை ஒழிப்புத் தீவிர இயக்கத்தை மேற்கொண்டார். இவ்வாறு, "எல்லோரும் இன்புற்றிருக்க" அடிகளார் மேற்கொண்ட தீண்டாமை ஒழிப்புப் பணி வரலாற்றில் போற்றப்பட வேண்டிய ஒன்றாகும்.

அடிகளார் அவர்கள் தலைமை அலுவலகத்தில் முப்பதுக்கும் மேற்பட்டோர் அலுவல் பார்க்கும் இடத்தில் நான்கு அரிசனர்களையும் அலுவலில் அமர்த்தி அவர்களது தேவைகளைக் கவனித்து வந்துள்ளார். வாய்ப்புக் கிடைக்கும் பொழுதெல்லாம் தம்முடைய தொண்டர்களுடன் அரிசனக் குடியிருப்புப் பகுதிகளுக்குச் சென்று அம்மக்களுக்குத் தொண்டு செய்து வந்துள்ளார்.

"குடும்பத்தை நீத்துத் துறவு பூண்ட அவர்கள் தமிழ்நாடு முழுவதையும் தம்முடைய குடும்பமாக எண்ணிச் சமய வாழ்வில் புதிய மறுமலர்ச்சியை உண்டாக்கி விட்டார்கள்" என்று கி.வா.ஜகந்நாதன் அடிகளாரைப் பாராட்டுவார்கள். இவ்வாறு நாட்டுக்குத் தேவையான நற்பணியை ஆற்றி பணியால் உயர்ந்து நிற்பவர் அடிகள்.

## 8. துயர் துடைப்புப் பணிகளில் அடிகளார்

சமுதாயப் பணிகளில் ஒரு கூறாகவுள்ள துயர் துடைப்புப் பணிகளில் அடிகளார் தொடர்ந்து ஈடுபட்டு வந்துள்ளார். 1962-ஆம் ஆண்டு தமிழகம் புயலால் பாதிக்கப்பட்டது. புயல் நிவாரணப் பணிகளில் சமூக இயக்கங்கள் பல ஈடுபட்டன.

சென்னை, திருவொற்றியூர்த் திருக்கூட்டம் ஒன்றில் அடிகளார் தாம் அணிந்திருந்த தங்க உருத்திராக்கத்தை ஏலமிட்டார். ஏலத் தொகையாகக் கிடைத்த ரூபாய் 4,000/ஐ அன்றைய தமிழக முதல்வர் காமராசரிடம் புயல் நிவாரணப் பணிக்கென அளித்தார். இவ்வாறே சீனப் போரின் போது போர் நிதிக்குத் தாம் பயன்படுத்திய தங்கத் திருநீற்று சம்புடத்தை வழங்கியுள்ளார். மேலும், தாம் அணிந்திருந்த எல்லாப் பொன் அணிகலன்களையும் அளித்துவிட்டு அன்றிலிருந்து எளிய கோலத்துடன் இறுதிவரை வாழ்ந்துள்ளார்.

## 9. அமைதிப் பணிகளில் அடிகளார்

கீழ்வெண்மணிக் கிராமத்தில் அரிசன மக்கள் உயிருடன் தீயிட்டுக் கொளுத்தப்பட்டனர். அடிகளார் அங்கு விரைந்து சென்று பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஆடைகள் வழங்கியுள்ளார்.

குமரி மாவட்டத்தில் மண்டைக்காட்டுப் பகுதிகளில் மதக்கலவரம் தோன்றிய பொழுது அடிகளார் அங்கு அமைதியை நிலைநாட்ட, அமைதிப் பயணத்தை 17.3.82 முதல் 26.3.82 வரை மேற்கொண்டார். மதக்கலவரம் நிகழாமல் இருக்கத் திருவருட் பேரவையைத் தோற்றுவிக்க வேண்டும் என்ற எண்ணம் அடிகளாருக்கு மண்டைக்காட்டு மதக்கலவரத்தாலேயே உதித்துள்ளது.

அடிகளார் அவர்கள் மண்டைக்காட்டில் மேற்கொண்ட அமைதிப் பயணத்தைத் தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர். 29.3.82 அன்று சட்டமன்ற உரையில் குறிப்பிட்டுப் பாராட்டியுள்ளார்.

இவ்வாறே புளியங்குடியில் நடைபெற்ற மதக்கலவரத்தை அடக்க அடிகளார் அமைதிப் பயணத்தை மேற்கொண்டார். 1984-இல் இராமநாதபுரத்தில் இனக்கலவரம் மூண்டபோது அடிகளார் அங்கும் அமைதிப் பயணத்தை மேற்கொண்டார். இவ்வாறாக அடிகளார் அவர்கள் உறவுகளின் பாலமாக விளங்கி மத நல்லிணக்கத்தை ஏற்படுத்தியுள்ளார்.

### 10. குன்றக்குடியில் அடிகளாரது பிறபணிகள்

மக்களின் பொதுநலத்தைப் பேணும் பொருட்டுத் திருமடத்தின் சார்பில் சுகாதார நிலையம் ஒன்று குன்றக்குடியில் இயங்கி வருகிறது. கிராம மக்களுக்கு அறிவு வளர்ச்சி தரும் பொருட்டுத் திருக்கோயில்களின் சார்பில் நூலகமும், இலவசப் படிப்பகமும் இயங்கி வருகின்றன.

குன்றக்குடியின் நான்கு மைய வீதிகளிலும் வானொலிப் பெட்டிகள் அமைக்கப்பட்டுள்ளன. சிறுவர்களுக்கான பூங்கா ஒன்றையும் ஆதீனம் நடத்திவந்துள்ளது.

## தொகுப்புரை

இந்திய சுதந்திரப் போராட்டத்தில் தனது பங்களிப்பினை நல்கியுள்ளார்.

இவரது பணியை அன்றைய முதல்வர்கள் காமராசர், அண்ணா, கருணாநிதி, எம்.ஜி.ஆர் போன்றோர் பாராட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது.

தமிழ்நாடு அரசின் மேலவை உறுப்பினராகப் பணியாற்றியுள்ளார். மத இனக்கலவரங்கள் நடைபெற்ற பகுதிகளுக்கெல்லாம் சென்று அமைதி ஏற்பட பாடுபட்டுள்ளார்.

பல்வேறு கல்வி நிறுவனங்களைத் தோற்றுவித்து ஏழை மாணவர்களின் கல்விக்குப் பாடுபட்டுள்ளார். மருத்துவமனைகள், வேலை வாய்ப்பு நிறுவனங்கள் போன்றவற்றைத் தமிழகத்தின் பல பகுதிகளில் தோற்றுவித்துள்ளார்கள்.

# மேற்கோள் விளக்கம்

1. பா.சுந்தர், அருள்நெறித்தந்தை அடிகளார், ப.65.

2. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-8, ப.579.

3. குன்றக்குடித் திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீனம் வரலாறு, ப.9.

4. குன்றக்குடித் திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீனம் வரலாறு, ப.30.

5. தொகுப்பாசிரியர் பேராசிரியர் வன்மீக வெங்கடாச்சலம், தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் நம்மை மேம்படுத்தும் எண்ணங்கள், ப.80.

6. தவத்திரு குன்றக்குடி அடிகளார், மண்ணும் மனிதர்களும், வாழ்த்துரை.

7. தொகுப்பாசிரியர் பேராசிரியர் வன்மீக வெங்கடாச்சலம், தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் நம்மை மேம்படுத்தும் எண்ணங்கள், ப.14.

8. ரா.வே.சீ.இராகவன், சர்வோதய இயக்கமும் அருள்நெறித் தந்தையும், ப.21.

9. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், (தொகுதி-நான்கு) ப.180.

10. பாரதியார், பாரதியார் கவிதை, ப.135

11. சன்மார்க்க தேசிகன் ஊரன் அடிகள், சைவ ஆதீனங்கள்,ப.503.

12. விவேகானந்தர், புதிய இந்தியாவைப் படைப்போம், ப.30.

13. குன்றக்குடி அடிகளார், மனம் ஒரு மாளிகை, ப.177.

14. மி.நோயல், மரு.பரமகுரு, அடிகளார் உறவுப்பாலம், ப.9.

15. குன்றக்குடி அடிகளார், நமது நிலையில் சமயம் சமுதாயம், ப.56.

16. திருவள்ளுவர், திருக்குறள், அதிகாரம்-40, பாடல்-393.

17. குன்றக்குடி அடிகளார், மண்ணும் மனிதர்களும், ப.17.

18. பாரதியார், பாரதியார் கவிதை, ப.253.

# இயல் - 4

'இலக்கியப் பணி' என்ற இவ்வியல் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு விளக்கப்படுகிறது. ஆதீனக்குருமுதல்வர் காலத்திலிருந்து நிகழ்ந்துள்ள தமிழ்ப் பணிகளை ஒரு இயலாகவும், 45-ஆவது மகாசந்நிதானம் அடிகளாரின் தமிழ்க் கொடை, தனித்தன்மைகளையும், 46-ஆம் பட்டம் பொன்னம்பல அடிகளார் பணிகளையும் தனியொரு இயலாக விளக்குகிறது.

## இலக்கியம்

இலக்கியத்தைக் 'காலத்தின் பிரதி' என்பர். தொன்று தொட்டு நாட்டின் பண்பாடு, நாகரிகம், பழக்க வழக்கங்கள் போன்றவற்றை அறிய உதவும் கருவூலம் இலக்கியம். மொழியின் வளர்ச்சியையும், உயர்வையும் உலகுக்குக் காட்டும் சாதனமாகவும், சமயத்தைப் பரப்பவும் மனிதர்களின் ஒழுக்கங்களையும், வாழ்வியல் உண்மைகளையும் அறிய உதவும் சாதனமும் இலக்கியமே ஆகும்.

இவ்விலக்கியங்கள் புலவர் பெருமக்களாலும், அரசர்களாலும், இலக்கிய ஆர்வலர்களாலும், சமயக் குரவர்களாலும், சமய நிறுவனங்களாலும், மொழியாளர்களாலும், வரலாற்று அறிஞர்களாலும் காலங்காலமாக வளர்ந்து வந்துள்ளதை அறியமுடிகிறது.

தமிழ் வளரக் காரணமானவைகளில் முதலானதாகவும், முதன்மையானதாகவும் விளங்குவது சமயமே. சமயத்தால் தமிழும், தமிழால் சமயமும் வளர்ந்தன. சமயம் வளர்த்த தமிழில் இலக்கியம் பெரும்பங்கு வகிக்கிறது.

தமிழைச் சமயம் தோறும் வளர்ந்த தையல் என்பர். நீதி மற்றும் பக்தி இலக்கியக் காலக் கட்டங்களில் சமயத்தாலும், பின் மடங்களாலும், அதன்பிறகு நிறுவனங்களாலும் வளர்க்கப் பெற்ற மொழி தமிழ்மொழி.

### சைவமும் தமிழ் வளர்ச்சியும்

சிவநெறித் தொன்மை மிக்கது தமிழ் நெறி. இந்நெறி சார்ந்து தமிழ் இலக்கியம் வளர்ச்சி பெற்றுள்ளது. சமய குரவர்களும், சமய நிறுவனங்களும் வளர்த்த தமிழில் சைவ சமயம் வளர்த்த தமிழ்தான் அளப்பரியது. “சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க” என்பது சைவ உலகில் வழங்கி வரும் ஒரு சொல்லாட்சி ஆகும்.

சைவத்தையும், தமிழையும் இரண்டு கண்களாகக் கொண்டு காத்து, வளர்த்த பெருமை சைவர்களையே சாரும். பிற சமயங்கள் எல்லாம் தமிழல்லாத பிற மொழிகளைச் சார்ந்தவை; நாடியவை. தமிழையே சார்ந்த சமயம் சைவ சமயம். இதில் வடமொழிச் செல்வாக்கு இருந்த போதிலும் தமிழுக்கே முதன்மை இடமளித்துள்ளது.

சிவநெறியில் தோன்றிய திருமுறைகள் ஒப்பற்ற தமிழ்ச் செல்வங்கள் ஆகும். தேவாரம் இசைத் தமிழ்க் கருவூலம். பெரிய புராணம் பக்தி சுவையின் கருவூலம். மெய்கண்டாரின் சிவஞான போதம் ஒப்பற்ற மெய்ப் பொருள் விளக்கம் ஆகும். தமிழோடு இசைப்பாடல் மறந்தறியாத நாயன்மார்களால் தமிழ் வளர்ந்தது.

சமண, பௌத்த சமயங்கள் பாலி மொழியைத் தழுவி நின்றபோது தமிழை இன்னிசையுடன் நாளும் பரப்பிய சிவநெறி வன்மையால் ஏனைய சமயங்களும் தமிழின்பால் அடைக்கலம் புக்கன. கிறிஸ்தவப்

பாதிரியார்கள் தமிழ் கற்றுத் தமிழை வளர்ந்தது போல் சமண, பௌத்தர்கள் தமிழ் கற்றுத் தமிழை வளர்க்க வேண்டியதாயிற்று.

சைவ சமயம் சார்ந்த நீதி நூல்கள் எண்ணற்றவை. சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர், சைவ எல்லப்ப நாவலர், சிவப்பிரகாசர், குமரகுருபரர், பகழிக் கூத்தர் போன்ற சிவநெறிச் சான்றோர்களின் பணிகள் போற்றுதலுக்குரியன. அருணகிரியாரும், தாயுமானசுவாமிகளும், இராமலிங்க அடிகளாரும் சைவ சமய வளர்ச்சியில் திருப்பு முனைகளை ஏற்படுத்திய செம்மல்கள் ஆவர்.

## சைவத் திருமடங்கள் வளர்த்த தமிழ்

தமிழ் நாட்டில் திருமடங்கள் பல சைவத்தோடு தமிழையும் வளர்த்து வருகின்றன. "சமயங்களால் வளர்க்கப்பட்ட தமிழ் இரண்டு வகை. ஒன்று சமயத் தொண்டர்கள், பெரியார்கள் வளர்த்தமை. இரண்டு 'தொண்டு நிறுவனங்கள்' மடங்கள் போன்ற நிலையங்கள் வளர்த்தமை. 'மடங்கள் வளர்த்த தமிழ்' எனத் தனியொரு நூலே எழுதும் அளவிற்குச் சைவ, வைணவ மடங்கள் மாத்தமிழ் வளர்த்த மாண்பே மாண்பு"(1) என்பர்.

சைவத் திருமடங்கள் சமயப்பணியோடு செந்தமிழ் இலக்கிய, இலக்கணங்களைக் காப்பதிலும், பரப்புவதிலும் பெரிதும் துணை புரிந்து வருகின்றன. தமிழ் இலக்கிய வரலாறு இடையறவு படாமல் காத்தவர்கள் சைவசமய குரவர்கள். புறச் சமயத்தாரிடம் இருந்தும் பிறமொழியாளர்களிடமிருந்தும் அவர்கள் தமிழைக் காத்தனர்.

பதினைந்து, பதினாறாம் நூற்றாண்டுகளில் பல்லவர் காலம் பக்தி

இயக்கக் காலக்கட்டம் போன்ற நிலை மீண்டும் ஏற்பட்டது. புறச்சமயங்களும், பிறமொழிகளும் படையெடுத்தன. தமிழர் செல்வத்தை மட்டுமல்லாமல் பண்பாட்டையும் அவை சூறையாடியன. இந்நிலையில் தமிழ்க்காப்பகங்களாக எழுந்த மடங்கள் பழைய காலம் போலத் தம் தமிழ்ப் பணியைத் புதுப்பிக்கத் தொடங்கின.

"தமிழ் வளர்ச்சியில் முன்னோர் பங்கும் முடியுடைய மூவேந்தர் பங்கும் நாடு நன்கறிந்தவையே. அதற்குப் பின்னர் செந்தமிழ் வளர்ப்பதையும் தங்களுடைய தலையான கடமையென்று எண்ணித் தமிழ் வளர்ச்சியில் ஆதீனங்கள் ஈடுபட்டன"(2) என்பர்.

முகமதியர் படையெடுப்புக்குப் பின் தமிழும் சைவமும் ஆட்டங்கண்டன. இந்நிலையில் தமிழ் ஏடுகளுக்கும், தமிழ்ப் புலவர்களுக்கும் மடங்களே புகலிடமாயின. தமிழ் ஏடுகள் பிற காரணங்களால் அழிந்துவிடாமல் தொகுத்துப் பாதுகாத்தன. தமிழ்ப் புலவர்களை மன்னர்களும், மக்களும் மறந்து போயிருந்த காலத்தில் சைவத் திருமடங்களே அவர்களைத் தாயினும் சாலப் பரிந்து காப்பாற்றி வந்தன.

"சைவ மடங்கள் சமயத் துறையில் பெரும்பணி ஆற்றிய போதிலும் தமிழ் இலக்கியங்களைக் காப்பதிலும், பரப்புவதிலும் முனைந்திருந்தன. பழைய நூல்களின் அரணாகவும், புதிய நூல்களின் பிறப்பிடமாகவும் மடங்கள் விளங்கின. அவற்றின் தலைவர்கள் பலர் தமிழ் இலக்கண, இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்து புலமை நிரம்பியவர்களாக விளங்கினர். ஆதலின் மடங்களில் புலவர்க்குச் சிறப்பான இடமிருந்தது. அவ்வக் காலத்துச் சிறந்த புலவர் பலர் மடங்களிலிருந்து இலக்கியத் தொண்டு புரிந்து வந்தனர்"(3) என்பர்.

## குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத் தமிழ்ப்பணி

தெய்வமணம் கமழும் தென்னாட்டில் சைவநெறி தழைத்தோங்க சுத்த அத்வைத சைவசித்தாந்தக் கொள்கையை மேற்கொண்டுள்ள ஆதீனங்கள் பதினெட்டில் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனமும் ஒன்றாகும்.

இவ்வாதீனம் நினைக்க முக்தி தரும் திருவண்ணாமலையில் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் ஞானப் பெருங்குரவராம் திருப்பெருந்திரு தெய்வ சிகாமணி தேசிகர் அவர்களால் தொடங்கப் பெற்றது. இந்தக் குருமரபில் வந்த பெரியோர்கள் சைவமும் தமிழும் இருகண்களாகக் கொண்டு போற்றி வளர்த்து வந்துள்ளனர்.

இவர்களின் தமிழ்ப் பணியைப் பதிப்புப்பணி, உரைப்பணி, புறவுப்பணி (புலவர்களை ஆதரித்தல்) கல்விப் பணி, அரங்கப்பணி, பரிசளிப்புப் பாராட்டுப் பணி என வகைப்படுத்திக் காணமுடியும்.

### பதிப்புப்பணி

பதினாராம் நூற்றாண்டில் தமிழ்நாட்டுக்கு அச்சுயந்திரங்கள் வந்துள்ளன. இந்திய மொழிகளில் முதன்முதலில் தமிழ் எழுத்துக்களிலே அச்சிடும் முயற்சி கி.பி.1577-இல் நடந்துள்ளது. கிறித்துவப் பாதிரிமார்கள் தங்கள் சமய நூல்களை அச்சிட்டுள்ளனர். அவ்வேளையில் அச்சு இயந்திரங்கள் பாதிரியார்களிடமும், கிழக்கிந்தியக் கம்பெனியிடமும் இருந்துள்ளன. பொதுமக்களின் கைக்கு அச்சு இயந்திரம் வரவில்லை.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்திய மக்கள் அச்சுயந்திரத்தைப் பயன்படுத்தும் வாய்ப்பைப் பெற்றுள்ளனர். இதனால் பனை ஓலைகளில்

ஏட்டுச் சுவடிகளாக இருந்த நூல்களை அச்சிடத் தொடங்கினர். புதிய உரைநடை நூல்களை எழுதி அச்சிடும் முயற்சியிலும் ஈடுபட்டார்கள்.

கிறித்துவர்களும், இசுலாமியர்களும் தத்தம் சமயங்களைப் பரப்புவதற்குத் தமிழில் நூல்கள் எழுதி அச்சிட்டதால் இந்துக்களும் தம் சமயங்களைக் காப்பாற்றிக் கொள்ள நூல்கள் எழுதி அச்சிடுதல் அவசியமாயிற்று.

சமய நூல்களை அச்சிடுவதற்குப் பயன்பட்ட கருவிகள் பின் இலக்கிய நூல்களை அச்சிடுவதற்கும் பயன்பட்டன. பழைய செய்யுள்கள், இலக்கியம், புதுக்கவிதை, உரைநடை நூல்கள், திங்கள் இதழ், வார இதழ்கள் முதலியவற்றை அச்சிட்டுப் பரப்புவதற்கு அச்சுக் கருவிகள் பயன்பட்டன. இவ்வகையில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் ஆற்றிய பதிப்புப்பணியை ஆதீனக் குருமகா சந்நிதானங்களின் பதிப்புப்பணி, அடியார்களின் பதிப்புப்பணி எனப் பிரித்துக் காணலாம்.

திருமடத்தின் 38-ஆம் பட்டம் பெரிய ஆறுமுக தேசிகர் (கி.பி.1860-1889) காலத்தில் ஆதீனம் பல நிலைகளில் மிகவும் சிறப்புற்று இருந்துள்ளது. இவர்கள் காலத்தில் ஆதீன *மடாலயம்* இப்போது இருக்கும் நிலையில் பெரிதாகத் திருப்பணி செய்யப்பெற்றது. சுவாமிகள் சிலேடைப்புலி வேம்பத்தூர் பிச்சு ஐயர் அவர்களைக் கொண்டு, குன்றக்குடி சண்முகநாதருக்கு உலா இயற்றுவித்தார். இதில் அக்காலத்து ஆதீனச் சிறப்பையும் ஐந்து கோயில்களிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் மிக அழகாகப் பாடியுள்ளார்.

மகாசந்நிதானம் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் மணாக்கருள் ஒருவராகிய திருவாவடுதுறை ஆதீனம் ஆறுமுகத்தம்பிரான்

சுவாமிகளை அழைத்துத் திருவண்ணாமலை ஆதீனத்தில் சின்னப்பட்டமாக்க விரும்பினார்.

ஆதீன அடியவராகிய தாண்டவராயத் தம்பிரானையும், ஆதீன வித்வான் தில்லைநாதப் பிள்ளையையும் திருவாவடுதுறைக்கு 10.12.1888-இல் அனுப்பி, தமது விருப்பத்தைத் தெரிவிக்கச் செய்தார். திருவாவடுதுறை மகாசந்நிதானம் திருவருள்திரு மேலகரம் சுப்பிரமணிய தேசிக சுவாமிகளும் இதற்கு ஒப்புக்கொண்டார்.

ஒரு நல்ல நாளில் ஆறுமுகத்தம்பிரான் சுவாமிகளைக் குன்றக்குடி ஆதீனத்திற்கு அனுப்பி வைத்தார். அவர்களை மகாசந்நிதானம் சின்னப்பட்டமாக நியமித்தார். ஆறுமுகத்தம்பிரான் சுவாமிகள் பெரிய புராணத்திற்கு உரையெழுதியதோடு சென்னைக் கிளை மடத்தில் இருந்து சித்தாந்த பாடமும், செந்தமிழ் இலக்கிய இலக்கணங்களும் கற்பித்து வந்தார்.

மகாசந்நிதானம் பெரிய ஆறுமுக சுவாமிகள் ஆதீனத்தின் அடியாராகிய குமாரசுவாமி முனிவர், குருமுதல்வர் மீது பாடி அருளிய ஞானவந்தாதி, நான்மணிமாலை, சிற்குருமாலை ஆகிய நூல்களை ஆதீன வித்வான் தில்லைநாத பிள்ளையைக் கொண்டு 1887-இல் (சர்வசித்து வைகாசி) அச்சிட்டு வழங்கியுள்ளார்.

குமாரசுவாமி முனிவர் குருமுதல்வர் மீது மிகுந்த பக்தி உடையவர். அவரின் பக்தி உணர்வை வெளிப்படுத்துவதாக அமைந்த நூல்கள்தான் ஞானவந்தாதி, நான்மணிமாலை, சிற்குருமாலை போன்றவை. நான்மணிமாலையில் குருமுதல்வரை வாழ்த்தும் பாடலாக,

"சீர்வாழி தெய்வ சிகாமணி சீர்அருணை

ஊர்வாழி உலகெல்லாம் - கார்வாழி

சித்தமிழ்தம் ஆன சிகாகமம் வாழிசெழு

முத்தமிழும் வாழி முறை"(4)

என்பர்.

ஆதீன குருமுதல்வரின் சிறப்புக்களையும் நல்லியல்புகளையும் கூறும் நூல்கள் ஸ்ரீதெய்வசிகாமணி நான்மணிமாலையும், சிற்குருமாலையும் ஆகும். குருமுதல்வர் இல்லறத்தாராவார் என்பது ஸ்ரீதெய்வசிகாமணி நான்மணிமாலை தரும் செய்தியாகும்.

"குருபரண் கால குமரன் விருத்தனென்(று)

ஒருவன் எய்தும் பருவம் போலப்

பொருந்தும் இலய போகாதி காரம் என்(று)

இருந்(து) இயல் செய்தி இயம்பலோ அரிதே

இருபரு வம்தன் நிடத்து நீங்காத

ஒருபரு வத்தின் உதாசீனன் அரூபி

தான்நரு பொருளைத் தான்விரும் பாமல்

ஆன்மா விளங்கும் அரும்பயன் நோக்கி

ஆன சுபாவத்(து) அனைவரும் உறங்கினும்

தான்வறங் காதா தனக்குடி வாழ்க்கையில்"(5)

என்ற பாடல் மூலம் அறியப்படுகிறது.

ஆதீனக் குருமுதல்வர் மீது குமாரசுவாமி தம்பிரான் பாடிய மற்றொரு பாமாலை 'சிற்குருமாலை' என்னும் நூலாகும். குருமுதல்வர் மீது கொண்ட காதலால் கசிந்து உருகி பாடப்பட்ட நூல்தான் சிற்குருமாலை.

இந்நூலில் குருமுதல்வர் தன்னை அடைந்தார்களின் தகுதிக்கேற்ப அருள்புரிபவர் என்றும் மண், பெண், பொன் ஆசைகளைத் துறத்தற்கு அரிய பெண்ணாசை இல்லாத உன் திருவடித் தாமரையை வணங்குபவர்கள் எல்லா நலங்களும் பெற்றுத் திகழ்வார்கள் என்பதை,

"மருஅரு பூங்குழல் மானார்கள் ஆசை வளைக்குள் அல

மருஅரு நின்கழல் போ(து) அண்ணி எய்துவ தாம்நலம் ஐந்(து)

அருஅரு வேத முனிவரும் போற்றத் தரும் அருள்செய்

திருஅரு ணாச்சல தேவ சிகாமணிச் சிற்குருவே"(6)

என்று பாடியுள்ளார்.

இந்நூல்களுக்கு ஆதீனப்புலவர் க.கதிரேசன் அவர்கள் அருமையான குறிப்புரை, பொழிப்புரை, விளக்கவுரை, சந்தி பிரித்துக் காட்டும் முறை போன்ற வகைகளில் உரை செய்துள்ளது சிறப்பினைத் தருகிறது.

"இருவகை ஆயதின் நன்மை பயன் அன்பர்க்கு ஈட்டவந்த"

என்ற அடிக்கு "வாழைத்தண்டுக்கு எரியூட்டல் இயலாதவாறு போல பக்குமிலார்க்கும் பதிவு எண்ணியம் ஈட்டல் அறிதாதலின் 'அன்பர்க்கு என்றார்' என்று குறிப்புரை எழுதியுள்ளார்.

ஆதீனத்தின் 39-ஆம் குருமூர்த்தியாக எழுந்தருளியிருந்த ஆறுமுக தேசிக குருமூர்த்தி, தாம் திருவாவடுதுறை ஆதீனத் தம்பிரானாக இருந்த காலத்தில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தால் பதிக்கப் பெற்ற தெய்வசிகாமணி நான்மணிமாலை, ஞானவந்தாதிப் பதிப்புக்கு வழங்கிய சிறப்புப் பாயிரத்தில் அருள்தரு குமரசுவாமி முனிவர் பற்றி,

"மல்லாரும் மதில் மதில்புடைசூழ் திருவண்ணா
மலையில் அருள் வடிவொன் றேந்தி
நல்லார்கள் தொழப் பொலியும் தெய்வசிகா
மணிக்குரவர் நாதன் தாளில்
மனம், மொழி, மெய் அவனடிக்கே உறுத்தி அருள்
ஒழுங்கு பெற்ற வரதன், சைவத்
தனம் எனும் சித் தாந்தகலை தெளிந்து நிட்டை
கைவந்த தகையன், ஒட்டிற்
கனமுறுபொன் னும்கருதும் துறவினன் ஆ
ரியனை அன்றிக் கனவி னும்வே(று)
உ(ன்) மைருவா உளக்குமர சாமிமுனி
வரன் எமக்கும் உறுதி ஓர்ந்து"(7)

என்று பாடியிருப்பது முனிவரின் பெருமைக்குச் சான்றாகும்.

44-ஆம் பட்டம் ஆறுமுக தேசிக சுவாமிகள் (கி.பி.1946-1952) ‘பாலகவி’ வே.இராமநாதன் செட்டியார் அவர்களைக் கொண்டு தெய்வசிகாமணி நான்மணிமாலையை மறுபதிப்புச் செய்தார்கள்.

ஆதீனம் கலைபயில் கழகமாக விளங்கியது. பல புலவர்களை உருவாக்கியது; சைவ சித்தாந்தச் செந்நெறியை நாடெங்கும் பரப்பியது. பல பெரும் புலவர்களும் மகாவித்வான்களும் இங்கு வந்திருந்து அருந்தமிழ் வளர்த்தனர். வேம்பத்தூர் சிலேடைப்புலி பிச்சுவையர், சாந்துப்புலவர், யாழ்ப்பாண தில்லைநாத நாவலர், திருவம்பலத்து இன்னமுதம் பிள்ளை, வெண்பாப்புலி வேலுச்சாமிக் கவிராயர், வெண்பாப்புலி வீரபத்திரக்கவிராயர் முதலிய புலவர் தலைமணிகளை அலங்கரித்த ஆதீனம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம்.

இவ்வாதீனம் ஆதரித்துச் சிறப்புச் செய்த புலவர்கள் பலரில் வேம்பத்தூர் சிலேடைப்புலி பிச்சு ஐயர் அவர்கள் பல நூல்களைப் பாடியுள்ளார். அந்நூல்களையெல்லாம் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

பிச்சுவையர் எழுதிய ‘சண்முகநாதர் உலா’ என்ற நூல் வெகுதானிய 1938 ஹடியார் குமார் நடேச பாரதியாரால் நகரத்தார்கள் பொருளுதவியால் காரைக்குடி குமரன் அச்சுக்கூடத்தால் பிரசுரிக்கப்பட்டது.

## தவத்திரு குன்றக்குடி அடிகளார் கால பதிப்புப்பணி

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தின் பொற்காலம் அடிகளார் காலம். இவ்வாதீனத்தை இந்தியா மற்றும் உலக நாடுகள் அறியும்படி செய்தவர். குன்றக்குடியைக் குன்றின்மேல் இட்ட விளக்காக, குன்றாக்குடியாக உயர்த்திக் காட்டியவர்களும் அடிகளாரே.

ஆதீன அடியார்களில் அடிகளார் அரிய பல பணிகளைச் செய்துள்ளனர். அவர்கள் காலத்தில் எழுத்துப்பணி சிறப்பாக நடைபெற்றது.

சிறந்த நாடக நூல்களையும், இலக்கிய நூல்களையும் படைத்தவர். அவர்கள் எழுதிய 'கலங்கரை விளக்கு', 'பாரதத்தாய்', 'புரட்சி பூத்தது', 'வள்ளல் பாரி', 'புது வாழ்வு' ஆகிய நாடகங்கள் குறிப்பிடத்தக்கனவாகும். இந்த நாடகங்கள் குன்றக்குடி அருள்நெறி கலைக்குழுவினரால் நடிக்கப் பெற்றுள்ளன.

அடிகளார் அவர்கள் தமிழ் உரை நடையில் மட்டுமின்றி தமிழ் மரபுக் கவிதை புனைவதிலும் வல்லவர். பல கவியரங்கங்களுக்குத் தலைமையேற்று நடித்தியுள்ளார். 'கவியரங்கில் அடிகளார்' என்னும் நூல் அவரது கவிதை ஆற்றலுக்குச் சான்று பகர்வதாகும்.

குன்றக்குடித் திருமடத்தின் சார்பாக 'மணிமொழி' என்ற பத்திரிக்கையைத் தொடங்கி இதில் எழுதி வந்துள்ளார். 1959-ஆம் ஆண்டு அடிகளார் அவர்களைச் சிறப்பாசிரியராகக் கொண்டு 'தமிழகம்' என்ற புதிய திங்கள் இதழ் மாதம் இருமுறை மதுரையிலிருந்து வெளிவந்தது. இதில் அடிகளார் தொடர்ந்து எழுதிவந்துள்ளார்.

அடிகளார் தமிழ்நாடு தெய்வீகப் பேரவையின் தலைவராகப் பொறுப்பேற்று வந்த காலத்தில் பேரவையின் சார்பாக 1972-ஆம் ஆண்டு முதல் 'அருளோசை' என்ற திங்களிதழ் வெளிவந்தது. 'திருவளர்ச் செல்வனுக்கு' என்ற தலைப்பில் தத்துவக் கட்டுரைகளை 'அருளோசை' பத்திரிக்கையில் எழுதி வந்தார்.

குன்றக்குடியில் ‘சண்முகநாதன் அச்சகம்’ என்பதைத் தொடங்கினார். இவ்வச்சகம் மூலம் 1980-ஆம் ஆண்டு முதல் ‘மக்கள் சிந்தனை’ என்ற பெயரில் திங்கள் இருமுறை இதழாக வெளிவருகிறது. இவ்விதழின் சிறப்பாசிரியர் அடிகளார் அவர்கள்.

தெய்வீகப் பேரவைக்குச் சென்னையில் ஆழ்வார் பேட்டை மகாராஜா சூரியராவ் சாலையில் சொந்தக் கட்டடம் உள்ளது. அதில் ஓர் அச்சகம் அமைக்கப் பெற்றது. அதன் மூலம் ‘அருளோசை’, ‘செய்திக்கதிர்’, என்ற இதழ்கள் வெளிவந்தன. இவ்வச்சகம் மூலம் இலட்சக்கணக்கான துண்டுப் பிரசுரங்கள் அச்சிட்டு வெளியிடப் பெற்றன.

“சமய நெறிகளில் மக்களை இணைத்து மகிழ்விக்கவும் அவர்களுக்குரிய பணிகளைச் செய்யவும் தமிழக அரசின் ஓர் உறுப்பாகத் தெய்வீகப் பேரவை 13-6-1966-இல் தொடங்கப்பெற்றது. 1976 வரை செயல்பட்டது. தமிழ்நாட்டில் உள்ள அனைத்துத் திருமடங்களின் தலைவர்களும் இந்த அவையில் உறுப்பினராக இடம் பெற்றிருந்தனர்.

பேரவைக்கு ஈராயிரம் கிளைகள் இருந்தன. இப்பேரவையின் தலைவராகக் குன்றக்குடி அடிகளார் சில ஆண்டுகள் இருந்து வந்தார். அக்காலத்தில் அவர்களுடைய பெருமுயற்சியால் தெய்வீகப் பேரவை பின்வரும் தமிழ்ப் பணிகளைச் செய்தது.

1. பட்டமளிப்பு விழாக்களில் பட்டம் பெற்றவர்களுக்குத் திருக்குறள் படிகள் வழங்கப் பெற்றன.

2. ‘அருளோசை’, ‘செய்திக்கதிர்’, என்னும் பெயர்களில் இரு திங்கள் இதழ்களைப் பேரவை வெளியிட்டது.

3. இறைப்பற்றை வளர்க்கும் நோக்கத்துடன் அப்பரடிகள், ஆண்டாள், திருஞானசம்பந்தர் ஆகியோரைப் பற்றிச் சில வெளியீடுகளைச் சிறுவர்களுக்காக வண்ணப் படங்களுடன் அச்சிட்டுப் பல்லாயிரக்கணக்கில் பேரவை வழங்கிற்று.

4. பேரவையின் மாநில மாநாடுகளை ஒட்டிச் சில மலர்களையும், திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டு மலரையும் இலக்கிய மணம் கமழப் பேரவை வெளியிட்டது"(8) என்பர்.

அறிவியல் சிந்தனைகளைத் தமிழ் மக்களிடமும், மாணவர்களிடமும் ஏற்படுத்தவும் 'அறிக அறிவியல்' என்ற இதழைத் தோற்றுவித்தார். அவ்விதழின் பொறுப்பாசிரியர் அடிகளார் ஆவார். பள்ளிகளில் அறிவியல் கண்காட்சிகளையும் நடத்தி, பரிசுகள் வழங்கி மாணவர்களிடம் அறிவியல் ஆர்வத்தை ஏற்படுத்தினார்.

சிக்ரி (மத்திய மின்வேதியியல் ஆய்வகம்) விஞ்ஞானிகள், பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் ஆகியோர்களின் கூட்டு முயற்சியாலும், பல்கலைக்கழகங்களில் அறிவியல் ஆய்வுக் கருத்தரங்குகள் நடத்தப்பட்டன.

உலகத் தரமுள்ள அறிவியல் கட்டுரைகள் தமிழில் தயாரிக்கப்பட்டு இக்கருத்தரங்குகளில் படித்து விவாதிக்கப்படுகின்றன. படிக்கப்பட்ட கட்டுரைகள் தொகுக்கப்பட்டு நூல்களாகவும் வெளியிடப்படுகின்றன. அறிவியல் தமிழுக்கு இக்கருத்தரங்குகளும், கட்டுரைத் தொகுப்புகளும் நிகரற்ற கொடைகளாகும். தமிழுக்கு அடிகளார் ஆற்றியுள்ள தொண்டுகளில் சிறந்த தொண்டு இதுவுமாகும்.

‘தமிழில் வழிபாடு கொள்கை விளக்கம்’ என்னும் சிறுநூல் குன்றக்குடியில் இருந்து வெளியிடப்பட்டது. ‘நமது கொள்கை’ என்ற தலைப்பில் அடிகளார் “தாய்மொழியில் வழிபாடு அல்லது அர்ச்சனை செய்தால் அவ்வழிபாடு இருதயம் கலந்ததாக இருக்கும்”என்று நம்புகிறோம்” என்று கூறினார்.

அடிகளாரின் இக்கருத்துக்களுக்கு அரண் செய்யும் கருத்துக்கள் வருமாறு, சேக்கிழார் சிவபெருமான் வாயிலாக ‘அருச்சனைப் பாட்டேயாகும்’ என்று அருளிச் செய்த சொற்றொடர் அருச்சனை என்பது திருமுறைப் பாடல்களினால் செய்வதே ஆகும் என்பதைக் காட்டுகிறது.

திருமுறைகளை ஓதி அருச்சனை செய்கிற வழக்கு இருந்தமையால் ‘அருச்சனைப் பதிகம்’ எனத் தொடங்கும் திருஞானசம்பந்தர் பதிகம் ‘வேற்றாகி விண்ணாகி’ எனத் தொடங்கும் திருநாவுக்கரசர் திருத்தொண்டகமும் ‘கொன்று’ எனத் தொடங்கும் சுந்தரர் தேவாரமும் அமைந்துள்ளன.

அடிகளார் அவர்கள் தமிழ் அர்ச்சனை பற்றிக்கூறியதை, ‘தமிழில் வழிபாடு கொள்கை விளக்கம்’ என்ற நூலின் பின்புற அட்டையில் வினோபாஜி படத்துடன் அச்சிட்டுப் பெருமைப்படுத்தியுள்ளார்.

“தமிழில் வழிபாடு நிகழ்தல் மிகவும் இன்றியமையாததாகும். அதனால் மக்களிடத்து வழிபாட்டுணர்ச்சி பெருகுவதுடன் மக்களுக்கு வழிபாட்டில் உள்ளம் கலக்கும். ஆன்ம வளர்ச்சிக்கு அவரவரது தாய்மொழி ஒன்றே போதுமானது. ஆன்ம ஞானம் சில குறிப்பிட்ட மொழிகளில் மட்டுமே பூட்டி வைக்கப்படுகிறது என்ற மூட நம்பிக்கையை

ஒழித்து விடுங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன்"(9) என்கிறார் வினோபாஜி.

அடிகளார் அவர்கள் தமிழ்க் காப்பு நூல் வெளியீட்டிற்குப் பொருளுதவியும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி தொகுப்புப் பணிகளில் ஈடுபடுமாறு தமிழக அரசைத் தூண்டியும் வந்தவர். அடிகளார் அவர்களின் பதிப்புப்பணி தமிழ்மொழி வளர்ச்சிக்கு உரைக்கல்லாக அமைந்துள்ளது.

***உரைப்பணி***

***உரைநடை வளர்ச்சி***

ஆங்கிலேயரின் கல்விமுறையைப் பின்பற்றித் தமிழ்நாட்டில் கல்வி நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டன. அங்குக் கற்கும் மாணவர்களுக்குரிய பாட நூல்களை அச்சிட்டுத் தரவேண்டிய நிலை ஏற்பட்டது. பாடநூல்களின் வாயிலாகவும் தமிழில் உரைநடை வளர்ந்தது.

அச்சிட்ட நூல்கள் குறைந்த விலைக்குக் கிடைத்தமையால், பலர் வாங்கிப் படிக்க முடிந்தது. நூல்களை வாங்கிப் படிப்பவரின் எண்ணிக்கையும் உயர்ந்தது. உரைநடை நூல்கள் எழுதுவதற்கேற்ற சூழ்நிலை அமைந்தது. பலர் நூல்களும், கட்டுரைகளும் எழுதத் தொடங்கினார்கள்.

***உரைநடை வகைகள்***

உரைநடையின் வளர்ச்சியில் வேறுபாடுகளைத் தமிழில் காணலாம். அகவல் போல் நான்கு நான்கு சீராக எதுகை மோனையுடன்

எழுதப்பட்டது பழைய உரைநடை. பிறகு எதுகை மோனை குறைந்து, சீர் அளவும் இல்லாமல், எழுவாய், பயனிலை முடிவுகளை மட்டும் பிறழாமல் கொண்டு எழுதிய உரைநடை அமைந்தது.

பழங்காலத்து நடை மிகச் செறிவாக அமைந்தது; கருத்துக்களின் சிக்கலும் நுட்பமும் நடையில் காணப்பட்டன. பேச்சு வழக்கில் இல்லாத அருஞ்சொற்கள் பல ஆளப்பட்டன. அந்தக் காலத்தில் உரைநடை புலவர்களின் அளவில் மட்டுமே பயன்பட்டு வந்ததாகும். அதனால் புலவர்களும் நன்றாகக் கற்றவர்களும் அறியத்தக்கதாக இருந்தால் போதும் என்று உரைநடையை அமைத்துக் கொண்டார்கள்.

அச்சுயந்திரம் வந்த பிறகே, உரைநடை பலர்க்கும் பயன்படத்தக்கது என்ற நோக்கம் ஏற்பட்டது. பலரும் எளிதில் படித்து உணர்ந்து கொள்ளும் வகையில் அருஞ்சொற்கள் குறைந்து, பேச்சு மொழியின் வாக்கிய அமைப்பை ஒட்டி எழுதும் முயற்சி ஏற்பட்டது.

## குன்றக்குடி (திருவண்ணாமலை) ஆதீன உரைப்பணி

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன அடியவர்களில் போற்றப்படுபவர்களில் ஒருவர் ஞானப்பிரகாச முனிவர். இவரது ஊர் இலங்கை யாழ்ப்பாணம். இவர் ஆறுமுக நாவலரின் முன்னோர். அந்நாளில் யாழ்ப்பானத்தை ஆண்டு வந்த போர்ச்சுகீசியர்கள் தங்கள் உணவுக்காக யாழ்ப்பாணக் குடும்பம் ஒவ்வொன்றும் நாள்தோறும் ஒரு பசுவைக் கொடுக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்தினர்.

பசுக்கொலைப் பாவத்திற்கு அஞ்சிய ஞானப்பிரகாசர் நாட்டையே துறந்து தமிழ்நாட்டிற்கு வந்துவிட்டார். சிதம்பரத்தில் தங்கிச் சிலகாலம்

வழிபட்டபின் திருவண்ணாமலைக்குச் சென்றார். அங்கிருந்து வடக்கே வங்க நாட்டுக்குச் சென்று சிலகாலம் இருந்து வடமொழியிற் புலமை பெற்று குன்றக்குடி ஆதீனத்தில் துறவு பெற்றார்.

பின்பு சிதம்பரத்திற்குச் சென்று நகரின் தென்கிழக்குப் பகுதியில் ஒரு குளம் வெட்டி, மடம் அமைத்துத் தங்கியிருந்தார். குளத்திற்கு 'ஞானப்பிரகாசர் குளம்' என்றும் மடத்திற்கு 'ஞானப்பிரகாசர் மடம்' என்றும் பெயர். சிதம்பரத்தில் ஞானப்பிரகாசர் குளம் அமைந்துள்ள சூழல் சமயப்பண்பாடு மிக்குள்ள பகுதியாகும்.

பல சிறப்புக்களைப் பெற்ற ஞானப்பிரகாசர் முனிவர் அருள்நந்தி சிவாச்சாரியார் இயற்றிய சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு உரை செய்தவர். சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு அறுவர் உரை செய்துள்ளனர். அறுவர் உரையுள் ஒன்றாக இவர் உரையையும் அச்சிட்டவர் (1880) கொன்றை மாநகரம் சண்முகசுந்தர முதலியார் ஆவர். அவர் ஞானப்பிரகாச முனிவர் வரலாற்றையும் எழுதியிருக்கிறார்.

சண்முக சுந்தர முதலியாருக்கு ஞானப்பிரகாசர் உரையேடுகளைக் கொடுத்தவர்கள் (1) வித்துவான் சுந்தரம் பிள்ளை, (2) புரசை பொன்னம்பல முதலியார், (3) சைவக்கிரியா தீட்சிதர் சென்னை அய்யாசாமி தேசிகர் என்பவர்கள் என்று குறிப்பிட்டுள்ளார். இவர்கள் சண்முகசுந்தர முதலியாருக்கு ஞானப்பிரகாசர் வரலாற்றை உணர்த்தியுள்ளனர்.

ஞானப்பிரகாச முனிவர் சிவஞான சித்தியார் சுபக்க உரையின் தொடக்கத்தில் பின்வரும் வணங்கப் பாடலை அமைத்திருக்கிறார்.

"சிவமுற நமக்க முந்தித் தந்திவத் திரனைச் சிந்தித்து
உவமையில்சிவ னெப்பில்லா உமைகுருகுலங்கள் மற்றெண்
ணிவர்களை வணங்கிட யின்பச் சிவஞான சித்திக் கேற்ப
நவமுறும் உரையுரைப்பாம் முன்னுரை நலங்கொள் ளார்க்கே"(10)

என்பது அப்பாடல் வரிகளாகும்.

முனிவர் அவர்கள் சிவஞான போத வியாக்கியானம், பிரமாண தீபிகை, சித்தாந்த சிகாமணி முதலான வடமொழி நூல்கள் செய்ததைத் தமது சித்தியார் உரையில் குறிப்பிட்டுள்ளார். இந்த நூல்களில் எவையும் இன்று கிடைக்கவில்லை. இவர் செய்த நூலாக இன்று கிடைப்பது சித்தியார் சுபக்கவுரை மட்டுமாகும். இவ்வுரையின் இறுதியில் முனிவர் பற்றிய ஒரு பாடல்,

"சொல்லில் நாவில் துரிசறும், சோத்திரத்து
ஒல்லுமேற் சிவஞான உதித்திடும்
செல்லு மெய்அரு ணந்திசெய் சித்திக்கு
நல்ல ஞானப்பிர காசன் நவிற்றுரை"

என்பதாகும்.

ஞானப்பிரகாச முனிவரின் சிவஞான சித்தியார் சுபக்க உரையை 1889-90-ஆம் ஆண்டுகளில் கொன்றை மாநகரம் சண்முகசுந்தர முதலியார் அச்சிட்ட பதிப்பே முதல் பதிப்பாகும். பின் இருமுறை அச்சிடப் பெற்றுள்ளது. ஒன்று, யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த இணுவில் நடராஜ ஐயரால் பரிசோதித்த பெருமாள் நாடாரால், திருப்புத்தூர் சின்னைய நாயக்கர் யந்திர சாலையில் அச்சிடப்பட்டுள்ளது. "சிவஞான சித்தியார்

சுபக்க உரை ஞானப்பிரகாச முனிவரால் எழுதப்பெற்றது. இவ்வுரை சிவாக்கிரயோகிகள், மறைஞான தேசிகர் ஆகிய இரு உரைக்கும் பிற்காலத்தது. சிவஞான மாபாடியத்திற்கு முற்காலத்தது.

இவ்வுரையில் எழுந்த சில கருத்துக்களையும் 'எடுத்து' என்னும் சொல்லுக்கு எழுந்த உரையையும் மறுத்து, திருவாவடுதுறை ஆதீனம் சிவஞானமுனிவர் சிவசமவாத கண்டனம் என்னும் மறுப்பு நூல் ஒன்று எழுதினார்கள். அந்த மறுப்பிற்கு நமது ஆதீனச் சீடர்களில் ஒருவர் "வஜ்ஜிர தண்டம்" என்னும் பெயரிட்டு ஒரு மறுப்பு எழுதிச் சமாதானம் கூறினர்.

இது குறித்து 1875-இல் (யுப ஆண்டு) வெளிவந்த சிவஞான சித்தியார் தத்துவ பிரகாசர் உரையை வெளியிட்டக் கொன்றை மாநகரம் சண்முகசுந்தரம் முதலியார் அவர்கள் "மறுப்புக்கள் ஒவ்வோர் அபிமான வகையால் உண்டாயின அன்றுமுதல் நூல் கருத்திற்கும், உரைக்கும் ஞானப்பிரகாசர் உரை மிகவும் ஒத்தே இருக்கிறது." என்று எழுதியுள்ளார்கள்.

கொன்றை மாநகரம் சண்முக சுந்தரம் அவர்கள் எந்த ஆதீனத்தையும் சாராதவர். சித்தாந்த சாத்திரம் பதினான்கினையும் பதிப்பித்து நாட்டிற்கு வழங்கிய சித்தாந்த பெரும் புலவராவார்"(11) என்பர்.

39-ஆம் பட்டம் ஆறுமுக தேசிக சுவாமிகள் மகாவித்துவானாகத் திகழ்ந்தவர். தணிக்கைப் புராணம், பெரிய புராணம், மெய்கண்ட நூல்கள், பண்டார சாத்திரம் முதலியவற்றை நன்றாகப் பாடம் சொல்லும் ஆற்றல் பெற்றவர்கள்.

இவர்கள் திருவாவடுதுறையில் தம்பிரானாக இருந்த போது யாழ்ப்பாணம் தில்லைநாத பிள்ளையால் பதிக்கப் பெற்ற ஞானவந்தாதி, தெய்வசிகாமணி நான்மணிமாலைப் பதிப்புக்கு அருளிய சிறப்புப் பாயிரம் இவர்களது பெருமைக்குச் சான்றாகும்.

இவ்வாதீனத்து ஆறுமுக தம்பிரான் சுவாமிகள் யாழ்ப்பாணத்தில் பிறந்தவர். ஆறுமுக நாவலரிடம் கல்வி கற்றவர். யாழ்ப்பாணத்தில் ஆறுமுக நாவலர் நடத்திய பாடசாலையில் சிலகாலம் ஆசிரியராகவும் இருந்தவர். குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்திற்கு வந்து துறவு பெற்றவர். சென்னை நாட்டுப் பிள்ளையார் கோயில் தெருவிலுள்ள ஆதீனக் கிளைமடத்திலிருந்து பாடம் சொன்னவர்.

திருவாவடுதுறை ஆதீனம் 17-ஆம் பட்டம் அம்பலவாண தேசிக குருமூர்த்திகள் இளமையில் சென்னையில் இவரிடம் கல்வி கற்றவர். மகாவித்துவானாக விளங்கினார். பல புலவர்களுக்கு இலக்கிய, இலக்கண, சாத்திரப்பாடங்கள் கற்பித்தார். ஆதீனத் தம்பிரான்களில் பலர் இவரிடம் கல்வி பயின்று சிறப்புற்றார்கள்.

இவர் ஆற்றிய தொண்டுகளில் குறிப்பிடத்தக்கது பெரிய புராண உரையாகும். ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள், சேக்கிழார் பெருமான் செய்தருளிய தெய்வப் பனுவலாம் பெரிய புராணத்திற்குச் சிறந்த பதவுரை தந்தருளியுள்ளார். பெரிய புராணம் முழுவதும் உரையுடன் வெளியிட்ட பெருமை குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தையே சேரும். இப்பெரியார் 'காசியாத்திரை மான்மியம்' என்னும் நூலையும் இயற்றியுள்ளார்.

"ஆறுமுகத் தம்பிரான் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்

இப்பெரியார் மகாவித்துவான். பெரிய புராணம் முழுவதற்கும் உரை எழுதியவர். இவ்வுரை மிகச் சிறந்த உரையெனப் பின் வந்த பெரிய புராண உரைகாரர்களால் போற்றப் பெறுகிறது”(12) என்பர்.

### அடிகளார் உரைப்பணி

அடிகளார் அவர்கள் மிகவும் போற்றும் இலக்கியம் வள்ளுவம். அதனை, “வடபுலம் கண்டு ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் வாகை கொண்ட வெற்றியை விட, செந்தமிழ் பேராசான் திருவள்ளுவர் புகழ் போற்றுதற்குரியது. ஆரியப்படை கடந்த செழியனின் வெற்றி ஒரு பொழுதே பகையைத் தடுத்தது. நாவலர், வள்ளுவர் வெற்றி ஊழி ஊழி காலத்திற்கும் வெற்றிக் கொண்டது”(13) என்கிறார் பொன்னீலன். அடிகளார் 1967-இல் நடந்த உலகத்தமிழ் மாநாட்டில் “திருக்குறளை இந்திய தேசிய நூலாக்க வேண்டும்” என்று வற்புறுத்தினார். திருக்குறள் மற்ற இலக்கியங்களை விட மனிதனை முன்னிலைப்படுத்திப் பாடப்பட்டதால் இது ‘பொதுமறை’ என்கிறார். திருக்குறள் உலகம் தழுவிய ஒட்பம் உடையது.

எல்லா நாட்டவரும் எல்லாக் காலத்தும் பின்பற்ற வேண்டிய பொதுமறைதான் திருக்குறள். உலகப் பொதுமறையாம் திருக்குறளுக்கு அடிகளார் அவர்கள் தமது இறுதிக்காலத்தில் சிறந்த உரை எழுதிக்கொண்டிருந்தார். பொருட்பாலுக்கு உரைமுடிக்கும் காலத்தில் அவ்வுரைப்பணி நிறைவுற்றது. அடிகளார் அவர்களின் உரை நயத்தில் சிலவற்றைக் குறிப்பிடலாம்.

அறத்துப்பாலில் அன்புடைமை அதிகாரத்தில்,

"அன்பின் வழியது உயர்நிலை அஃதிலார்க்கு

என்பு தோல் போர்த்த உடம்பு"

என்ற திருக்குறளுக்கு உள்ள விளக்கவுரை எண்ணி எண்ணிப் போற்றப்பட வேண்டியது. உயிர் இருப்பதை அறிதற்குச் சித்த மருத்துவர் நாடியையும், ஆங்கில முறை மருத்துவர் நெஞ்சுத் துடிப்பையும் பார்க்கின்றனர். திருவள்ளுவரோ உயிர் உள்ளதா? இல்லையா? என்பதை அறிய உள்ளத்தைப் பார்க்கிறார்- என்று புது விளக்கம் தருவர்.

குற்றங்கடிதல் அதிகாரத்தில்,

"செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்

பெருக்கம் பெருமித நீர்த்து"

என்ற திருக்குறளுக்கு, "செருக்குடையார் மற்றவர்களை மதிக்க மாட்டார். அவ்வழி விரிந்த-பரந்த அறிவும் கிடைக்காமல் போகும்; சூழ்ந்து துணை செய்வாரும் இல்லாமல் போவர்.

சினம்-வெகுளி உறவினர்களை, நண்பர்களைப் பிரிக்கும் ஆக்கமும் தராது. மாறாக, கேடு பல தரும். "சிறுமை"-கழிகாமம் என்று கூறுவர். அதாவது தகுதி, தேவை இவைகளுக்குத் தொடர்பில்லாது காமுறுதல். இந்த இயல்பு கீழ் மக்களிடத்தில் இருத்தலால் சிறுமை என்று கூறப்பெற்றது என்பர்.

சிறுமை:- சின்னத்தனம், மானிடத் தகுதிக்கேற்ப ஒழுகாது, சின்னத்தனத்துடன் உயர்வுடையார்க்கும் சிறுமை செய்து பழகுவது

சிறுமையாகும். செருக்கு, சினம், சிறுமை ஆகியன உயிர்நலம் கெடுப்பவை மட்டுமல்ல, உடல் நலத்தையும் கெடுப்பவை; செல்வத்தையும் அழிப்பவை"[14] என்பர்.

இவ்வாறு அடிகளார் திருக்குறளுக்கு நயமான உரை எழுதியுள்ளதைக் காணலாம். தமது எழுத்துப் பணியை 1946-இல் தருமபுர ஆதீனத்தில் கந்தசாமி தம்பிரானாக இருந்தபோதே தொடங்கிவிட்டார்.

அறிஞர் அண்ணாதுரை 'திராவிட நாடு' என்ற இதழில் பெரிய புராணத்தைச் 'சாதிகளைக் காப்பாற்றும் நூல்' என்று கூறியதற்கு அடிகளார் 'தார்மீக இந்து' என்ற இதழில் தொடர்ந்து மறுப்புரை எழுதி பெரிய புராணம் சாதிகளைக் காப்பாற்றும் நூல் அல்ல என்பதற்குச் சிறந்த ஏற்றுக் கொள்ளத்தக்க விளக்கம் அளித்து வந்துள்ளார்.

அடிகளார் சில நூல்களுக்கு முன்னுரை, அணிந்துரை, வாழ்த்துரை வழங்கிச் சிறப்புச் செய்துள்ளார். சான்றாக, ஆ.குறள்பித்தன் அவர்கள் எழுதிய 'அருள்மிகு கொப்புடைய நாயகி அம்மன் அந்தாதி' என்ற நூல் 1989, ஏப்ரலில் பதிப்பிக்கப்பட்டது. அந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கியுள்ளார். வாழ்த்துரையில் இறைவனை வாழ்த்தப் 'பழுத்த மனம் தேவை'. 'பழுத்த மனத்து அடியார்' என்று திருமுறை பேசும் கவிஞர் குறள்பித்தன் அவர்கள் பழுத்த மனமுடைய அறிஞரே, கொப்புடைய நாயகியைப் பரவுவதாகக் கூறுகிறார்.

பா. கமலக்கண்ணன் அவர்கள் எழுதிய "ஞானக்கனல்" என்ற நூலுக்கு அணிந்துரை வழங்கிச் சிறப்புச் செய்தார். அணிந்துரையில் "கம்பன்-சித்தர்கள் நெறிபோற்றியவன். அதனாலேயே "மானுடம் வென்றதம்மா!" என்று பாடுகிறான். சித்தர்கள் மானுட வாழ்வைப்

போற்றினர்; ஊனுடை ஆலயமாகக் கருதினர். இறைவன் உவந்து, எழுந்தருளும் திருக்கோயிலாக்கினார். இத்தகு அருமையான பழந்தமிழரின் நெறி சித்தர் நெறி. 'இந்து சமய' அமைப்பின் வழியாக ஊடுருவல் செய்த பக்தி, பக்தி தொடர்பான சடங்குகளின் காரணமாக - தமிழர்களின் வாழ்விலிருந்து அகன்றது; அகற்றப்பட்டது, இன்று, நூல்களைக் கற்பவர்களும், அனுட்டிப்பவர்களும், அருகியே காணப்படுகின்றனர். அத்தகு சிலருள் ஒருவராகச் சிறந்து விளங்குபவர் நமது கமலக்கண்ணன்" என்பர்.

## புறவுப்பணி:- (புலவர்களை ஆதரித்தப்பணி)

மன்னர்களும், மடத்தின் தலைவர்களும் புலவர்களை ஆதரித்து, தமிழ்மொழி வளர அரும்பாடுபட்டுள்ளனர். 'இறவாத புதுநூல்கள் தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்' என்ற பாரதியின் வாக்கிற்கேற்ப புதுநூல்கள் தோன்றவும், மொழி புத்துயிர் பெறவும் ஆதாரமாகவும், புகலிடமாகவும் திகழ்வது ஆதீனங்கள்.

ஆதீனங்கள் புலவர்களை ஆதரித்து மொழி வளர்ச்சிக்குப் பாலமாகவும் விளங்கின. குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் புலவர்களை ஆதரித்துப் புதுநூல்கள் தோன்றப் பெரும்பங்கு வகுத்துள்ளது. இவ்வாதீனத்திற்கு வந்து சென்ற புலவர் பெருமக்களும், தங்கியே தமிழ்ப்பணி செய்தவர்களும் பலராவர்.

ஆதீனத் தமிழ்ப்பணிப் பற்றி குமாரசுவாமி தம்பிரான் தான் பாடிய ஸ்ரீதெய்வசிகாமணி நான்மணிமாலையில்,

“மருதபாண்டியன் அவைக்களத் திருந்த
நாற்பது நற்றமிழ்ப் புலவர்சிங் கங்களும்
அருணை யாதீனத் தருந்தமிழ்ச் சீடர்கள்
குன்றக் குடிதன் குறவஞ் சிதனை
இனிமையாய் இயற்றிய இன்றமிழ்ப் புலவரும்
மயூரகிரிக் கோவை கொடுத்தநற் புலவரும்
போன்றமா ணாக்கர் பலப்பலர் தமக்கு
சங்கர லிங்க முனிவராம் பெரியோர்
தமிழ் போதித்த தனிப்பே ராதீனம்
ஆறு முகநா வலர்தமை அழைத்து
செந்தமிழ் தமக்கே சிவிக்கை உரியது
என்றே சிவிகையில் ஏறி வலமே
செய்தவா தீனம் நம்மா தீனம்
சென்னையம் பகுதியில் முதன்முத லாக
தமிழேடு தேடிச் சென்ற ஐயருக்கு
தமிழே டிருக்கும் தனிப்பெரும் இடங்களை
காட்டிய பெருமை கொண்டவா தீனம்
சிலப்பதி காரச் செந்தமிழ் ஏட்டை
பிழையிலா துயர்ந்த பெருந்தமிழ் ஏட்டை
உ.வே.சாவிடம் உபகரித் திட்டே
தமிழகத் திற்சிலம் பையொலிக் கச்செய்யும்
ஆதீ னம்மா தீனம் ஆகும்.”(15)

என்று அழகாகப் பாடியுள்ளார்.

## ஆதீனப் புலவர்கள்

குன்றக்குடி ஆதீனம் கலைபயில் கூடமாக விளங்குகின்றது. பல புலவர்களை உருவாக்கி வருகிறது. சைவ சித்தாந்தச் செந்நெறியை நாடெங்கும் பரப்பி வருகிறது. பல பெரும் புலவர்களும் மகாவித்துவான்களும் இங்கிருந்து அருந்தமிழ் வளர்த்துள்ளனர்.

## திருவம்பலத்தின் தின்னமுதம் பிள்ளை

இவர் சென்னை மயிலாப்பூர் கட்டளை மடத்தில் இருந்த பெரும் புலவர். திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் தமது இளமைப் பருவத்தில் கி.பி.1841-இல் சென்னையிலுள்ள தமிழ்ப்புலவர்களைக் காணும் வேட்கையில் சென்ற போது திருவம்பலத்தின் தின்னமுதம் பிள்ளையைச் சந்தித்தார்.

இவர் தம் பெரும் புலமையை அறிந்து இவரிடம் சிலகாலம் கல்லாடம், திருவாசகம், திருச்சிற்றம்பலக் கோவையார், திருக்குறள் பரிமேலழகர் உரை முதலியவற்றில் தமக்குள்ள ஐயங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

இச்செய்தி குறித்து, மகாவித்துவான் தமது மாணவர்களுக்குச் சொல்லுகையில் "திருவம்பலத்தின் தின்னமுதம் பிள்ளை வீட்டிற்குச் செல்லும் பொழுது கபாலீசுவரர் கோயில் வாயிலின் வழியேதான் செல்வேன். அப்பொழுது உள்ளே சென்று சுவாமிகளைத் தரிசித்துக் கொண்டு போகவேண்டும் என்னும் விருப்பம் இருப்பினும் நேரமாகிவிடுமே என்னும் கவலையால் சந்நிதியில் நின்றே அஞ்சலி செய்துவிட்டுச் செல்வேன்"(16) என்று சொன்னதாக உ.வே.சா. குறிப்பிட்டுள்ளார்.

## வெண்பாப்புலிக் கவிராயர்

ஆதீனக் குருமூர்த்திகளால் ஆதரிக்கப் பெற்ற பெரும் கவிஞர்கள் பலர், சிலேடை பாடுவதில் சிறந்திருந்தார்கள். அவர்களுள் 'வெண்பாப்புலிக் கவிராயரும்', வேலுச்சாமிக் கவிராயரும் சிறந்தவர்களாக விளங்கினர்.

வெண்பாப்புலிக் கவிராயர் தம் காலத்தில், ஒரு சமயம் குன்றக்குடி ஆதீனக் குருமகாசந்நிதானம் அவர்களைத் தரிசித்துவிட்டு, வேல்சாமிக் கவிராயரின் வீட்டுக்குச் சென்றுள்ளார். அப்பொழுது வேல்சாமிக் கவிராயரின் மழலை மகன் முற்றத்தில் விளையாடிக் கொண்டிருந்தான். அங்குச் சென்ற வெண்பாப்புலிக் கவிராயர் அவனிடம் 'உன் தந்தையிடம் புலிவந்திருப்பதாகச் சொல்லப்பா' என்றார். உடனே கவிராயர் 'உள்ளே வேல் இருக்கிறது என்று கூறப்பா' என்றாராம். இருவரும் மகிழ்ந்தனர்.

"வெண்பாப்புலிக் கவிராயர் 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவருடைய வழித்தோன்றல்கள் இன்றும் செவ்வூரிலும் மிதிலைப் பட்டியிலும் இருக்கின்றனர். இவர் வசைபாடுதலில் வல்லவர். கருத்தான் என்பவர் நண்டுக் கறியைத் தின்பதில் அவா உடையவர். அவர் புலால் உண்பதை விட்டு விட்டதாகக் கேள்விப்பட்டு வெண்பாப்புலிக் கவிராயர் பின்வருமாறு பாடியுள்ளார்.

"வண்டுவந்தாற் றெரியும் மலர்வாசம் வழிநடத்திக்

கொண்டுவந்தாற் றெரியும் பரிவேகங் குணத்துடனே

கண்டுவந்தாற் றெரியும் கருத்தானுடை நாநயமே"[17]

என்பது பாடலாகும்.

“கி.பி.பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். வெண்பாப்புலிக் கவிராயர். இவர் பாண்டிய நாட்டிலே மணப்பச்சேரி என்னும் சிற்றூரில் வசித்திருந்த சைவப் பண்டார மரபினர். இவர் சிவகங்கைச் சிற்றரசர் முதலியோரால் ஆதரிக்கப்பட்டவர். வெண்பா பாடுவதில் இவர் தலை சிறந்தவராதலின், இவருக்கு இப்பெயர் அமைந்தது போலும்”(18) என்பர்.

## வீரபத்திரக் கவிராயர்

இக்கவிராயர் வெண்பாப் பாடுவதில் வல்லவர். இவ்வாதீனத்தில் வாழ்ந்த வேலாயுத தம்பிரானிடம் பயின்றவர். ‘குன்றக்குடி குறவஞ்சி’ இயற்றியவர். இந்நூல் இயற்றியதற்காக வீரபத்திரக் கவிராயர் ‘நாயகன் பிறப்பான்’ என்னும் கிராமத்தைப் பரிசாகப் பெற்றவர்.

இப்புலவர் திருக்கோளக்குடியில் எழுந்தருளி இருக்கும் இறைவனுக்கு வாகனக்கவி முதலிய நூல்களைப் பாடியுள்ளார். இறுதிக் காலத்தில் இவ்வாதீனத் தம்பிரானாகவும் விளங்கினார். “குன்றக்குடி வீரபத்திரக் கவிராயர் புகழேந்தி வம்சத்தினர்; வேளாளர்; சைவ மதத்தினர்; குன்றக்குடியில் வேலாயுத பண்டாரச் சந்நிதியோடு வெகுநாள் உடன் இருந்தவர். இவர் செய்த நூல்கள் குன்றக்குடி குறவஞ்சி, கம்மாளருடைய மாந்ததைக் குறவஞ்சி என்பனவாகும்.

இந்த நூலுக்காகக் கம்மாளர்கள் கல்யாணத்திற்கு அஞ்சு பணமென்று இந்த பிரதேசத்தில் கொடுத்து வருகிறார். இவர் திருவண்ணாமலை ஆதீன வித்துவான். இவர் பல தனிப்பாடல்களும் செய்துள்ளார். இவருடைய பிள்ளைகளிருவர், பேரர் வீரபத்திரக் கவிராயர் அந்த ஆதீனத்தைச் சார்ந்த ஐந்து கோயிலிலும் கட்டளையுண்டு, மங்களகவி சொல்லுவதுண்டு”(19) என்று கூறப்படுகிறது.

## முத்துவேலாயுதக் கவிராயர்

இவ்வாதீனம் பிரான்மலையில் அருளாட்சி இருந்த காலத்தில் குன்றக்குடியில் தங்கியிருந்த மாமுனிவர் சங்கரலிங்க முனிவர். இவர் ஞானக் கடலாகத் திகழ்ந்தவர்; குன்றக்குடித் திருமடத்திலிருந்து பல மாணவர்களுக்குத் தமிழ் அறிவையும், சிவஞானத்தையும் வாரி வழங்கியவர்.

இவர் மாணாக்கர்களுள் ஒருவர் முத்து வேலாயுதக் கவிராயர். இவர் பிற்காலத்தில் 'வாலசரஸ்வதி' என்று புகழப் பெற்றவர். அவர் சங்கரலிங்க முனிவரை 'நாற்கவி விலாசன்' என்றும் 'சைவாகமப் பொக்கிஷம்' என்றும் தாம் எழுதியுள்ள ஒரு சீட்டுக் கவியில் குறிப்பிட்டுள்ளார்.

"புனிதமிகு நாற்கவி விலாசன், மெய்த் தவஞான
பூரணன் சைவாகப்
பொக்கிஷம் தானசங் கரலிங்க முனிவர்திரு
பொற்பதம் தன்னை நிதமும்
போற்றுசெய முத்துவே லாயுதக் கவிராச"[20]

என்பது அந்தச் சீட்டுக் கவியின் அடிகள்.

## வேதாந்த சுப்பிரமணியபிள்ளை

இப்புலவர் அவர்கள் குன்றக்குடி ஆதீன சங்கரலிங்க முனிவர் அவர்களின் மாணாக்கருள் ஒருவர். 'மயூரகிரிப் புராணம்' இயற்றியவர். இப்புராணத்திற்கு யாழ்ப்பாணத்திலிருந்து குன்றக்குடி வந்த பொன்னம்பல பிள்ளையவர்கள் உரை எழுதியுள்ளார். இவரைக் குன்றக்குடி ஆதீனம் ஆதரித்துச் சிறப்புச் செய்துள்ளது.

**சாந்துப் புலவர்**

சாந்துப் புலவர் மருது பாண்டியர்களின் வேண்டுகோளின்படி 'மயூரகிரிக் கோவை' என்னும் நூலினைப் பாடியுள்ளார். இவர் திருவண்ணாமலை ஆதீன சுவாமிகளாகிய சங்கரலிங்க முனிவர் பற்றி 'மயூரகிரிக் கோவை' நூலில் சிறப்பாகப் பாடியுள்ளார். இதனால் இவர் இவ்வாதீனத்தால் ஆதரிக்கப் பெற்றவர் என்பது தெரிகிறது.

சாந்துப்புலவர் மருதுபாண்டியன் மீது பாடிய கவியில் தம் குருவான சங்கரலிங்க முனிவரைப் பற்றி,

"குருவான ஞான சங்கரலிங்க மாமுனிக்

குரிசிலை மனத்துள் வைதுக்"

என்பர். சாந்துப்புலவர் பற்றி,

"18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி சாந்துப் புலவர் என்பார் பாண்டிய நாட்டுச் சிறுகம்பை ஊரினர். 'மயூரகிரிக் கோவை'பாடினார்"[21] என்று கூறப்பட்டுள்ளது.

சாந்துப் புலவர் சங்கரலிங்க முனிவருடைய ஈகை, அன்பு போன்ற செயல்களைப் பாராட்டி,

"கையன்றி மெய்யறி யான்கொடைப் பாலிற்
கவிஞர்தம்பான்
மெய்யொன்று சங்கர லிங்கத் தபோநிதி
வேண்டஞ் செவ் வேண்
மையொன்ற தோகை மலையி லேம்
மதன்சமரி

மெய்யென்று வேலெறிந் தென்னோ

பராமுக மெய்தினையே"[22]

என்று பாடி மகிழ்ந்துள்ளார்.

## சிலேடைப்புலி வேம்பத்தூரார் பிச்சு ஐயர்

வேம்பத்தூரில் பிறந்தவர். கவிராஜ பண்டிதர் பரம்பரையில் தோன்றியவர் சிலேடைப்புலி வேம்பத்தூர் பிச்சு ஐயர். இவர் அரசர்களாலும், ஜமீன்தார்களாலும், மடாதிபதிகளாலும், பிரபுக்களாலும் நன்கு மதிக்கப் பெற்று வாழ்ந்தவர். இவர் 'நிமிஷகவி', 'சிலேடைப்புலி' என்ற பட்டப் பெயர்களைப் பெற்றவர்.

இராமநாதபுரத்தின் அரசராகவும், பெருங்கொடை வள்ளலாகவும் விளங்கிய ஸ்ரீபாஸ்கர சேதுபதி அவர்கள் சபையில் பல புலவர்கள் முன்னிலையில் தம்புலமைத் திறங்காட்டி, அவ்வரசரால் 'சிலேடைப்புலி' என்ற தக்க பெயரையும், மிக்க குரிசிலையும் பெற்று விளங்கினார்.

இவர் செட்டிநாட்டுப் புலவர்களில் சிறந்தவராகிய 'வன்றொண்டரிடம்' கல்வி கற்றவர். இச்செய்தியை, "மேம்பத்தூர் பிச்சுவையர், சிலேடைப்புலி சதாவதானம் சுப்பிரமணிய ஐயர், சொக்கலிங்க ஐயர், சின்னையா செட்டியார் ஆகியோர் வன்றொண்டரிடம் கல்வி கற்றவருள் சிலர் ஆவர்"[23] என்பதன் மூலம் அறியப்படுகிறது.

38-ஆம் பட்டம் பெரிய ஆறுமுக தேசிகர் சுவாமிகள் பிச்சுவையர் அவர்களைக் கொண்டு சண்முகநாதருக்கு உலா இயற்றுவித்தார். இந்த உலா நூலில் அக்காலத்து ஆதீனச் சிறப்பையும், ஐந்து கோயில்களிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் சிறப்பாகப் பாடியுள்ளார்.

பிச்சுவையர் பாடி அச்சிடப் பெற்ற நூல்கள் வருமாறு:

1. திருப்பரங்குன்றத்து முருகன் ஆனந்தக் களிப்பு

2. பனங்குடி பெரியநாயகியம்மை பதிகம்

3. ஸ்ரீசிருங்ககிரி சங்கரசாரியர் பதிகம்

4. பொன்னம்பல சிலேடை வெண்பா

5. மதுரைச் சுந்தரேசர் நீரோட்டகயமகவந்தாதி

போன்றவைகள் ஆகும்.

## யாழ்ப்பாணம் தில்லைநாத பிள்ளை

குன்றக்குடி ஆதீனத்தால் ஆதரிக்கப்பட்டவர். இவருக்கு இவ்வாதீனத்தால் 'நாவலர் பட்டம்' வழங்கப்பட்டது. இவரால் ஞானவந்தாதி, தெய்வசிகாமணி நான்மணிமாலை இரண்டும் முதன்முதலில் பதிப்பிக்கப் பெற்றன.

## குகை நமச்சிவாயர்

வீரசைவ மடமாகிய திருவண்ணாமலை மடம் சித்தாந்த சாத்திரங்களைப் பரப்புவதில் முன்னின்று விளங்கியது. திருவண்ணாமலையில் ஒரு குகையில் துறவுபூண்டு யோகியாய் வாழ்ந்தவர் குகை நமச்சிவாயர். இவர் அகமனதை ஆராய்கின்ற போக்கில் நூறு வெண்பாக்கள் கொண்ட 'அருணகிரி அந்தாதி'யை இயற்றியுள்ளார்.

இவருடைய மாணாக்கர் திருவண்ணாமலை ஆதீன ஆறுமுக சுவாமிகள். இவர் 'நிட்டானுபூதி' என்ற நூலை வடநூலின்றும் மொழி பெயர்த்தார். முத்துக்கிருஷ்ணப் பிரம்மம் என்பார் இதற்கு உரை வகுத்துள்ளார். இச்செய்தி, "ஆறுமுகசுவாமிகள் என்பார் குகை நமச்சிவாயாரின் மாணாக்கர். இவர் நிட்டானுபூதி என்ற நூல் இயற்றினார். இது மொழிபெயர்ப்பு என்ப, இதற்கு முத்துக்கிருஷ்ணபிரமம் உரை வகுத்தார்"[(24)] என்று கூறப்பட்டுள்ளது. குகை நமச்சிவாயர் அருணைத் தனிவெண்பாமாலை என்ற நூலையும் எழுதியுள்ளார்.

### பொன்னம்பலம் பிள்ளை

இவர் யாழ்ப்பாணத்துக்காரர். இவரையும் இவ்வாதீனம் ஆதரித்து வந்துள்ளது. இவ்வாதீனத் தம்பிரானாகிய இராமலிங்கத் தம்பிரான் காலத்தில் இயற்றப்பட்டது 'மயூரகிரிப் புராணம்' என்னும் நூல். இந்நூலுக்குப் பொன்னம்பலம் பிள்ளை உரை எழுதியுள்ளார்.

### ஆதீனம் வந்து சென்ற புலவர்கள்

### ஆறுமுக நாவலர்

யாழ்ப்பாணத்திலிருந்து திருவாவடுதுறை ஆதீனத்திற்கு வந்து 'நாவலர்' பட்டம் பெற்றவர். 38-ஆம் பட்டம் பெரி ஆறுமுக தேசிகர் காலத்தில் குன்றக்குடிக்கு வந்துள்ளார். ஆதீனத் திருமடத்தில் சிறந்த சைவச் சொற்பொழிவுகளை நிகழ்த்தியுள்ளார்.

குருமகா சந்நிதானம் அவர்கள் ஆறுமுக நாவலரைப் பாராட்டி, வேறு எந்த ஆதீனமும் செய்யாத வகையில் புதிதாகச் சிவிகை (பல்லக்கு) ஒன்று செய்வித்து ஊர்வலம் (பட்டணப்பிரவேசம்) செய்யும் சிறப்பைச் செய்தருளியுள்ளார்.

## மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் திருபெருந்துறையில் திருப்பெருந்துறைப் புராணத்தை அரங்கேற்றிய பின் குன்றக்குடிக்கு வந்துள்ளார். 38-ஆம் பட்டம் பெரிய ஆறுமுக தேசிக பிள்ளை அவர்களைச் சில நாட்கள் குன்றக்குடியில் தங்க வைத்து அவர்களுக்குத் தக்க சன்மானமும் வழங்கிய பின், பல்லக்கு மூலம் காரைக்குடி வரை அனுப்பி வைத்துச் சிறப்புச் செய்துள்ளார்.

## உ.வே.சாமிநாதையர்

39-ஆம் பட்டம் ஆறுமுக சுவாமிகள் தமிழ்ப் புலவர்களை நன்கு ஆதரித்தவர். தமிழ்த்தாத்தா உ.வே.சா அவர்களுக்குச் சிலப்பதிகாரத்தின் சிறந்த ஏட்டுப் பிரதியை உதவியருளினார். ஆதீன தலைமை எழுத்தர் அப்பா பிள்ளை அவர்களைக் கொண்டு உ.வே.சா அவர்களுக்குத் துணையாக மிதிலைப்பட்டி போன்ற பல இடங்களுக்கும் அனுப்பிச்சிறந்த இலக்கிய ஏடுகள் கிடைக்கச் செய்துள்ளார்.

ஆதீன அடியவர்களில் ஒருவராகிய சரவண சுவாமிகள் சென்னை மயிலாப்பூர் கட்டளை மடத்திலிருந்து சைவப் பணியும் தமிழ்ப்பணியும் ஆற்றி வந்த காலத்தில் உ.வே.சா. அவர்களைச் சந்தித்து தமிழ் இலக்கிய ஏடுகள் பெற முயன்றபோது தமது தள்ளாத 70-வது வயதிலும் உ.வே.சா அவர்களுடன் பல இடங்களுக்குச் சென்று ஏடுகள் இருக்கும் இடங்களைக் காட்டி, அவைகளைப் பெறும் முறைகளையும் கூறி உதவியுள்ளார்.

## தவத்திரு அடிகளார் காலத்தில் வந்த தலைவர்களும் புலவர்களும்

அடிகளார் அவர்கள் காலத்தில் ஆதீனத்திற்கு மத்திய, மாநில

அரசியல் தலைவர்கள், புலவர்கள், அயல்நாட்டார்கள், அறிவியல் அறிஞர்கள் எனப் பலரும் வந்து சென்றுள்ளனர்.

1959-இல் ஆ.தெக்கூரில் நடைபெற்றப் பள்ளிச் சீரமைப்பு மாநாட்டுக்கு இந்தியாவின் முதல் பிரதமராகிய நேரு வந்த பொழுது அடிகளார் அவர்கள் நேரு பெருமகனாருடன் கலந்துரையாடி மகிழ்ந்துள்ளார். மலேசிய அமைச்சர் டத்தோ சாமிவேல் அவர்களும், இலங்கை அமைச்சர் இராசதுரை அவர்களும் மடத்திற்கு வந்துள்ளனர். ஆச்சாரிய வினோபாபாவே (1956), அண்ணாத்துரை (1956, 1962) இராஜாஜி (1957), பெரியார் பல முறையும், கலைஞர் கருணாநிதி, சி.சுப்பிரமணியம், பக்தவச்சலம், நம்பூதிபாட், பி.இராமமூர்த்தி, ப.சிவானந்தம் போன்றோரும் வந்து சென்றுள்ளார்கள்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், கக்கன், தெ.பொ.மீ, அ.ச.ஞானசம்பந்தன், மு.வரதராசனார், நெ.து.சுந்தரவடிவேலு, எம்.ஆர்.இராதா, திரு.கல்யாணசுந்தரம், பால தண்டாயுதம், செம்பியன், கமில் சுவெலபில் போன்றோரும் திருமடத்துக்கு வருகை தந்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்.

ஆதீனப் புலவர்கள் வரிசையில் தொண்டாலும், தூய உள்ளத்தாலும், தீயாக உணர்வாலும், அடக்கத்தின் பண்பாலும் போற்றப் பெறுபவர் ஆதீனப்புலவர் மரு.பரமகுரு அவர்கள். சொல்லாலும், செயலாலும் சலியாத மனத்துடன் பிறர் நலம் பேணும் தகைமையாளர்; மனித நேயம் மிக்க மாண்பாளர். தெள்ளுத் தமிழில் நல்ல தமிழ்க் கவிதை இயற்றுபவர். அவர்களின் நாவில் தமிழ்த்தாய் உறைந்து, கவிமழை பொழியும் ஆற்றல்மிக்க கவிஞர்.

ஆதீனப் பணியை வாழ்வின் பணியாக ஏற்று உலையா உள்ளத்துடன் உவகையுடன் செய்து வருபவர். தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் மன மணிவிளக்காய், அகலாத் துணையாய், எண்ணத்திற்கு எழுதுகோலாய், தொண்டராய் விளங்கியவர் ஆதீனப் புலவர், மரு.பரமகுரு. "குன்றின் மேலிட்ட குன்றா ஒளிவிளக்காய் பிரகாசித்திட்ட நம் குருமணி எனும் ஒளி விளக்கில் கருகும் திரியாய்த் தம்மை கருக்கிக் கொண்டவர்" என்பர். அடிகளார் தொட்டுத் துலக்கிய தீபமாகத் தமிழ்க் கவிதையின் சுவடறிந்த வித்தகமாகத் திகழ்பவர்.

"காவடிகள் ஆடும் குன்றக்குடியைப் பாவடிகள் ஆடும் பைந்தமிழ்க் குடியாக்கிய பல தெய்வீகக் கவிஞர்களின் வரிசையில் தம்மையும் ஒருவராகப் பதிவு செய்து கொண்ட அருள்நெறிக் கவிஞரின் கருத்துக்கள், தமிழ்மாமுனிவர் அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளின் சாயலாக மிளிர்கின்றன"(25) என்பர்.

குன்றக்குடி மடத்தின் சமய விழாவானாலும், இலக்கிய விழாவானாலும், பொது விழாவானாலும் கவிஞர் அவர்களின் பங்களிப்பு விழாக்களின் சிறப்பிற்குப் பெருந்துணை நல்கும்.

"குன்றக்குடித் திருமடத்தின் இலக்கிய விழாக்கள், வெளியீடுகள், நூல்கள் அனைத்திலும் மரு.பரமகுருவின் கைவண்ணமும் கருத்து வண்ணமும் கலையழகோடு எப்போதும் சுடர் வீசுவது உண்டு"(26) என்பர். ஆதீனப் புலவராக இருந்து அருந்தமிழ்ப்பணி ஆற்றியுள்ளதை அவர்கள் எழுதிய நூல்களிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது.

குன்றக்குடித் திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீன வரலாற்று நூலினைத் திறம்படத் தொகுத்துக் குன்றக்குடி சண்முகநாத

அச்சகத்தால் 1990-இல் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலால் ஆதீன அடியார்களின் வரிசையையும் அவர்கள் ஆற்றிய சமய, சமுதாய தமிழ்ப்பணிகள் பற்றியும், ஆதீனச் சிறப்புக்கள் பற்றியும் வரலாற்றுச் சான்றுடன் அறிந்து கொள்ள முடிகிறது. குன்றக்குடி, திருக்கோளக்குடி கோயில்களின் தலவரலாற்றினைக் கல்வெட்டுக்கள், இலக்கியங்கள், புராணங்களின் செய்திகளைக் கொண்டு தெளிவான வரலாற்றினை எழுதியுள்ளார்.

கவிஞர் எந்நேரமும் எண்ணும் ஆத்மார்த்த தெய்வமாகிய குன்றக்குடி சண்முகநாதப் பெருமானுக்குச் சூட்டிய பாமாலை, "முருகன் தமிழ்மாலை" என்னும் கவிதை நூலாகும்.

"தமிழ் மண்ணின் குறிஞ்சிக் கடவுள் முருகனுக்குத் தமிழுள் உறையும் பரம்பொருளுக்குத் தமிழாய் வாழும் கவிஞன் சூட்டிய அற்புதப் பாமாலை! நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும் அனைத்து எலும்பு உள்நெக ஆனந்தத் தேன் சொரியும் அற்புதப் பக்தி பாமாலைகளை ஆறுமுகச் செவ்வேளுக்குச் சூட்டி அணி செய்துள்ளார். பக்திமனமுடைய நம் ஆதீனப் புலவர் மரு.பரமகுரு" என்று தவத்திரு பொன்னம்பல அடிகளாரின் அருள் வாழ்த்துரை இந்நூலுக்கு மகுடமாய் அமைந்துள்ளது.

"செய்தொழிலில் சிந்தனையில் மக்கள் சிறந்துயரக்
கைதொழுதேன் கந்தக் கடவுளே - ஐயனே
பொய்யும் புரட்டுருட்டும் போர்பகையும் மண்டிவரும்
வையகத்தைக் காக்கஉடன் வா"(27)

என்ற பாமாலை மூலம் சமூகச் சீர்கேடுகள் அகன்று மக்கள் நலன்

காக்கப்பட வேண்டும் என்ற கவிஞரின் சமுதாய அக்கறை வெளிப்படுவதை அறியலாம்.

தமிழில் நெடுங்காப்பியங்களும், குறுங்காப்பியங்களும் தோன்றி தமிழ் அன்னைக்கு அணி சேர்த்துள்ளன. "அமுதசுரபி" மாத இதழும், இந்தியன் வங்கியும் இணைந்து நடத்திய காப்பியப் போட்டியில் வெற்றி பெற்ற காப்பியமாகிய குன்றக்குடி ஆதீனக் கவிஞர் எழுதிய "தியாக தீபம் தேவவிரதன்" என்ற காப்பியம் குறுங்காப்பியமாகத் தமிழுக்கு இனிமை சேர்த்துள்ளது.

"இந்நூற்றாண்டில் ஒரு காப்பியம் அதுவும் மரபுக் கவிதையின் மகரந்த மணம் கமழும் ஒரு காப்பியம் தமிழ்தேர்ந்த கரங்களிலிருந்து விளைந்த ஒரு காப்பியம், மதுரம் கனிந்த பசுந்தமிழ் கொஞ்சும் கவிஞர் மரு.பரமகுரு தந்திருக்கும் மருக்கொழுந்துக் காப்பியம் தியாக தீபம் தேவவிரதன்"[28] என்பர்.

இக்காப்பிய நூலைப் படிப்பவர்கள் மனதிற்குத் தமிழ் இன்பத்தையும் மீண்டும் மீண்டும் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தையும் ஏற்படுத்தும்.

"வீடுமனைப் போன்ற ஒரு
மேலான மாமனிதன்
நீடுலகம் நேற்றுவரை
நிச்சயமாய் கண்டதில்லை!
நீடுலகம நேற்றுவரை
நிச்சயமாய்க் கண்டிருந்தால்
நாடுபிடிச் சண்டை
நடந்திருக்க மாட்டாதே!"[29]

என்று பாடியுள்ளார். இதுபோல் உலகத்தில் நடக்கும் யதார்த்தத்தைக் காவிய நோக்கில் பல இடங்களில் சொல்லோவியமாக்கியுள்ளார். மரு.பரமகுரு எழுதிய "பறம்புமலை திருக்கொடுகுன்றம் மூலம் பறம்புமலைச் சிறப்பினைப் பற்றிப் பாடிய தேவார, புராண இலக்கியச் செய்திகளை அறிந்து இன்புறலாம்."

மூவர் பாடிய தேவாரம் பெற்ற சிவத்தலங்கள் பாண்டிய நாட்டில் பதினான்கு உள்ளன என்பதைப் பாண்டி பதினான்கு தலங்கள் என்பது மரபு. அதனை,

"கூடல் புனவாயில் குற்றாலம் ஆப்பனூர்

ஏடகம் நெல்வேலி இராமேசம் - ஆடானை

தென்பரங்குன் றம்சுழியல் தென்திருப்புத் தூர்கானை

வன் கொடுங்குன் றம்பூ வணம்"

என்ற பாடலால் அறியப்படுகிறது.

மாணிக்கவாசகர் சுவாமிகள் தாம் அருளிய திருச்சிற்றம்பலக் கோவையாரில்,

"கொடுங்குன்றின் நீள்குடுமி மேற்றேன்

விரும்பும் முடவனைப் போல்"

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் நால்வரும் போற்றிய திருத்தலம் "திருக்கொடுங்குன்றம்" என்பதைத் தேவாரப் பாடல்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளது. இதன்மூலம் ஆசிரியர் பலவகை இலக்கியம் கற்றறிந்த மாண்பு புலனாகிறது.

## தொகுப்புரை

தமிழைச் சமயம்தோறும் வளர்ந்த தையல் என்பர். தமிழகத்தில் சைவ சமயம் தமிழ் வளர்ப்பதில் முன்னிலையிலுள்ளது. நாற்பத்தாறு சந்நிதானங்கள் மடத்திலிருந்து சமயப் பணிகளையும்,குறிப்பாகத் தமிழ்ப் பணிகளையும் ஆற்றியுள்ள போதிலும் நாற்பத்தைந்தாவது குருமகா சந்நிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் தமிழ்ப் பணிகள் அளப்பரியன.

மன்னர்களின் அரண்மனைகளில் தவழ்ந்த தமிழ் மடங்கள் நோக்கி நடந்து வளர்ச்சி பெற்றது. மடங்கள் சமயத்தையும், தமிழையும் இரு கண்களாகப் போற்றியுள்ளன. குன்றக்குடி ஆதினத்தின் தமிழ்ப்பணி அளப்பரியது. நூல்கள் உருவாக்கம், பதிப்புப்பணி, உரைப்பணி, உரைநடைப்பணி , புறவுப்பணி, கல்விப்பணி, பரிசு மற்றும் பாராட்டுப்பணி என தமிழின் வளர்ச்சியில் பல பணிகளைச் செய்துவருகின்றது.

தமிழ் இதழ்கள் பல மடத்திலிருந்து வெளிவந்துள்ளன. வருகின்றன. நாடகம், சமய, சமுதாய நூல்கள் பலவும் மடத்தின் வழி தோற்றம் பெற்றுள்ளன. யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, உ,வே.சாமிநாதையர், வேம்பத்தூர் சிலேடைப்புலி, பிச்சுவையர் போன்ற தமிழ்ச் சான்றோர் இவ்ஆதினத்திற்கு வருகை தந்துள்ளனர்.

ஆதினப் புலவர்கள் க.கதிரேசன், மரு.பரமகுரு போன்றவர்களின் தமிழ்ப்பணியும், குன்றக்குடி பெரிய பெருமாள் அவர்களது மடம் சார்ந்த தமிழ்ப்பணியும் பாராட்டுக்குரியது.

இம்மடம் குன்றக்குடியில் சண்முகநாதன் அச்சகம் என்ற ஒன்றை நிறுவி நூல்களையும், இதழ்களையும் அச்சிட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

இத்திருமடத்தின் சார்பாகச் சென்னை, மதுரை போன்ற நகரங்களிலிருந்து இதழ்கள் பல வெளிவந்தமை குறிப்பிடத்தக்கது.

மடத்தின் சார்பாக இலக்கிய மாநாடுகள், கருத்தரங்குகள், பட்டிமன்றங்கள், ஆன்மீகச் சொற்பொழிவுகள் பல நிகழ்ந்து வருகின்றன. இந்நிகழ்வுகள் வழி தமிழ் வளர்ச்சியடைந்து வருவது கண்கூடு.

தாய்த் தமிழில் அர்ச்சனை வழிபாடு, தமிழில் அறிவியல் நூலாக்கம், தமிழ் அகராதிகள் வெளியீடு எனத் தமிழுக்குப் பல நிலைகளில் சிறப்புச் செய்து வருகின்றனர்.

அரசுடனும், பல்கலைக்கழகங்களுடனும் இணைந்து தமிழ் வளர்ச்சிக்கு மடம் பல ஆக்கப்பூர்வமான முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றது.

பல கல்வி நிறுவனங்களைச் சிறப்பாக நடத்தியும், அவற் வழி மாணவர்களுக்குத் தமிழையும் போதித்து மடம் தமிழ் தொண்டாற்றி வருகின்றது.

# மேற்கோள் விளக்கம்

1. மது.ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.203.
2. சோமலே, வளரும் தமிழ், ப.286.
3. சி. பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.176.
4. அருட்திரு குமாரசுவாமித் தம்பிரான், நான்மணிமாலை, ப.75.
5. மேலது, பக்.29-30.
6. அருட்திரு குமாரசுவாமித் தம்பிரான், சிற்குருமாலை, பாடல்: 3.
7. திருவாவடுதுறை ஆதீன வித்துவான் அருள்திரு ஆறுமுக சுவாமிகள், ஸ்ரீதெய்வசிகாமணி நான்மணிமாலை, ஞானவந்தாதி, பாடல் எண்.1,2.
8. சோமலே, செட்டிநாடும் செந்தமிழும், ப.55.
9. குன்றக்குடி அடிகளார், தமிழில் வழிபாடு கொள்கை விளக்கம், நூலின் பின்புற அட்டை.
10. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.64.
11. மரு.பரமகுரு, குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன வரலாறு, பக்.38-39.
12. மரு.பரமகுரு, வாழ்வியல் களஞ்சியம், (தொகுதி-10),
13. பொன்னீலன், தமிழகத்தின் ஆன்மீக வழிகாட்டி, ப.110.
14. குன்றக்குடி அடிகளார், மக்கள் சிந்தனை, (அக்டோபர் 04) ப.4.
15. அருட்திரு குமாரசுவாமித் தம்பிரான், ஸ்ரீ தெய்வசிகாமணி நான்மணிமாலை, பாடல்: 240, 250, 260 ப.87.
16. மரு.பரமகுரு, குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன வரலாறு, பக்.36.

17. சோமலெ, செட்டிநாடும் செந்தமிழும், ப.113.

18. கா.சுப்பிரமணியபிள்ளை, இலக்கிய வரலாறு, ப.448.

19. வித்துவான் எச்.வைத்தியநாதன், பிற்காலப் புலவர்கள், ப.125.

20. மரு.பரமகுரு, குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன வரலாறு, பக்.25.

21. கா.சுப்பிரமணியபிள்ளை, இலக்கிய வரலாறு-(16-ஆம் நூற்றாண்டு) (இரண்டாம் பாகம்), ப.43.

22. சாந்துப்புலவர், மயூரகிரிக்கோவை, ப.2.

23. சோமலே, செட்டிநாடும் செந்தமிழும், ப.114.

24. கா.சுப்பிரமணியபிள்ளை, இலக்கிய வரலாறு-(16-ஆம் நூற்றாண்டு) (இரண்டாம் பாகம்), ப.42.

25. மரு.பரமகுரு, முருகன் தமிழ்மாலை, அணிந்துரை, V.

26. மரு.பரமகுரு, தியாக தீபம் தேவவிரதன், ப.8.

27. மரு.பரமகுரு, முருகன் தமிழ்மாலை, ப.8.

28. மரு.பரமகுரு, தியாக தீபம் தேவவிரதன், ப.7.

29. மேலது, ப.36.

30. மரு.பரமகுரு, பறம்புமலை திருக்கொடுங்குன்றம், ப.1.

31. மேலது, ப.57.

# இயல்-5

## முன்னுரை

"உயிரெலாம் ஓம்புமோர் உடம்பும் ஆயினான்" என்ற கம்பனின் வாக்கிற்கேற்ப குடிமக்களைத் தம் உயிராகப் பாவித்து அருளாட்சி புரிந்தவர் அருள்நெறித் தந்தை அடிகளார். மக்களுக்கு உழைக்க வேண்டும் என்ற அவா, இந்து சமய வளர்ச்சியில் ஈடுபாடு, தமிழின் இனிமையை உலகறியச் செய்ய உழைத்த மாண்பு, மேடைக்கு இலக்கணம் கண்டமை, தமிழர்களின் பண்பாடு, நாகரிகம் போற்றும் தன்மை போன்ற நற்பண்புகளைப் பெற்றவர் அடிகளார்.

ஏழை, பணக்காரர் இருவரையும் ஒக்க நோக்கிய "சமத்துவ சந்நிதானம்" என்றும் "காவி உடுத்திய கார்ல்மார்க்ஸ்" என்றும் உலகம் அவரை அன்பொழுக அழைத்தது. இத்தகைய சிறப்புக்களைப் பெற்ற தவத்திரு அடிகளார் 1949-இல் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தின் இளைய சந்நிதானமானார். 1952-இல் அருளாட்சி ஏற்று மகாசந்நிதானமாக எழுந்தருளினார். இவர்களைத் தமிழ் கூறும் நல்லுலகம் 'தவத்திரு குன்றக்குடி அடிகளார்' என்று அழைத்து மகிழ்கிறது. காலப்போக்கில் 'அடிகளார்' என்று அழைத்து மகிழ்ந்தனர். 'அடிகளார்' என்றால் இவர்களை மட்டுமே குறிக்கும் என்றளவிற்குத் தனிச்சிறப்புப் பெற்றவர்.

சொல்லைச் செயலாக்கியவர். தமிழகம் உலகத்தோடு உறவுகொள்ள வைத்தவர். 'நடமாடும் பல்கலைக்கழக வித்தகர்' நுண்மாண் நுழைபுலம் மிக்க அடிகளாரின் பலவிதமான உறவுகளை 'அடிகளார் ஓர் உறவுப்பாலம்' என்னும் நூல் மூலம் அறியமுடிகிறது. சித்தாந்த செந்நெறிக்கும், செந்தமிழ்

மொழிக்கும், தமிழகத்து மக்களுக்கும் 40 ஆண்டுகளுக்கும் மேலாக அவர் ஆற்றியுள்ள தொண்டுகள் யாவரும் அறிந்ததாகும். "அடிகளார், உண்மைச் சமயநெறிக்கு மாறான கருத்துக்களை வெல்லும் சொல்லாற்றலும், செயலாற்றலும் படைத்தவர். சைவசமய சாத்திர, தோத்திர நூல்களைப் பயின்று தெளிந்தவர்; தமிழ் இலக்கியங்களைக் கற்றுத் துறைபோகியவர்; ஆங்கில மொழிப்புலமை உடையவர்; உலகின் பல்வேறு சமய நூல்களையும், தத்துவ நூல்களையும் ஆழ்ந்து பயின்று சிந்தித்தவர்; உலகிலுள்ள பல்வேறு அரசியல் ஞான நூல்களையும் கற்றவர்; அறிவியல் நூல்களைப் பயின்றவர்; சமுதாய வரலாற்றை ஊன்றிக் கற்றவர்; சமுதாய நிகழ்வுகளைப் பாடமாகக் கொண்டு படித்தவர்; உழைப்பையே தவமாகக் கொண்டவர்; தொண்டு செய்வதையே தொழிலாகக் கொண்டவர். இவர் செய்துள்ள தொண்டு அளப்பரியது"(1) என்பர்.

மொழி பற்றிய அடிகளாரின் சிந்தனைப் பற்றி, "தமிழ் வளர்ச்சி, தமிழின வளர்ச்சிப் பற்றிய துறைகளிலும் முக்கியமானது முதலாவது இன வளர்ச்சி. அந்த அடிப்படை மீது அமைவதுதான் மொழி வளர்ச்சி, இன வளர்ச்சிக்கு எதிரான மொழிக் கொள்கை, மொழி வளர்ச்சிக்கும் உதவாது என்ற அணுகுமுறையோடு மொழித்துறையில் புலவர்களும் உணரத் தவறிய, உணர்ந்தாலும் எடுத்துக் கூறத் தயங்கிய உண்மையைத் தெளிவுடனும், துணிவுடனும் பலவழிகளில், பல மேடைகளில் வற்புறுத்தினார்"(2) என்று கூறுவர்.

தவத்திரு அடிகளார் தமிழ் வளர்ச்சி பற்றியும், அதற்காக நாம் மேற்கொள்ள வேண்டிய பணிகள் பற்றியும் தெளிவான சிந்தனை உடையவர். அவருக்கு இருக்கும் மொழிப் பற்றிற்கு அடிப்படை எது

என்பதை அடிகளார் அவர்களே கூறும் கருத்துக்களாவன, "தமிழ்- என் தாய்மொழியாக இருப்பது ஒரு காரணம். அதற்கு ஓர் இருபத்தைந்து விழுக்காடு தான் மதிப்பெண் கொடுக்கலாம். அது என் தாய்மொழியாக இருப்பதன் காரணமாக எளிதாகப் பேச, எளிதாக நினைக்க, எளிதாக சிந்திக்கத் துணைசெய்கிறது - என்பதற்கு ஓர் விழுக்காடு கொடுக்கலாம். ஆனாலும் ஐம்பது விழுக்காடு நான் தமிழினிடத்தில் பற்றாளனாக இருப்பதற்குக் காரணம் தமிழ் மொழி வளர்ந்தமுறை; தமிழ் வளர்ந்த நாகரிகம்; தமிழ் வளர்த்த மரபு; தமிழ் வளர்த்த சிறந்த பண்பாடுதான்."[3] என்கிறார்.

அடிகளார் தமிழ் மொழிப் பற்றாளராக இருந்ததோடு மட்டுமல்லாமல் அம்மொழி வளர பல கோணங்களில் சிந்தித்து நெறிப்படுத்தி, செயற்படுத்திக் காட்டியவர். அவர் தமிழ் மொழி வளர்ச்சிக்குக் கூறிய வழிவகைகள் கீழ்வருமாறு வரையறுக்கப்படுகின்றன.

"தமிழில் உயிர்ப்புள்ள அறிவியல், பொருளியல், தொழிலியல், அரசியல் முதலான துறைகளைச் சார்ந்த நூல்கள் தோன்ற வேண்டும். இவை மொழி பெயர்ப்பாக அமையாமல் தமிழர்தம் சிந்தனையினால் படைக்கப்படல் வேண்டும். தமிழன்னைக்கு இந்நூல்களே இன்றையத் தலைமுறையினர் அணிவிக்கும் புதிய அணிகலன்கள் என்கின்றார் அடிகளார்.

தமிழ் மொழி வாழ்க! என்று முழக்கம் செய்வதனால் மட்டும் தமிழ் வாழ்ந்துவிடாது, வளர்ந்துவிடாது. அம்முழக்கம் செயல் வடிவம் பெறல் வேண்டும். அதற்குத் தமிழைத் துறைதோறும் வளர்க்க முயல வேண்டும். தமிழ் வளர்ச்சிக்குத் திட்டமிட்ட தன்னாதிக்கமுள்ள ஒரு பெரிய நிறுவனம் அமைத்தல் வேண்டும். ஆரவாரமின்றி, அதே நேரத்தில் சிற்றூர்ச் சூழலும்

இயைகின்ற இடத்தில் இந்நிறுவனம் அமைந்து தமிழ்ப்பணி செய்தல் வேண்டும். இங்கு உலக மொழிகள் அனைத்திலும் உள்ள புத்தகங்கள் அடங்கிய நூலகம் ஒன்று அமைதல் நலம்.

இந்நிறுவனத்தில் விஞ்ஞான ஆய்வுக்கூடம் ஒன்று ஏற்படுத்தப்படல் வேண்டும். இவ்வறிவியல் ஆய்வுக் கூடத்தில் ரஷ்யா, ஜெர்மனி, ஜப்பான் மற்றும் தொழில் துறையில் முன்னேறிய நாடுகளின் பேரறிஞர்கள் ஆய்வு செய்தல் வேண்டும்.

பிற மொழிகளில் வளர்ந்துள்ள தொழில் நுட்பம் மற்றும் ஏனையத் துறைகளின் திறன்களை இளைய தலைமுறையினரின் அறிவுப் புலனில் பதியச் செய்து, அவர்களை மேலும் அத்துறைகளில் சிந்தித்துப் புதியன படைக்கும் ஆற்றல் உடையவர்களாக மாற்ற வேண்டும். இப்படித் தமிழைத் துறைதோறும் வளர்த்தலே தமிழும் தமிழரும் முன்னேற்றம் அடைய வழிவகுக்கும் என்பன அடிகளார் கருத்து"(4) என்பர்.

அடிகளார் மொழி வளரக் கூறியுள்ள கருத்துக்களை இன்றைய தமிழறிஞர்கள் இந்திய அரசிடம். துறைதோறும் தமிழினைப் புகுத்தி, தமிழ்மொழியைச் செம்மொழி ஆக்கவேண்டும் என்று வழியுறுத்தி வருவதை அறிவோம். தமிழ்வழிக் கற்றவர்கள் 'சிவில் சர்வீஸ்' தேர்வில் வெற்றி பெற்று வருவதும், விஞ்ஞான தொழிற்நுட்பத்தில் தமிழ் கலைச்சொற்களைத் தமிழில் உருவாக்கி வெளிவருவதும் அடிகளாரின் கூற்றினை, கனவினை மெய்ப்பிப்பதாக உள்ளன.

அடிகளாரின் தமிழ்ப்பணிகள் பலவாகும். இந்தி எதிர்ப்பு, திருப்புத்தூர் தமிழ்ச்சங்கம், தமிழ் விழாக்கள், பாரி விழா, தமிழில் வழிபாடு, இலக்கியப் பணிகள், தமிழறிஞர்களுக்குப் பாராட்டு, எழுத்துப்பணி என வகைப்படுத்திக் கூறமுடியும்.

## இந்தி எதிர்ப்பு

இந்தியாவில் ஆட்சி மொழி இந்தி என்று 1965-ஆம் ஆண்டு மத்திய அரசு அறிவித்தது. இதனைப் பல அரசியல் தலைவர்களும், மக்களும், தமிழறிஞர்களும் கடுமையாக எதிர்த்தனர். அடிகளார் இந்தியைக் கட்டாயமாக திணித்ததை எதிர்த்து மேடைகளில் முழங்கினார். அன்றைய தமிழக அரசு அடிகளார் மீது வழக்குத் தொடுத்து ஒறுப்புக் கட்டணம் பெற்றது.

## திருப்புத்தூர் தமிழ்ச்சங்கம்

"நன்பாட்டுப் புலவனாய் சங்கமேறி நற்கனகக்

கிழிதருமிக்கு அருளினோன் காண்"(5)

என்று திருப்புத்தூரில் எழுந்தருளியுள்ள இறைவனைப் பாடிய அப்பரடிகளின் அடியொற்றிச் சமயப்பணிகள் செய்துவரும் அடிகளார் 18.9.1967-இல் திருப்புத்தூர் தமிழ்ச்சங்கத்தை நிறுவினார். அறுபத்து மூன்று சைவ நாயன்மார்களை நினைவூட்டும் வகையில் இத்தமிழ்ச் சங்கத்தில் அறுபத்து மூன்று தமிழ் அறிஞர்கள் முதன்மை உறுப்பினராக உள்ளனர். துணை உறுப்பினராக அறுபத்திரண்டு தமிழறிஞர்கள் உள்ளனர்.

இச்சங்கம் ஆண்டுக்கு இருமுறை கூடி மொழி, இலக்கியம், இலக்கணம், சமயம், தத்துவம், மக்கட்பணி ஆகியவற்றைப் பற்றி ஆய்வு செய்கின்றது. தமிழ்க் கவிஞர்களை ஊக்கப்படுத்தும் வகையில் நேர்முகக் கவிதைப் போட்டி ஒன்றை ஆண்டுதோறும் நடத்தி வெற்றி பெறும் கவிஞருக்கு ரூபாய் ஆயிரத்தி எட்டுக் கொண்ட பொற்கிழி பரிசாக வழங்கப்பட்டுப் பொன்னாடை போர்த்தப் பெறும். சிறந்த

புலமையாளர்களுக்கு இத்தமிழ்ச்சங்கம் சிறப்புப் பட்டங்கள் வழங்கிப் பாராட்டி வருகிறது.

**தமிழ் விழாக்கள்**

திருமுறைகளைப் போற்றி அறியும் பொருட்டு ஆண்டுதோறும் திருமுறை விழாவும், திருவாசக விழாவும், பிட்டுத் திருவிழாவும் அடிகளார் அவர்களால் தொடங்கி இன்றும் நடைபெற்று வருகின்றன. தைமாதம் ஆதீனம் சார்ந்த கோயில்கள் உள்ள சிற்றூர்களில் ஒவ்வொரு ஆண்டும் 'ஏர்முனை விழா' சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது.

**பாரி விழா**

வள்ளல் பாரி வாழ்ந்த பறம்புமலை இப்போது 'பிரான்மலை' என்ற பெயருடன் ஆதீனத்தின் கட்டுப்பாட்டிலுள்ளது. இத்திருத்தலத்தில் உள்ள மங்கைபாக சுவாமி திருக்கோயிலில் சித்திரைத் திங்களில் நடைபெறும் பத்து நாட்கள் விழாவில் இரண்டு நாள் விழாவினைப் பாரி விழாவாக அடிகளார் அவர்கள் கொண்டாடி மகிழ்வார்.

விழாவில் பாரியின் சார்பாக விழாத் தலைவர் குடிமக்களுக்குப் படியரிசி வழங்குவார். 1953-ஆம் ஆண்டுத் தொடங்கப்பட்ட இவ்விழாவில் வள்ளல் அழகப்பச் செட்டியார் பாரியாக வீற்றிருந்தார். தமிழ்ப் புலவர்களுக்கும், இசை வாணர்களுக்கும், கலைத்துறை அறிஞர்களுக்கும் அவரவர் துறைகட்குத் தகுந்தார்போல் சிறப்புப் பட்டம் வழங்கப் பெறும்.

**தமிழில் வழிபாடு**

இறைவனை எம்மொழியிலும் வழிபடலாம் என்றாலும் அவரவர் தாய்மொழியில் வழிபடுவதுதான் இறைவனிடத்தில் ஒன்றிப்பை

ஏற்படுத்தும் என்ற கருத்துக் கொண்டவர் அடிகளார். தமிழ் நாட்டில் முன்னாள் அறநிலைய அமைச்சர் எம்.பக்தவச்சலனாருடன் கலந்து பேசித் தமிழருச்சனையை நடைமுறைப்படுத்தினார்.

"அடிகளார் தொடங்கிய புரட்சிகளுள் முதன்மையானது கோயில்களில் தேவாரத் திருவாசகங்களைக் கொண்டு தமிழில் அர்ச்சனை செய்ய வேண்டும் என்பதாகும்" என்பர். இறைவனுக்குச் சாதியில்லை. மக்கள் அனைவரும் அவனது பிள்ளைகள். அவன் சந்நிதியில் சாதி வேறுபாடின்றி எல்லாரும் பூவும் புனலும் சொரிந்து வழிபடலாம் என்னும் புதிய கொள்கைகளை இறுதிவரை கடைப்பிடித்து அதற்காக உழைத்து வந்தார்.

1962-இல் மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயிலின் அருள்நெறித் தந்தையின் முன்னிலையில் முன்னால் அமைச்சர் எம்.பக்தவச்சலம் அவர்கள், திருமுறைத் தமிழருச்சனையைத் தொடங்கி வைத்தார். மேலும் 1969-இல் "சீலமுடைய எல்லாரும் சாதி வேறுபாடின்றித் திருக்கோயில் கருவறைக்குள் சென்று புனலும் புவும் சொரிந்து வழிபாடு செய்வது பிறப்புரிமை" என்ற முழக்கத்தைத் தமிழ்மக்கள் முன் வைத்துத் தமிழில் வழிபாட்டினை வலியுறுத்தி வந்தார்.

## இலக்கியப் பணிகள்

அடிகளார் சமய இலக்கியங்களை நன்கு கற்று தன்னுடைய சமயக் கருத்துக்களுக்கு வலுச்சேர்த்துக் கொண்டவர். தமிழ் இலக்கியங்களில் நன்கு பயிற்சி பெற்று தமிழ் மொழி வளர தமிழ்த்தாயின் தவப்புதல்வர்களில் தானும் ஒருவராக இருந்து தமிழ்ப்பணியாற்றியுள்ளார்.

தாம் கூறும் எந்தக் கருத்தையும் இலக்கிய நோக்கில் சொல்லவேண்டும் என்று நினைத்துச் செயல்படுத்தியவர்.

## திருக்குறள் பணிகள்

"எல்லாரு மோர்குலம் எல்லாரு மோரினம்

எல்லாரு மிந்திய மக்கள்"(6)

என்ற பாரதி கண்ட சமநிலைச் சமுதாயத்தைத் திருக்குறள் மூலம் அமைக்க முடியும் என்று நம்பியவர். திருக்குறளைத் தேசிய நூல் எனப் பிரகடனப்படுத்துதல் வேண்டும் என்று அடிகளார் எழுப்பிய குரல் இன்று நாடு முழுவதும் ஒலிக்கிறது.

அடிகளார் அவர்களின் இலக்கியப் பணிகளில் திருக்குறளுக்குச் செய்த பணி, போற்றுதலுக்குரிய அரிய பணியாகும். 1969-ஆம் ஆண்டு மதுரையில் திருவள்ளுவர் ஈராயிரமாண்டு விழாவைப் பெரும் பொருட் செலவில் கொண்டாடியதில் அடிகளார்க்குப் பெரும் பங்குண்டு.

அடிகளாரின் இலக்கியப் பணிகளைத் தமிழ் கூறும் நல்லுலகம் அறியும் பொருட்டுத் தமிழறிஞர் பெருமக்களின் பெருமுயற்சியால் அடிகளார் அவர்கள் எழுதிய நூல்களை 15 தொகுதிகளாகத் தொகுத்து ஒவ்வொரு தொகுதியும் 400 பக்கங்களைக் கொண்டு மொத்தம் 6000 பக்கங்களை உடையதாக 'குன்றக்குடி அடிகளார் நூல் வரிசை' என்ற தலைப்பில் மணிவாசகர் பதிப்பகம் வெளியிட்டுப் பெருமை அடைந்துள்ளது.

இந்நூல்கள் இலக்கியம், சமயம், சமுதாயம், பொது என்ற தலைப்புக்களில் அமைந்துள்ளன. திருக்குறள் பற்றி அடிகளார் ஆற்றிய உரைகள், கட்டுரைகள். குறள்களுக்கு அளித்த அற்புதமான விளக்கங்கள் போன்றவை திருக்குறள் தொகுதிகளில் இடம்பெற்றுள்ளன.

அடிகளார் திருக்குறளை நீதி நூலாக மட்டும் காணாமல் வாழ்வியல் நூலாகக் கொண்டு போற்ற வேண்டும் என்றார். "திருவள்ளுவர் நெறியில் இந்த வையகம் நடைபோடுமானால் இன்று இந்த உலகத்தை வருத்தும் துன்பங்கள் அனைத்தும் அகலும்; அன்பு வளரும்; அறம் வளரும்; பண்பாடு வளரும்; இந்த உலகம் இடையீடின்றி இயங்கும். இந்த உலகம் அழியாது; என்றும் நிலைபெற்று விளங்கும்" என்று திருக்குறள் சிந்தனையை நமக்கெல்லாம் வழங்கியவர் அடிகளார்.

"இன்று காணப்படும் சாதி, பொருளாதாரச் சீர்கேட்டிற்குத் திருக்குறள் வழி அடிகளார் தீர்வு காணுகின்றார். திருக்குறள் பேரவையின் மாநிலத் தலைவராகப் பொறுப்பேற்றபொழுது சமுதாய நோக்கில் திருக்குறளை மக்களிடையே பரப்பி வந்தார். திருக்குறளைத் தேசிய நூலாகவும், இந்து சமய சமுதாய மறை நூலாகவும் ஏற்கப்படல் வேண்டும் என்பது அடிகளார் கருத்து"(7) என்பர். சம உரிமை, சம வாய்ப்பு, சமநிலைச் சமுதாயத்தை, சாதி, மத, இன பேதமற்ற பொதுமைச் சமுதாயத்தை, ஒப்புரவுச் சமுதாயத்தைப் படைக்கவல்லது திருக்குறள் என்பது அடிகளாரது அசைக்க முடியாத நம்பிக்கை. அதனால் திருக்குறள் நெறியை நடைமுறைப்படுத்தும் ஓர் இயக்கம் வேண்டுமென விரும்பினார். அதன்படி 11.6.1973-இல் திருக்குறள் பேரவை தோன்றியது.

இந்தத் திருக்குறள் பேரவை தமிழகம் முழுவதும் பரவிக் கால் கொண்டு இருநூறுக்கும் மேற்பட்ட கிளைகளுடன் செயல்பட்டு வருகிறது. ஆயிரக்கணக்கான உறுப்பினர்களைக் கொண்டுள்ளது. பேரவை மூலம் அடிகளார் பல கருத்தரங்குகளையும், உரையரங்குகளையும், கலந்துரையாடல்களையும் நடத்தித் தமிழக மக்களுக்குத் திருக்குறள் சிந்தனையை உருவாக்கினார். இப்பேரவை பல மாவட்ட, மாநில

மாநாடுகளை நடத்தித் தமிழக மக்களிடையே தனிச்சிறப்புப் பெற்று வருகிறது.

இப்பேரவையின் தலைவராக அடிகளார் இருந்த போது இந்தியாவின் பிற மாநிலங்களிலும் கிளைகள் தொடங்கப்பட்டுச் செயல்பட்டு வந்தன. அடிகளார் தோற்றுவித்த அமைப்புக்களில் இன்றும் இளமை குன்றாது மாநாடுகள் நடத்திவரும் பேரியக்கம் இது. "வையத்துள் வாழ்வாங்கு வாழ்வோம்" என்பதை நோக்கமாகக் கொண்ட இவ்வியக்கம் சீருடனும் சிறப்புடனும் செயல்படக் காரணமானவர் அடிகளாரே ஆவர்.

அடிகளார் திருக்குறளில் அறத்துப்பாலுக்கும், பொருட்பாலுக்கும் சிறந்த உரை எழுதியுள்ளார். அவர்களின் உரை கற்றவர்கள், கல்லாதவர்கள் அனைவரும் கற்றும் கேட்டும் இன்புறத்தக்க இனிமையான உரையாகும். "திருக்குறள் ஒரு முழுநூல்; வாழ்க்கையின் அனைத்துப் பகுதிகளையும் தழுவிய வாழ்க்கை நூல்; அறநூல்; அரசியல் சாத்திர நூல்; அரசியல் உண்மைகளைச் சதுரப்பாட்டுடன் காட்டும் பெருநூல்; மெய்யுணர்வினை நல்கும் ஞான நூல்; மனித வளர்ச்சியின் பருவம் தோறும் துணைநின்று வழிநடத்தும் வாழ்வு நூல்; உலகப் பொதுநூல்" என்கிறார் அடிகளார்.

அவர் செய்த உரைகளில் பல இடங்களில் மனித வாழ்க்கையின் யதார்த்தத்தை அறிய முடிகிறது. சான்றாக,

"அழுக்காறு எனஒரு பாவி திருச்செ ற்றுத்
தீயுழி உய்த்து விடும்"

என்ற குறளுக்கு,

"பொறாமை என்று சொல்லப்படும் பாவி தன்னையுடையவனை

இம்மைக்கண் செல்வம் கொடுத்து, மறுமைக்கண் நரகத்தில் புகுத்திவிடும் என்கிறார். இந்திய நாடு எல்லா வளங்களும் பெற்றிருந்தும் தகுந்த முயற்சிகள் இருந்தும் முன்னேறாததற்குக் காரணம் இந்த நாட்டில் "அழுக்காற்றுப் பாவி நடமாட்டம் இருப்பதால் தான். இந்தப்பாவி துறவிகளையும் பிடித்து ஆட்டுவது வியப்பிற்குரியது"(8) என்பார்.

"துன்பம் உறவரினும் செய்க துணிவுஆற்றி
இன்பம் பயக்கும் வினை"

என்ற குறளுக்கு உரை கூறுகிறார்.

"துன்பமே வந்து உறுத்தினாலும் துணிவுடன் இன்பம் தரும் செயல்களைச் செய்க" என்ற எளிய உரையுடன் "இன்பம் பயக்கும் எனின் என்னும் பாடம் உண்டு", "முன்பே எண்ணித் துணிக" என்று கூறியுள்ளதால் ஈண்டு எண்ணித் துணிந்த பணி இன்பம் பயக்கும் என்ற ஒருதலையான முடிவுக்குப் பிறகு தொடங்கிய பணியாக இருப்பதே முறையாதலின் "இன்பம் பயக்கும் வினை" என்ற பாடமே சரியானது.

எந்த ஒரு பணியும் தொடக்கத்தில் துன்பம் தருதலே இயற்கை. போதிய பட்டறிவு இன்மையாலும், சுற்றுப்புறச் சூழ்நிலைகள் தகுதிப்படுத்தப்படாததாக இருப்பதனாலும் துன்பம் வரும் காலப்போக்கில் எந்தவொரு பணியும் இன்பம் தர இயலும். சில பணிகள் ஒரு தலைமுறை கடந்தும் கூட இன்பம் தரலாம். இன்பம் தராமலும் போகலாம். ஆனால் இன்பம் தராது போனாலும் துன்பத்தின் தாக்கத்தைக் குறைத்திருக்கும் என்பதை அறிக"(9) என விளக்கவுரை தந்துள்ளார். இதுபோல அவரின் உரையில் பல அரிய உண்மைகளையும் படித்து இன்புறத்தக்க நயங்களையும் காண முடிகிறது.

"இன்னமும் திருக்குறளுக்கு உரையெழுதிக் கொண்டிருக்கின்றோம்; அல்லது விவாதங்கள் நடத்திக் கொண்டிருக்கின்றோம்! ஆனால் திருக்குறள் நெறியை வாழ்வியல் நெறியாக்கச் சமூகம் முயலவில்லை என வேதனைப்பட்டுள்ளார்.

மேலும், திருக்குறளை ஒரு சிறந்த இலக்கியம் என்றே பலர் கருதுகின்றனர். அஃது உண்மையேயானாலும் திருக்குறள் ஓர் இலக்கியம் மட்டுமன்று; திருக்குறள் பல்துறை தழுவிய ஒரு முழுநூல்; அறிவியல் சார்ந்த நூல், திருக்குறளை இதுவரையில் யாரும் அறிவியல் முறையில் அணுகவில்லை என அங்கலாய்த்துள்ளார்"(10) என்பர்.

அடிகளார் திருக்குறளுக்குத் தத்துவ விளக்கம், இலக்கணம் வழி விளக்கம், புராணக்கதை வாயிலாக விளக்கம், முன்னோர் வழியில் விளக்கம், அடிகளார் நோக்கில் ஊழ், வினாவும் விளக்கமும் என பல வழிகளில் விளக்கம் கூறுவதை அருள்நெறித் தந்தை அடிகளார் என்ற நூலில் பா.சுந்தர் விளக்கிக் கூறியுள்ளார்.

### *சமய இலக்கியப்பணி*

தேவாரம், திருவாசகம், பெரிய புராணம் முதலான சைவத் திருமுறைகளில் அடிகளார் பெரிதும் ஈடுபாடுடையவர். நாள்தோறும் இவை போன்ற நல்ல நூல்களை ஓதி வருபவர். சென்னைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், மதுரைக்காமராசர் பல்கலைக் கழகம் முதலான பல்கலைக் கழகங்களில் திருக்குறள் சமய தத்துவங்கள் குறித்துச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். திருக்குறளைப் போன்று சமய இலக்கியங்களையும் வாழ்க்கையுடன் பொருத்திப் பார்க்கிறார் அடிகளார்.

"எறும்பிடை நாங்கூழ் எனப்புலவனால்
அரிப்புண்டு அலந்த
வெறுத்தமி யேனை விடுதிகண்டாய்"(11)

மாணிக்கவாசகர் இப்பாடலில் தம்மை எறும்பிடை அகப்பட்ட புழுவிற்கு ஒப்பிட்டுள்ளார். அடிகளார் இவ்வுவமையை,

"நாங்கூழ் புழு எறும்புகளிடையே அகப்பட்டால் அரித்துத் தின்னப்பெறும்; பயன்படும் புழுவாயினும் அழிக்கப்பெறும். மனித உயிர் அன்பு, அறிவு என்ற எலும்புகளைப் பெறாவிடின் புலன்களால் அரிக்கப்பெறும். எறும்புகளின் அரிப்பிலிருந்து நாங்கூழ்ப் புழுவை விவசாயிகள் காப்பாற்றிப் பயன் அடைவது போல, இறைவன் உயிர்களைப் புலன்களின் அரிப்பிலிருந்து பாதுகாத்துப் பயன்கொள்ளுதல் வேண்டும் என்ற கருத்தை மாணிக்கவாசகர் வலியுறுத்துகிறார்"(12) என்பார்.

சைவ அடியார்களின் செயற்கரிய செயல்களைத் தொகுத்துக் கூறும் நூல் பெரியபுராணம். இப்பெரியபுராணத்தைப் பக்திக்காகவும், சொற்பொழிவு செய்தலுக்காகவும் மட்டும் படிப்பவர் எண்ணிக்கை மிகுதி. எதையும் சமுதாய நோக்கில் ஆராய்கின்ற அடிகளார் பெரியபுராணத்தைப் பக்திக் காப்பியமாக மட்டும் நோக்காமல், வாழ்வியல் காப்பியமாகவும் கருதி ஆராய்ந்துள்ளார். வாழ்க்கையின் குறிக்கோளுடன் பெரிய புராணத்தை ஒப்பிட்டுப் பேசுகின்றார். இதனை, "குறிக்கோள் நிறைந்த வாழ்க்கை என்பது இடர்களைப் பற்றிக் கவலைப்படாதது; அங்குப் பாசமும் இல்லை; பழியஞ்சுதலும் இல்லை; குறிக்கோளை நிறைவேற்றுதலே இலக்கு. குறிக்கோள் நெறியில் பயணம் செய்து

இனிதே முடித்த பெரியாரின் வரலாறே பெரியபுராணம்"[13] என்பது அடிகளாரின் கருத்தாகும்.

பெரியபுராணத்தை வெறும் இலக்கிய நூலாக ஏற்றுக் காணுதல் கூடாது; வெறும் பக்தி நூலாகக் கருதிப் படித்தல் கூடாது. சமுதாயச் சிக்கலை எண்ணியபடியே அதனை அணுகிப் படித்தல் வேண்டும் என்கின்றார் அடிகளார். பெரியபுராணச் செய்திகளைச் சங்க இலக்கியங்களுடன் ஒப்பிடுகின்றார். சங்க காலத்தில் நிலவிய விழுமிய வாழ்க்கையை நீண்ட இடைவெளிக்குப் பிறகு நிலைமாறிப் போகாமல் பாதுகாத்தவர்கள் பெரியபுராணத்தின்கண் இடம் பெற்றுள்ள அடியார்களே ஆவார்கள் என்பது அடிகளாரது கருத்து.

சமயச் சொற்பொழிவுகளில் புராணங்களில் வரும் அடியார்களின் திருப்பணிகளையும், திருத்தொண்டுகளையும் மனித வாழ்வோடு இயைபுபடுத்திக் கூறி கேட்பவர்களின் சிந்தனையில் பக்தி உணர்வும், தொண்டுணர்வும் தூண்டிடச் செய்வார்.

## அடிகளார் நோக்கில் பாரதியார் கவிதைகள்

மக்கள் கவிஞர்களாகத் தமிழில் மதிக்கப்படுவர்களுள் பாரதியார் முதலிடம் பெறுகின்றார். கவிதை வாயிலாக மக்களுக்கு விழிப்புணர்வை ஊட்டியவர். ஆங்கிலேயர்களிடம் நாடு அடிமைப்பட்டுக் கிடந்த காலத்தில் சமுதாயத்தில் காணப்படும் சீர்கேடுகளை இனங்கண்டு அவற்றிற்குத் தீர்வுகளைக் கண்டவர்.

பாரதியாரின் கவிதைகளில் ஈடுபாடு கொண்ட அடிகளார் அக்கவிதைகளில் நல்ல பயிற்சியும் பெற்றவர். சமய இலக்கியங்களை

விட்டு வெளியில் வாராத சமயத் துறவிகள் இடையே பாரதியார் கவிதைகளைச் சமுதாய நோக்கில் ஆராய்ந்து பரப்பி வந்தவர் அடிகளார். அவரது நூல்களில் திருக்குறள், சமய இலக்கியங்களுக்கு அடுத்த நிலையில் பாரதியார் பற்றிய சிந்தனையே மிகுதியாக இடம் பெற்றுள்ளது.

"இனியொரு விதி செய்வோம் - அதை
எந்த நாளும் காப்போம்
தனியொருவனுக் குணவிலை யெனில் இந்த
ஜகத்தினை அழித்திடுவோம்"(14)

என்னும் பாரதியாரது கவிதையில் குறிப்பிடப்பட்டுள்ள "தனியொருவன்" என்பது யாரைக் குறிக்கின்றது என்பதை அடிகளார் விளக்குகிறார். இதனை, "உரிமைகளைக் கேட்க வாயற்று, தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வழியும் உரிமையும் அற்று மூலையிலே ஒதுக்கப்பட்டுக் கிடக்கின்ற ஒருவனைப் பற்றித்தான் பாரதி பேசுகின்றார்"(15) என்னும் அடிகளாரது கூற்று தனிமனிதனின் சிந்தனையைத் தூண்டச் செய்யும் விளக்கமாகும்.

"பாரதியாரைத் தொலை நோக்குடைய கவிஞராக மட்டும் அடிகளார் காணவில்லை. பாரதியாரை யுக சந்திப்புக் கவிஞனாகவும், மனித உரிமைகளை மதித்துப் போற்றுகின்ற மாபெரும் கவிஞனாகவும் சமுதாய நோக்கில் அணுகிப் புதிய விளக்கங்களை அடிகளார் தருகின்றார். சமய இலக்கியங்களை எத்தகைய மனநிலையில் அடிகளார் போற்றினாரோ, அதே மனநிலையில் பாரதியார் கவிதைகளையும் போற்றினார். இலக்கியங்களில் வேறுபாடு காட்டாதவர் அடிகளார் என்பதை இதனின்றும் பெற முடிகின்றது"(16) என்பர்.

## அடிகளாரின் நெஞ்சம் கவர்ந்த பாரதிதாசன் பாடல்

புரட்சிக்கவிஞர் பாரதிதாசனின் கவிதைகளில் விருப்பம் கொண்டு கற்றுத் தெளிந்தவர் அடிகளார். பாவேந்தர் பாரதிதாசனின் கவிதைகளில் அடிகளாரின் நெஞ்சம் கவர்ந்த பாடல்,

"ஏறு விடாமல் ஏறு மென்மேல்! . . .
அறிவை விரிவுசெய் அகண்ட மாக்கு
விசாலப் பார்வையால் விழுங்கு மக்களை! . . .
உலகம் உண்ணஉண் உடுத்த உடுப்பாய்
புகல்வேன் உடமை மக்களுக்குப் பொது
புவியை நடத்து பொதுவில் நடத்து
வானைப் போல மக்களைத் தாவும்
வெள்ள அன்பால் இதனைக்
குள்ள மனிதர்க்கும் கூறடா தோழனே! . . ."(17)

என்ற பாடலின் ஒவ்வொரு அடியும் அடிகளாரின் மனம் கவர்ந்த அடிகளாகும்.

அடிகளாரின் பேச்செல்லாம் மூச்செல்லாம் தமிழே ஆகும். அவர்கள் தமிழைக் காதலித்து மணந்தவர் என்று அருள்நெறித் தந்தை அடிகளார் எனும் நூலில் குன்றக்குடி கதிரவன், "தமிழைக் காதலித்த காதையில்,"

"சந்தனத்தை முகத்தில் பூசி
சரீரத்தை இலக்கிய மாக்கி
உந்திதனை இலக்கண மாக்கி
உள்ளத்தைக் காவிய மாக்கி
தந்திரமாய் மந்தி ரத்தை
திருமந்திர மாக்கி நின்று

வந்திட்டாள்! பலபேர் தாங்கி

வணங்கிட்டாள்! அவளை நோக்கி"[18]

எனப் பாடியுள்ளார்.

## அடிகளாரின் இலக்கிய அருள் மொழிகள்

### இலக்கிய வாழ்விற்கு

இலக்கியப் பயிற்சி வளர வளர மனிதன் வளர்வான். மனித சமுதாயம் வளரும். இளைஞர்கள் இலக்கியம் பயின்றால் இலட்சிய வீரர்கள் ஆவார்கள். இலக்கியம் கற்போம்; இலட்சியத்துடன் வாழ்வோம்! என்கிறார்.

### உதவும் இலக்கியங்கள்

சங்க இலக்கியங்கள் வாழ்க்கையை நெறிப்படுத்தும் ஆற்றலுடையன. காப்பியங்கள் குடும்ப, சமூக அரசியல் வாழ்க்கைகளை வளர்க்கும் தகையன. திருமுறைகள் அன்பில் நனைப்பன. பாரதி, சுதந்திரத் தாகத்தைத் தருவான். பாரதிதாசன் புதியதோர் உலகம் செய்யத் தூண்டுவான். இங்ஙனம் இலக்கியங்கள் தனிமனித வளர்ச்சிக்கும், சமுதாய வளர்ச்சிக்கும் உதவி செய்வன.

### இலக்கியங்கள் கற்பதற்கே

இலக்கியங்கள் ஒரு குறிக்கோளை நோக்கி மனித சமுதாயத்தை உந்திச் செலுத்துவன. இலக்கியப் பயிற்சி ஓர் உயரிய குறிக்கோளை மனிதனுக்குத் தந்து ஆவேசப் படுத்தவில்லையென்றால் அவன் அந்த இலக்கியத்தைப் படித்தான்! அவ்வளவுதான்! அவன் அந்த

இலக்கியத்தைக் கற்கவில்லை; உணரவில்லை; அனுபவிக்கவில்லை என்று பொருள்படும்.

### இலக்கியம்

"இலக்கியங்களைப் படிப்பதைவிட, படிக்கத்தக்க இலக்கியங்களைத் தேர்ந்தெடுப்பது மிகவும் கவனம்" என்பார் ஏடு தேடு காதலன் ரஸ்கின். திருவள்ளுவரும் "கற்பவை கற்க" என்றார். இலக்கியங்கள் வாழ்ந்த - வாழ்ந்து கொண்டிருக்கிற சமுதாயத்தின் எண்ணத்தை, சிந்தனைப் போக்கை, விருப்பங்களை, ஆர்வங்களை, குறிக்கோளைக் காட்டுவன. இலக்கு + இயம் = இலக்கியம் என்பது நோக்கத்தக்கது.

### இலக்கியத் தூண்டுதல்

சமுதாயத்தின் வாழ்க்கையைக் காட்டும் கண்ணாடி போன்றது இலக்கியம். ஓர் இனத்தின், மனிதனின் வளத்தை வரிவடிவில் காட்டுவது இலக்கியம். அதே போழ்து சமுதாயத்தை நெடிய நோக்குடன் வளரத் தூண்டுவதும் இலக்கியங்கள்தாம்!

### பழகுதற்குரிய இலக்கியங்கள்

இலக்கியங்கள் நல்ல நட்புக்குச் சமமானவை. உள்ளத்தைப் பண்படுத்தக் கூடியவை. "இந்த உலகில் பயனுள்ளவாறு பேசிப் பழக, நல்ல மனிதர்கள் கிடைப்பது அரிது. அதனால், வளர்ந்த மனிதர்களை வரவழைத்து வீட்டில் வைத்துக்கொள்ள வேண்டும். கம்பன், வள்ளுவன், இளங்கோ, மில்டன், டென்னிசன், அப்பர் போன்றவர்களின் படைப்பிலக்கியங்களை வாங்கி வைத்துக்கொள்ள வேண்டும்; அந்த இலக்கியங்களைப் படிக்க வேண்டும். அந்த உத்தம இலக்கிய கர்த்தாக்களுடன் பழக வேண்டும்"(19) என்பார்.

## எழுத்துப்பணி

அடிகளாரின் உயிர்மூச்சாக எழுத்துப்பணி இருந்தது. தினமும் எழுத்திற்கென்றே சிலமணி நேரங்களை ஒதுக்கி வந்துள்ளார். அவரின் எழுத்துப் பணியால் தமிழ்மொழி ஏற்றம் பெற்றது. அடிகளாருடைய எழுத்துநடை தனித்த தன்மையுடையது. எளிய தொடர்கள், எதிரிலிருந்து பேசுவது போன்ற உணர்வைத் தோற்றுவிப்பது. கட்டுரைகள், நாடகங்கள், பத்திரிக்கைச் செய்திகள், சொற்பொழிவுகள், நூல்கள், பிற நூல்களுக்கு எழுதிய முன்னுரை, விளக்கவுரை, குறிப்புரை, அணிந்துரை, வானொலிப் பேச்சுக்கள், மேடைப் பேச்சுக் குறிப்புகள், பேட்டிக் குறிப்புகள், கவிதைகள் ஆகிய அனைத்துப் பகுதிகளும் அவரின் எழுத்துப்பணியின் அடையாளமாகும்.

'கலங்கரை விளக்கு', 'பாரதத்தாய்', 'புரட்சி பூத்தது', 'வள்ளல் பாரி', 'புதுவாழ்வு' ஆகிய நாடகங்கள் குன்றக்குடி அருள்நெறி கலைக்குழுவினரால் நடிக்கப் பெற்றுப் புகழ் பெற்றுள்ளன.

உரைநடை நூல்களைப் படைத்தது போலவே தமிழ் மரபுக் கவிதை புனைவதிலும் வல்லவர். பல கவியரங்கங்களுக்குத் தலைமையேற்று கவிநயம் அமைய கவியாலே கவியரங்கை அணி செய்துள்ளார். 'கவியரங்கில் அடிகளார்' என்னும் நூல் அவரின் கவிதை ஆற்றலுக்குச் சான்றாக விளங்குகிறது. உலகின் பெரும் பகுதியினைப் பலமுறை வலம் வந்தவராதலால் இவர்தம் எழுத்தும் பேச்சும் சமூக உணர்வுடன் சிறந்து விளங்கின.

தம் எண்ணத்தை எழுத்தோவியமாக ஆக்கித் தந்த மாமுனிவர் குன்றக்குடி அடிகளார். அவரின் 50 ஆண்டுகாலப் பொதுவாழ்வில்

50-க்கும் மேற்பட்ட நூல்களைப் படைத்துத் தமிழ் மொழிக்கு வளமை சேர்த்துள்ளார். அவர் எழுதிய நூல்கள் வருமாறு,

1. சொல் அமுதம்
2. முத்து மொழிகள்
3. அமுத மொழிகள்
4. ஈழத்துச் சொற்பொழிவுகள்
5. திருவள்ளுவர் காட்டும் அரசு
6. குறட்செல்வம் திறனாய்வு
7. அப்பர் வாழ்த்து
8. மண்ணும் விண்ணும்
9. வாழ்க்கை விளக்கு
10. திருவள்ளுவர் காட்டும் அரசியல்
11. புனித நெறி
12. வானொலியில் அடிகளார்
13. மனம் ஒரு மாளிகை
14. குறட்செல்வம்
15. சிந்தனைச் செல்வம்
16. பாரதியின் கனவுகள்
17. திருவருட் சிந்தனை
18. சைவசித்தாந்தமும் சமுதாய மேம்பாடும்

19. வாக்காளர்களுக்கு வள்ளுவர் அறிவுரைகள்

20. சமுதாய மறுமலர்ச்சி

21. தமிழமுது

22. சிந்தனைச் சோலை

23. Thirukural a world literature

24. சிந்தனைத் துளிகள்

25. வாழ்க்கை நலம்

26. சிலம்பு நெறி

27. சமுதாய மறுமலர்ச்சி இலக்கியங்கள்

28. எங்கே போகிறோம்

29. பொங்கல் பரிசு

30. அடிகளார் உவமை நயம்

31. அடிகளார் பொன்மொழிகள்

32. கவியரங்கில் அடிகளார்

33. பெரிய புராணச் சொற்பொழிவுகள்

34. சமய மறுமலர்ச்சி

35. அறவழிகாட்டி

36. திருவெம்பாவை, திருப்பள்ளி எழுச்சி விளக்கம்

37. குறள் நூறு

38. நாயன்மார்கள் அடிச்சுவட்டில்

39. நமது நிலையில் சமயம், சமுதாயம்

40. மொழிவழிச் சிந்தனைகள்

41. திருவள்ளுவர் சமுதாய மையங்கள்

42. கம்பன் கண்ட ஆட்சியில் அரசியல், சமூகம்

43. ஆலயங்கள் சமுதாய மையங்கள்

44. தமிழும் சமயமும் சமுதாயமும்

45. பாரதி யுகசக்தி

46. சமய இலக்கியங்கள்

47. கடவுளைப் போற்று

48. திருக்குறள் பேசுகிறது.

49. பாரதிதாசனின் உலகம்

50. சிந்தனை மலர்கள்

51. அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர்

52. மண்ணும் மனிதர்களும்

53. திருவாசகத் தேன்

54. கவிதை விளக்கம்

55. ஏழில் இருபது

ஆதீனத்தின் சார்பாக 'மணிமொழி' என்ற பத்திரிக்கையைத் தொடங்கி அடிகளார் அதில் எழுதிவந்தார். 1959-ஆம் ஆண்டு 'தமிழகம்' என்ற பத்திரிக்கை அடிகளாரைச் சிறப்பாசிரியராகக் கொண்டு மாதம் இருமுறை மதுரையிலிருந்து வெளிவந்தது. இவ்விதழ் சிலகாலம்

கழித்து மீண்டும் 1969-ஆம் ஆண்டு முதல் வெளிவந்தது. இவ்விதழில் அடிகளார் தொடர்ந்து எழுதிவந்தார்.

தமிழ்நாடு தெய்வீகப் பேரவையின் தலைவராக அடிகளார் பொறுப்பேற்றவுடன் 1972-ஆம் ஆண்டு முதல் 'அருளோசை' என்ற திங்களிதழ் பேரவையின் சார்பாக வெளிவந்தது. 'திருவருட் செல்வனுக்கு' என்ற தலைப்பில் தத்துவக் கட்டுரைகளை அடிகளார் அருளோசையில் எழுதிவந்தார்.

1980-ஆம் ஆண்டு முதல் 'மக்கள் சிந்தனை' என்ற பெயரில் திங்கள் இருமுறை இதழாகக் குன்றக்குடியிலிருந்து வெளிவரும் இதழின் சிறப்பாசிரியராக அடிகளார் விளங்கினார். அவர்களின் எழுத்துப்பணி 'மக்கள் சிந்தனையிலும்' தொடர்ந்தது. பல இதழ்களில் கட்டுரைகள் எழுதிவந்துள்ளார்.

'தமிழ் மகள்' என்ற இதழில் 'தேன் கிண்ணம்' என்ற தலைப்பில் பல உட்தலைப்புகளில் எழுதியுள்ளார். "சமயநெறி, அறியாமை, பயம், விதி - ஒரு தத்துவம், ஆனவம், ஆனவநீக்கம், நட்பின் அடித்தளங்கள் இழப்பு, உலகத்தோடு வரை, சிக்கல்கள் போன்ற தலைப்புகளில் எழுதியுள்ளார். 'உலகத்தோடு வரை ' என்ற தலைப்பில் "இன்றைய உலகத்தை அறிவியல் இயக்குகிறது. இயந்திர மூளை வந்துவிட்டது. இயந்திர மனிதன் உருவாகிவிட்டான். இத்துறையில் மற்ற நாட்டு மக்களைப் போல் தமிழ் மக்கள் வளரவேண்டும். அப்போது தான் உலகத்தோடு நமது நாடும் ஒருசேர வளரமுடியும்"[20] என்பர். அவரின் சிந்தனைப்படி இன்று இந்தியத் திருநாடு அறிவியல், தொழிற்நுட்பத்தில் உலகளவில் ஓங்கி நிற்பதை அறியமுடிகிறது.

மனித மேம்பாட்டு அறிவியல் அமைப்பின் வெளியீடான 'சிகரம்' என்ற இதழில், புதை மணலில் சிக்கிய யானை என்ற தலைப்பில், "தமிழ்நாடு வரலாற்றுப் பழமை உடைய நாடு. கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றிய மூத்த குடியினர் தமிழர். தமிழ் நாட்டின் தொன்மைக்குத் தமிழக வரலாறே சான்றாகும். உலக மொழிகளில் தமிழ் ஒரு சிறந்த செவ்வியல் மொழி, இலக்கிய வளமும், இலக்கண வரம்பும் பெற்று விளங்கும் பெரு மொழி. ஒரு மொழி இலக்கண வரம்பைப் பெற பல நூற்றாண்டுகள் பிடிக்கும். ஒரு மொழிக்கு இனிமையும், எளிமையும் எளிதில் வாரா. ஆயிரக்கணக்கான ஆண்டுகள் மக்கள் மத்தியில் பேசப்பட்டதன் காரணமாக ஒரு மொழி இனிமை பெறுகிறது. எளிமை பெறுகிறது. தமிழ் இனிமையும், எளிமையும் பெற்றுத் தலைசிறந்து விளங்குகிறது"(21) என்று குறிப்பிட்டுள்ளார்.

'அறிக அறிவியல்' என்ற இதழினைக் குன்றக்குடி சண்முகநாதர் அச்சகம் மூலம் மாதம் ஒரு முறை வெளியிட்டு அறிவியல் சிந்தனையை மக்களுக்கு எற்படுத்தியுள்ளார். அறிவியல் தமிழினையும் வளர்த்து வந்துள்ளார். 'அறிக அறிவியல்' பத்திரிக்கை, பல அறிவியல் அறிஞர்களின் அறிவியல் கட்டுரைகள், அன்றாட வாழ்வில் மக்களோடு அறிவியல் ஒன்றிவிட்ட ஒன்று என்பதை விளக்குவதாக உள்ள அறிவியல் துணுக்குச் செய்திகள், வளரும் மாணவ, இளைஞர்களின் உள்ளங்களில் தோன்றும் அறிவியல் கண்டுபிடிப்புகள், இந்தியா அறிவியலில் எத்தகைய முன்னேற்றப் பாதையில் நடைபோடுகிறது என்பவைத் தெள்ளுதமிழில் வெளியிட்டு வருகிறது. தமிழக மக்களிடையே அறிவியல் ஆர்வத்தைத் தூண்டுவதாக அமைந்து, தொடர்ந்து வெற்றி நடைபோடும் அறிவியல் இதழ்களில் ஒன்று 'அறிக அறிவியல்' என்பதாகும்.

**கல்விப்பணி**

மனிதனின் உள்ளத்துள் உறைந்து கிடக்கும் ஆற்றல்களை வெளிக் கொணரும் கருவியே கல்வி. 'கல்வி' என்ற சொல்லின் வேர்ச்சொல் 'கல்' என்பதாகும். 'கல்' என்றால் தோண்டுதல் அல்லது வெளிக்கொணர்தல் என்று கூறுவர். "கல்வி என்பது ஆன்மாவில் ஏற்றப்படும் ஒரு ஒளி! அணையாது ஒளிவிடும் ஒளி! கல்வி மனிதனின் பொறி, புலன்களுக்கு அர்த்தம் கற்பிப்பது. படைப்பாற்றலை வழங்குவது, அறிவியல் ஆளுமையை வழங்கி, மனிதனை முழுமைப்படுத்துவது. மானிடம் வெற்றிபெற துணையாய் அமைவது"(22) என்பர்.

**கற்றல் நன்று**

"கற்றல் நன்று" என்பதை நம் மூதாதையர் காலந்தோறும் வழியுறுத்தி வந்தனர். புறநானூற்றில்,

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே"(23)

என்று கூறப்படுகிறது. வள்ளுவரும்,

"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவருக்கு
மாடல்ல மற்றவை யவை"(24)

என்றார். ஔவையார்,

"ஓதுவது ஒழியேல்"

என்கிறார். நறுந்தொகையில்,

"கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே"(25)

என்று கூறப்பட்டுள்ளது. இவற்றின் வழி கல்வியின் இன்றியமையாமையை உணரலாம்.

### கற்றல் அவசியம்

மாறிவரும் இவ்வுலகோடு ஒத்து வாழும் (Social Assessment) திறனுடையவராக ஒருவரை ஆக்குவது கல்வியாகும். அதனால் வாழும் மனிதனுக்குக் கல்வி மிகமிக இன்றியமையாததாகும்.

“அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும் - உறும்கவல் ஒன்று
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊய் இல்லை
சிற்றுயிர்க்கு உற்றதுணை”[26]

என்றார் குமரகுருபரர்.

ஒருவன் தான் கற்பதைக் கடமையாகக் கொள்ளவேண்டும். உண்ணுதல், உடுத்துதல் போல் கற்கும் பழக்கத்தையும் வளர்க்க வேண்டும். மனக்குற்றங்களிலிருந்து விடுதலை பெற கற்றல் அவசியமாகும். கற்கும் போது நல்ல நூல்களைத் தேர்ந்தெடுத்து கற்க வேண்டும். கல்வி ஒரு நாட்டை, ஒரு தனிமனிதனை வாழவைப்பது, வளப்படுத்துவது. அதனால் கல்வியை இடைவிடாது மனிதன் கற்க வேண்டும்.

### ஆதீனககல்விப்பணி

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் மற்ற ஆதீனங்களிலிருந்து மாறுபட்டுச் சமுதாயத்திற்குத் தேவையான பணிகளைத் தேவைப்படும் காலங்களில் எல்லாம் இடையறவுபடாது ஆற்றிவரும் ஆதினம் ஆகும். ‘மக்கள் பணியே மகேசன் பணி’ என்று நினைத்து மக்களுக்கேற்ற சமுதாயப் பணியை ஆற்றியுள்ளது இவ்வாதீனம்.

ஆதீனம் ஆற்றியுள்ள சமுதாயப் பணிகளில் எண்ணி எண்ணிப் போற்றப்படவேண்டிய பணி கல்விப்பணி. கல்விப்பணியை ஆதீன அடியவர்களில் சிலர் சமயங்களைப் போதனை செய்யும் பணியாக ஆற்றி வந்துள்ளனர். சிலர் சிவாகமங்களை ஓதி வந்துள்ளனர். சிலர் சைவ சித்தாந்த நெறிகளைக் கற்பித்து வந்துள்ளனர்.

ஆதீன அடியவர்களில் 45-ஆவது மகாசந்நிதானம் காலத்திற்கேற்ற கல்விப்பணியை ஆற்றி, கல்வி வளரப் பல கல்வி நிறுவனங்களையும் நிறுவி மகத்தான கல்விப்பணி ஆற்றியுள்ளார்.

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் கல்விப்பணி

"வயிற்றுக்குச் சோறிட வேண்டும் - இங்கு
வாழு மனிதருக் கெல்லாம் பயிற்றிப் பலகல்வி தந்து -இந்தப்
பாரை உயர்த்திட வேண்டும்"

என்ற பாரதியின் கூற்றுப்படி அடிகளார் தமிழ்நாடு கல்வி பெற்றுயரக் கல்வி நிறுவனங்கள் பலவற்றை மடத்தின் சார்பாலும், அருள்நெறி மன்றத்தின் சார்பாலும் தொடங்கி நடத்தி வந்தார். தமிழ்ச் சமுதாயம் கல்வி அறிவு பெற்று, ஒரு குற்றமும் நிகழாச் சமுதாயமாக மலரவேண்டும் என்ற விருப்பம் உடையவர். அறியாமையை, வறுமையை அறவே அகற்றி, உரிய வளர்ச்சிப் பணிகளுக்கு முதலிடம் தருவோம்! என்று அழைப்புவிடுத்தார்.

## அருள்நெறி மன்றம்

"அருள்நெறித் திருப்பணி யென்ற
அழகான இயக்கம் கொண்டு

அருமனம் கொண்டே வாழ்ந்து
அன்னையாய் அருளி நின்று
மருத்துவ னாக நின்று
மலயமாய் வீற்றி ருந்து
உருவமாய்க் கொண்டே வாழ்ந்து
உளமுடன் பணியை ஏற்றார்”(27)

என்பர்.

அருள்நெறிப் பணியில் ஒன்று கல்விப் பணி என்பது அடிகளார் அவர்கள் திருவுள்ளம். மடமை நீங்கினால் கடமை இன்னதெனத் தெரியும். கடமை தெரிந்தால் துன்பம் தானே நீங்கும். எனவே, கல்விப் பணியை மேற்கொள்ள 1955-இல் ‘அருள்நெறித் திருப்பணி மன்றம்’ என்ற அமைப்பை நிறுவினார். இந்த மன்றத்தின் வழி ஆதீனக் கல்வி, அறக்கட்டளை நிறுவியுள்ளது. அதன் மூலம் சிவகங்கை, நெல்லை, தஞ்சை, நாகபட்டிணம், ஈரோடு ஆகிய மாவட்டங்களில் உள்ள பல ஊர்களில் பல கல்வி நிலையங்களைத் தோற்றுவித்து நடத்தி வந்தார்.

**அ. கல்வி நிறுவனங்கள்**

1. தெய்வசிகாமணி அருள்நெறித் தொடக்கப்பள்ளி - குன்றக்குடி.
2. தருமைக்கயிலைக் குருமணி மேனிலைப்பள்ளி - குன்றக்குடி
3. அறிஞர் அண்ணா சிறுவர் பள்ளி - குன்றக்குடி
4. திருவள்ளுவர் அருள்நெறி நடுநிலைப்பள்ளி - தேவகோட்டை
5. வள்ளல் பாரி உயர்நிலைப்பள்ளி - பிரான்மலை
6. திருவள்ளுவர் அருள்நெறி நடுநிலைப்பள்ளி - கொறுக்கை

7. சரஸ்வதி தொடக்கப்பள்ளி - மலையான்குத்தகை

8. அருள்நெறி உயர்நிலைப்பள்ளி - அம்மன்பேட்டை

9. அருள்நெறித் திருப்பணி மன்றம் உயர்நிலைப்பள்ளி - ஈரோடு

10. கோமதி அருள்நெறி மகளிர் உயர்நிலைப்பள்ளி - களக்காடு

11. திருப்பதி அருள்நெறி மேனிலைப்பள்ளி - கள்ளி மந்தயம்

12. பாலர் பள்ளி - களக்காடு

13. அம்பேத்கார் தொடக்கப்பள்ளி - நான்குநேரி

14. அருள்நெறி இந்து நடுநிலைப்பள்ளி - திருமலையப்பபுரம்

15. திருவள்ளுவர் கல்லூரி - பொதிகையடி பாபநாசம்

16. அருள்நெறி நடுநிலைப்பள்ளி - விசய அச்சம்பாடு.

***ஆ. திருவாதவூர் திரு.வி.க. புண்ணிய விடுதி (சிறுவர், சிறுமியர் விடுதி-குன்றக்குடி)***

தவத்திரு அடிகளார் அவர்கள் பல கல்வி நிறுவனங்களை நிறுவித் கல்விப்பணி ஆற்றியுள்ளதை அறிய முடிகிறது. "அறிவுப் பணியே அறப்பணி" என்று அறிவுக் கோயிலான பள்ளிகளைத் திறந்து "எண்ணும் எழுத்தும்" அறிய வைத்து, அறியாமையாகிய இருளைப் போக்கியவர் அடிகளார்.

***அரங்கப்பணி***

மக்கள் கூடி இருந்து கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும்

இடமே "அரங்கம்" ஆகும். "அரங்கம்" என்ற சொல்லிற்கு "மேடை" என்றும் கூறுவர். அரங்கத்தை கலையரங்கம், கவியரங்கம், பயிலரங்கம், பேச்சரங்கம், விவாத அரங்கம், ஆய்வரங்கம், மொழி அரங்கம், விஞ்ஞான அரங்கம் என பல வகைப்படுத்திக் கூறலாம். கேட்டாரும், கேளாதாரும் வேட்பமொழிதல் என்பது எல்லாருக்கும் இயலாது. தன் பேச்சால் கூடி இருப்பவரைக் கட்டிப் போடுவது என்பது மிகச் சிறந்த ஆற்றல்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக - அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று"(28)

என்ற குறளுக்கு இலக்கணமாக வாழ்ந்து, அழியா புகழுடம்பு எய்திய மகான்கள் பலராவர். அவர்களில் அரங்கத்திற்கு அணி சேர்த்து தன்னை அரங்கத்தால் உலகிற்கு அடையாளம் காண வைத்த மேடையின் பன்முக வித்தகர் அடிகளார் அவர்கள்.

## அடிகளாரின் அரங்கப்பணி

அரங்கப்பணியை ஆதீன அடியவர்களில் சிலர் சிவஆகமக் கருத்துக்களைப் பரப்பும் நோக்கத்துடன் செய்து வந்துள்ளனர். பல இடங்களுக்குச் சென்று குருசீடர் அடிப்படையில் ஆதீனக் குருமார்கள் சமயச் சொற்பொழிவுகளைக் காலத்துக்கு ஏற்றார் போல் நிகழ்த்தி வந்துள்ளார்கள். இவர்களில் 45-ஆவது மகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் ஆற்றிய அரங்கப்பணி தமிழன்னைக்கு இன்னும் ஒரு அணிகலனாயிற்று.

## மேடைத் தமிழ் உறவின் புதிய பரிணாமம்

மேடைத் தமிழை, அடிகளார் கவிதை, சொற்பொழிவு, வழக்காடு மன்றம், பட்டி மன்றம், விவாத மேடை எனப் பல பரிணாமங்களில்

வளர்த்தார். “மேடை என்பது தன் புலமையைக் காட்டி பொதுமக்களை மிரட்டும் வித்துவ விளையாட்டுக்களம் அல்ல; அது, கடைக் கோடி மனிதனுக்கும் கல்விக் கண் திறக்கும் புதிய பள்ளி. மேடை என்பது எவரினும் நான் பெரியவன் என்று முடிவு கட்ட முளைத்த அரங்கம் அல்ல; அது, எல்லாருமாகக் கூடி இந்த நாட்டிற்கும், மொழிக்கும் சமயத்திற்கும் நலம் பயக்கத் தேர் இழுக்கும் திருவிழாக் காட்சி. மேடை என்பது பேசக் கூடியவர்கள் ஏசிக் களிக்கும் இடமல்ல; அது பேசிக் களித்தவர்கள், பிரியக் கலங்கும் பிணைப்பின் நேசம் என்று இந்த மண்ணிற்குக் காட்டிய பெருந்தகை அடிகளார் அவர்கள். மேடைத் தமிழ் உறவுகளில் ஒரு புதிய பரிணாமம்”(29) ஆவார்.

மேடைப் பேச்சுக்குப் புதுப் பொலிவும் மெருகும், புது இலக்கணமும் கண்டவர். மேடைப் பேச்சாலே தமிழக மக்களின் நெஞ்சங்களைக் கவர்ந்த செயல் வீரர். தமிழகத்தின் தலைசிறந்த சொற்பொழிவாளர்களில் ஒருவர். சிறந்த நாவன்மை படைத்த நாவலர். இவரது சொற்பொழிவு தனித்தன்மை உடையது.

தமிழகத்தில் அடிகளார் அவர்கள் தலைமை தாங்காத அவைகள் இல்லை; அரசியல் மேடைகளும் இல்லை; இவரது சொற்பொழிவு நிகழாத பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள், மேனிலைப் பள்ளிகள் இல்லை, உயர்நிலைப் பள்ளிகள் இல்லை எனலாம்; மாநகரங்கள், நகரங்கள், சிற்றூர்கள்; வானொலி நிலையங்கள்; தொலைக்காட்சி நிலையங்கள் என அனைத்திலும் சொற்பொழிவாற்றியவர்.

தமிழகத்தில் இவரது செந்தமிழ் முழக்கம் கேளாத செவிகளில்லை; இரவும் பகலும் பயணம் செய்து தமிழ்ச் சமய நெறியையும், செந்தமிழ்த் திறத்தையும், மனித நேயத்தின் மாண்பையும் பரப்பியவர்.

தமிழகம் தவிர இந்தியப் பெருநகரங்களான மும்பை, தில்லி, கொல்கத்தா போன்ற இடங்களிலும் சொற்பெருக்காற்றியுள்ளார். தென் மாநிலங்களான கருநாடகம், ஆந்திரப் பிரதேசம், கேரளம் போன்ற மாநிலங்களில் பலமுறை சுற்றுப்பயணம் செய்து சொற்பொழிவு ஆற்றியுள்ளார்.

கீழ்த்திசை நாடுகளான மலேசியா, சயாம், இந்தோனேசியா முதலிய நாடுகளுக்குச் சென்று சிவநெறிச் செல்வத்தை வாரி, வாரி வழங்கினார். 28.12.1954 முதல் 27.3.1955 முடிய அந்த நாடுகளில் சுற்றுப்பயணம் செய்து, அங்குள்ள தமிழர்களுக்கு அருள்நெறி அமுதம் வழங்கினார்கள். பின்னர் பலமுறை மேற்கத்திய நாடுகளுக்குச் சென்று வந்தவர்.

1971-இல் சோவியத் நாட்டுக்குச் சென்று 22 நாள் சுற்றுப்பயணம் செய்து, தமிழ்ப் பண்பாட்டு நெறியைப் பரப்பியும் சோவியத் மக்களின் வாழ்நிலையைக் கண்டறிந்தும் வந்தவர். 1982-இல் மலேசியா, சிங்கப்பூர் நாடுகளுக்குச் சென்று சுற்றுப்பயணம் செய்து, அங்கிருந்தவாறே கொரியா, ஹாங்காங், ஜப்பான், செஞ்சீனா முதலிய நாடுகளுக்கும் சென்று சுற்றுப்பயணம் செய்து, சொற்பொழிவுகளாற்றியும் அந்த நாடுகளின் தொழில், கலை, பண்பாடு, அரசியல், மக்களின் வாழ்க்கை நிலைகளையும் கண்டறிந்து திரும்பினார்.

அடிகளார் ஆற்றிய சொற்பொழிவுகள் நூல்களாக வெளிவந்துள்ளன. ‘ஆலயங்கள் சமுதாய மையங்கள்’ என்பது அடிகளாரின் சொற்பொழிவுத் தொகுப்பு. வானதி பதிப்பக வெளியீடு (1987). இது தமிழக அரசால் 15.01.1989-இல் முதல் பரிசு பெற்ற நூல். ‘சைவசித்தாந்தமும் சமுதாய மேம்பாடும்’ என்பது அடிகளார் அவர்கள் மதுரை காமராசர்

பல்கலைக்கழகத்தில் ஆற்றிய அறக்கட்டளைச் சொற்பொழிவு. இது கலைவாணிப் புத்தகாலய வெளியீடு (1990).

கடவுளைப் போற்று! மனிதனை நினை! என்பது அடிகளாரின் பேச்சு. எழுத்துத் தொகுப்பு. கடவுளை மற! மனிதனை நினை! என்று பெரியார் பிரச்சாரம் செய்தார். அதற்கு மாற்றாக அடிகளார் கடவுளைப் போற்று! மனிதனை நினை! என்று இந்நூலை எழுதினார். இந்நூல் அருணோதயம் வெளியீடு(1991).

"சமயத் தலைவர்களில் சமுதாய சிந்தனையாளர் மிகவும் குறைவு. அவர்களில் தலையாயவர் முதல்வர் அடிகளார். நம் காலத்துச் சமயத் தலைவர்களில் அடிகளாரின் சமுதாயச் சிந்தனைகள் தனித்தன்மையுடையன. நான் இந்து அல்ல என்று பத்திரிக்கைக்கும் பேட்டியளித்தவர் அடிகளார். 'இந்து இளைஞர் மன்றம்' கண்டவரும் அடிகளார்.

பெரியாரைப் புரிந்து கொள்ளுவது எப்படிக் கடினமானதோ, அப்படித்தான் அடிகளாரைப் புரிந்து கொள்வதும் கடினமானது. ஆத்திக உலகின் நோக்கில் அடிகளார் மதவாதி. நாத்திக உலகின் நோக்கில் அடிகளார் மிதவாதி. அடிகளாரின் இரண்டு பக்கமும் இடி இருந்தது. இருப்பினும் அடிகளார் வென்றார்"[31] என்பர்.

மதநல்லிணக்கத்தைத் தம் பேச்சால் மக்களிடம் ஏற்படுத்தி எல்லா மக்களின் உறவுகளுக்குப் பாலமாக விளங்கியவர் என்பதை,

"சமயங்கள் வளரவேண்டி நாளும் நாளும்

சன்மார்க்க வேதநெறி யோடு நின்று

இமயமென வளர்ந்திருக்கும் இதயத் தோடு

இனியதொரு பிறமதங்கள் கூட்டம் கண்டு

அமயங்கள் செழித்தோங்க வேண்டி வந்து

அன்புசார்ந்த இசுலாமிய கூட்டம் கண்டு

குமுதமெனக் கிறித்தவரின் நெறியைப் போற்றி

கலந்து கொண்டு சொற்பொழிவை ஆற்றிச் செல்வார்!"(31)

என்ற பாடலால் அறியமுடிகிறது.

## அடிகளார் மேடைப் பேச்சின் தனித்தன்மை

வறட்சி மிக்க பஞ்சக் காலத்தில் வானம் திறந்து கொட்டிய மழையாய் தமிழ் மேடைகளுக்கு வந்து சேர்ந்த ஞானக்கதிர்தான் குன்றக்குடி அடிகளார். அவர்களின் மேடைப் பேச்சு வருகைக்கு ஒரு தேவை இருந்தது. ஒரு எதிர்பார்ப்பு இருந்தது. அவர்கள் உதட்டிலிருந்து பிறந்த வார்த்தைகள் கேட்போரைக் கட்டிப்போடும் கயிறுகளாயின.

தமிழ்ச் சமுதாயத்தின் உயர்விற்குச் சமய குரவர்கள் ஆற்றிய தொண்டையும், தமிழ்ச் சமயத்தின் மேன்மையையும், இனியும் சமயம் செய்ய வேண்டிய செயல்களின் அவசியத்தையும் எடுத்துரைத்தவர். இலக்கியச் சான்றுகளுடன் பேசும் ஒரு மிகச் சிறந்த பேச்சாளரான திரு.வி.க.வின் முன்மாதிரியைப் பற்றிக் கொண்டு அவர் பேசிய திறங்கண்டு நலமற்ற நாத்திகப் புயலில் நடுங்கிக் கொண்டிருந்த மக்கள் நெஞ்சை நிமிர்த்தி நிம்மதி பெறவைத்தவர்.

தமிழ் மக்களிடையே களையாக வளர்ந்து நிற்கும் வேற்றுமைகளைக் களையப் பயன்படும் ஒரு நவீன உழவாரக் கருவியாக மேடைத் தமிழைப் பயன்படுத்தினார். பெரியாரைச் சந்தித்தாலும், அறிஞர் அண்ணாவுடன் நெருக்கமாகப் பேசினாலும், தோழர் ஜீவாவுடன் ஏழ்மைப் போக்கும் பேச்சில் இறங்கினாலும், கலைஞர் கருணாநிதியுடன் புலமைப் பொங்கப் பேசினாலும், தன்னை இழந்து போகமலும், அவர்கள் விழுந்துவிடாமலும் ஓர் இணைப்புப் பாலத்தை உருவாக்கும் தரம் மிக்கப் பேச்சாக அடிகளாரின் பேச்சு அமைந்தது.

தமிழ் நாளிதழ்கள் அடிகளாரின் தனிப் பொலிவைக் கால்பக்கம் அரைப்பக்கம் என்று சிறப்பிடம் கொடுத்து வெளியிட்டுள்ளன. அவரின் பேச்சினை இளைய சமுதாயம் மிகுந்த ஆர்வத்துடன் வந்து, கேட்டு, செவிக்கின்பம் பெற்றுச் செல்வர். கல்லூரி விழாக்களிலும், கருத்தரங்குகளிலும் பேச்சுத்தனித்துவம் பெற்றிருக்கும். "ஞானியார் அடிகள் போன்று நாவன்மை படைத்து, தம் புலமையாலும், பேச்சு வன்மையாலும் தமிழகத்திலும் வெளிநாடுகளிலும் இவர் தூய தமிழைப் பலநூறு மேடைகளில் பரப்பியுள்ளார். இவருடைய சொற்பொழிவுகள் சில நூலாக வெளிவந்துள்ளன"[32] என்பர்.

## அடிகளார் ஆற்றிய அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

1. நமது நிலையில் சமயம், சமுதாயம்

சென்னைப் பல்கலைக்கழகத்தில் 1975-இல் ஆற்றிய சொர்ணாம்பாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு.

2. திருவள்ளுவர் (திருவள்ளுவர் - வாழ்வியல் - சமயவியல் - அரசியல்)

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1979-இல் ஆற்றிய சொர்ணாம்பாள் நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவு.

3. சைவசித்தாந்தமும் சமுதாய மேம்பாடும்

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் ஆற்றிய ஏ.பி.சி. வீரபாகு அறக்கட்டளைச் சொற்பொழிவு.

இம்மூன்றும் நூல்களாக வெளிவந்துள்ளன. முதல் இரண்டும் பல்கலைக்கழக வெளியீடுகள். மூன்றாவது கலைவாணிப் புத்தகாலய வெளியீடு. இவை அறிவுலகத்திற்கு அடிகளார் அளிக்கும் விருந்து. இன்று காணப்பெறும் சமய, சமுதாயச் சீர்கேடுகளுக்கு மருந்தாகும். சமயம், சமுதாயம், அரசியல் ஆகிய மூன்றிலும் பணியாற்றுவோர் இவற்றைப் படிப்பதும் அடிகளாரின் நூல்கள் அனைத்தையுமே படிப்பதும் சாலச்சிறந்தது.

அடிகளார் அவர்கள் 1951-இல் காரைக்குடிக் கம்பன் விழாவில் 'புதரிடை மலர்' என்ற தலைப்பில் ஆற்றிய சொற்பொழிவு அறிஞர் பெருமக்களின் நெஞ்சங்களைக் கவர்ந்த அரிய சொற்பொழிவாகத் திகழ்ந்துள்ளது.

**பட்டிமன்றம்**

'பட்டிமன்ற நாயகன்' என்ற சிறப்பினைப் பெற்றவர் அடிகளார். அரங்கில் நடந்த 'பட்டிமண்டபத்தைப்' 'பட்டிமன்றமாக' வீதிக்குக் கொண்டு வந்தார். வீதி மனிதர்களும் தமிழ்ப் புலவர்களைச் சந்திக்கும், தமிழ் இலக்கியம் பற்றிச் சிந்திக்கும் வாய்ப்பை வழங்கியவர் அடிகளார் ஆவர். 'பட்டிமண்டபத்தின் தந்தை' என்று கம்பன் அடிப்பொடி

சா.கணேசன் அவர்களைச் சொன்னால் ‘பட்டிமன்ற ஆசான்’ என்று அடிகளார் அவர்களைச் சொல்லுவார்கள்.

பட்டிமன்றங்களில் ஆரம்பத்தில் திருக்குறள், சிலம்பு, தேவாரம், பெரியபுராணம், கம்பன், வில்லி, பாரதி, பாரதிதாசன் என்று இலக்கியங்களையும், இலக்கியப் படைப்பாளிகளையும் வைத்துப் பட்டிமன்றம் நடத்திய அடிகளார் காலம் செல்லச் செல்லச் சமுதாயச் சிந்தனைகளை மையமாக வைத்துப் பட்டிமன்றம் நடத்தினார். அடிகளாரின் பட்டிமன்ற உரையைக் கேட்டு வீதி மனிதர்களும், அறிஞர், புலவர், பெருமக்களும் இவர் வெறும் முனிவர் அல்லர்; “சமுதாய மாமுனிவர்” என விருது வழங்கிப் பெருமைப்பட்டார்கள்.

அடிகளார் பட்டிமன்றங்களில் சில மரபுகளைப் பின்பற்றி வந்துள்ளார். நேரத்தில் கவனம், பேச்சாளர்களைப் பாராட்டல், யார் மனதையும் காயப்படுத்தாத கண்ணியம், பேச்சாளர்களின் நலம் பேணல், ஆண்டுதோறும் தவறாது கலந்து கொள்ளும் நிகழ்ச்சி, போகமுடியாத நிகழ்ச்சிகளுக்குத் தகுதியானவர்களை அனுப்புதல், பேச்சாளர்களுக்கு விருது வழங்கல், பார்வையாளராக இருந்து தமிழ் இன்பம் பெறுதல், நடுவராக இருந்து நயமான, நல்ல தீர்ப்பினை வழங்கல் போன்ற மரபுகளைப் பின்பற்றினார்.

பட்டிமன்றம், வழக்காடு மன்றங்களைத் தமிழகமெங்கும் வளர்த்த பெருமை அடிகளாரைச் சாரும். நடுவர் பொறுப்பேற்று அனைவரும் போற்றும் வண்ணம் தலைப்பின் ஆழத்தை அனைவரும் அறியுமாறு தீர்ப்பு வழங்குவார். ஆயிரத்திற்கும் மேலான பட்டி மன்றம், வழக்காடு மன்றங்களில் பங்கேற்ற பெருமை பெற்றவர்.

பட்டிமன்றங்களில் அடிகளார் பின்பற்றும் முறை அவருக்கே இயல்பாக அமைந்த ஒன்றாகும். பட்டிமன்ற மேடைகளில் முதலில் தலைப்பை அறிமுகம் செய்து உரை நிகழ்த்துவார். பின், வாதிடவுள்ள அணிகளில் அணித்தலைவர் ஒருவரை வாதிட அழைப்பார். அணித்தலைவர் தமது வாதத்தை முடித்தவுடன், எதிர் அணியினருக்கு விடுத்த வினாக்களை அடிகளார் நிரல்படுத்துவார். அவ்வினாக்களுக்கு விடையளிக்குமாறும் தமது அணியின் வாதத்தை வழங்குமாறும் எதிர் அணித்தலைவரை அழைப்பார்.

எதிரணித் தலைவர் மற்றொரு அணியினருக்கு விடுத்த ஐயங்களையும், வினாக்களையும், விளக்கங்களையும் முறையே நிரல்படுத்திக் கூறுவார். இவைகளுக்கெல்லாம் அடுத்து வாதம் நிகழ்த்த வருவோர் விடையளிக்க வேண்டும் என்பார். வாதிடும் ஒவ்வொருவருக்கும் இம்முறையை அடிகளார் பின்பற்றி வருவார். இவ்வாறு பட்டிமன்றம் நாகரிகம் காத்து, தமிழை வளர்த்தார்.

## பாராட்டுக்களும் பட்டமளிப்புக்களும்

'பாராட்டுதல்' என்பது மனிதர்களின் நற்பண்புகளில் முக்கியமான ஒன்றாகும். பிறரைப் பாராட்டுவதற்கு நல்ல மனம் பெற்றிருக்க வேண்டும். மனிதர்களின் வளர்ச்சிக்குப் பாராட்டுதல் என்பது அவசியமாகும். உள்ளத்தில் ஊக்கத்தைத் தந்து மனதை உற்சாகப்படுத்துவது பாராட்டே ஆகும்.

'பாராட்டு' என்பது காலங் காலமாக இருந்து வரும் பண்பாடு ஆகும். ஒரு காலத்தில் பாராட்டு மன்னர் செயலாக இருந்தது. மன்னர்கள் பட்டங்களைத் தகுதி அறிந்து அளித்துள்ளனர். வணிகர்களுக்கு 'எட்டி'

என்ற பட்டமும், சிறந்த நடன மங்கைக்கு ‘தலைக்கோல்’ அல்லது ‘தலைக்கோலரிவை’ என்ற பட்டமும் வழங்கப்பட்டது.

மன்னர்கள் வழங்கி வந்த பட்டங்களைப் பின் மடங்கள் (ஆதீனங்கள்) வழங்கி வந்தன. தர்மபுரம், திருவாவடுதுறை போன்ற திருமடங்கள் தங்கள் மடத்தில் நடத்தியக் குருபூசை விழாவில் சிறப்பானவர்களுக்குப் பட்டங்கள் வழங்கியுள்ளன.

இம்மரபைத் தழுவிக் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனமும் பாராட்டும், பட்டமும் வழங்கிவருகின்றது. பிற மடங்களில் பாராட்டுதலும், பட்டமளித்தலும் சமயம் தொடர்பான விழாவாகவே அமைந்தன. குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தில் பாராட்டுதலும், பட்டமளித்தலும் சமுதாய நிகழ்ச்சிகளாகவும், மடத்து விழாவாகவும், பல்கலைக்கழகங்களின் விழாவாகவும், அரசு விழாவாகவும் மாற்றம் பெற்று வளர்ச்சி பெற்றுள்ளன.

ஆதீனத்தில் பாராட்டுப் பெற்றவர்களில் முதலாவதாகக் கூறப்படுபவர் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் ஆவர். நாவலர் குன்றக்குடி மடத்திற்கு வந்து சிறந்த சொற்பொழிவு நிகழ்த்தினார். 38-ஆம் பட்டம் பெரிய ஆறுமுகதேசிகர் அவர்கள் நாவலரைப் பாராட்டி, எந்த ஆதீனமும் செய்யாத வகையில் புதிதாகச் சிவிகை (பல்லக்கு) செய்வித்து அதில் அவர்களை அமரச் செய்து ஊர்வலச் சிறப்பும் செய்தருளினார்.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களைச் சில நாள்கள் குன்றக்குடியில் தங்கவைத்து அவர்களுக்குத் தக்க சன்மானம் வழங்கி, பல்லக்கு வைத்துக் காரைக்குடி வரை அனுப்பி வைத்தார்.

தமிழ்த் தாத்தா உ.வே.சா அவர்களை 39-ஆம் பட்டம் ஆறுமுகதேசிகர் அவர்கள் வரவேற்றுப் பாராட்டிச் சிலப்பதிகாரத்தின் ஏட்டுப் பிரதியை உதவி அருளினார். மேலும் பல இலக்கிய ஏடுகள் கிடைக்கவும் உதவினர்.

ஆதீன அடியவர்களில் ஒருவராகிய சங்கரலிங்க முனிவர் மருது பாண்டியரின் பிளவை நோயைக் குணப்படுத்திய காடன் செட்டியாரைப் போற்றி அவர் பெயரால் அன்னச்சத்திரம் ஏற்படுத்தினார். குன்றக்குடித் தோகையடி விநாயகர் சந்நிதியில் உள்ள தூணில் காடன் செட்டியார் திருவுருவத்தை அமைத்து நன்றி செலுத்தினார்.

அறிஞர் பெருமக்களைப் பாராட்டிப் பட்டம் அளித்ததில் முதன்மையானவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார். பாராட்டுக்களும், பட்டமளிப்புக்களும் ஆதீனத்திற்கும் மன்பதைப் பகுதிக்கும் ஒரு நெருக்கமான உறவை ஏற்படுத்தும் என்ற எண்ணம் கொண்டவர். சமயத் துறையிலும் அரசுத் துறையிலும் தனக்கென ஒரு பெருஞ் செல்வாக்கை ஏற்படுத்திக் கொண்டவர். ஒரு நாள் நிகழ்ச்சியில் பலரைப் பாராட்டுகிற மரபைத் தவத்திரு குன்றக்குடி அடிகளாரே கொண்டு வந்தார்.

ஒருவர் உயர அவரை ஊக்கப்படுத்துவதே பாராட்டுத்தான் என்பதை உணர்ந்து செயல்படுத்தியவர். பள்ளிச் சிறார்கள் முதல் யாவரிடத்தும் மலர்ந்த முகத்துடன் இனிது உரையாடி மகிழ்ந்து, பாராட்டி, புதிய தலைமுறையினர் வாழ்வாங்கு வாழ்ந்து உயர்தல் வேண்டும் என்பதில் மிகுந்த விருப்பம் உடையவர். குன்றக்குடித் தலத்தை ஒரு முன்மாதிரிக் கிராமமாக 'குன்றாக்குடி' யாகத் திகழச் செய்தமை அவர்களது செயல்திறனின் சீர்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

ஆண்டுதோறும் திருவருள் பேரவையைக் கூட்டி திருமுறைகளை நன்கு அறிந்த புலவர் பெரும் மக்களைக் கொண்டு திருமுறைகளில் கருத்துடைய, ஆழமான, எளிதிற் புரிந்து கொள்ள இயலாத இடங்களை ஆராய்ந்து அதற்கானச் செய்யுள்களை அரங்கேற்றி, புலவர்களுக்குப் பரிசளித்தும், பாராட்டியும் சமயநெறி ஓங்கச் செய்தவர். திருமுறை முற்றோதல் நிகழ்ச்சிகள் நடத்தி திருமுறைவாணரை அன்றி நன்கு கற்ற தமிழறிஞர்களையும் கூட்டிச் சிறப்புச் செய்வார்.

திருமுறை விழாவின்போது கருத்தரங்கம், உரையரங்கம், கவியரங்கம், பட்டிமன்றம், இசை, நாடக நிகழ்ச்சிகள் நடத்தித் தமிழை ஆய்ந்து, தமிழறிஞர்களுக்குச் சிறப்புச் செய்ததோடு; திருமுறைச் சாத்திரங்களில் புலமை மிகுந்த அறிஞர் பெருமக்கள், சமயத் திருத்தொண்டர்கள், கலைஞர்கள், கவிஞர்கள் ஆகியோருக்குப் பாராட்டும், பட்டங்களும் வழங்கி மகிழ்ந்தார்.

பாராட்டுக்களில் நிதி கொடுத்தார். திருநாவுக்கரசர் தேவாரத்தில் ‘தருமிக்கு’ பொற்கிழி கொடுத்ததை வைத்து இவரும் ‘பொற்கிழி’ வழங்கினார். ‘பொற்கிழி’ கவிதைப் போட்டி நடத்தி ரூ.1001/-,வெண் பொற் காசுகளும் வழங்கினர்.

“நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி

நற்கனகக்கிழி தருமிக்கு அருளினோன் காண்”

என்று திருநாவுக்கரசர் திருப்புத்தூர்த் தேவாரத்தில் பாடுகிறார்.

“சங்கத் தமிழின் தலைமைப் புலவா

தாலோ தாலேலோ”

என்று பிள்ளைத்தமிழ் பாடுகிறார் குமரகுருபரர். திருப்புத்தூர்க் கோவில் அடிகளாரின் ஆட்சியிலுள்ள திருத்தலம். அறுபத்து மூன்று நாயன்மார்களை நினைவூட்டி, போற்றும் வகையில் 18.9.1967-இல் 'திருப்புத்தூர்த் தமிழ்ச்சங்கம்' தொடங்கி அதில் சமயசீலம் வாய்ந்த பெரும் புலவர்கள் அறுபத்து மூவரை உறுப்பினராக்கினார். தொகை அடியார்களைப் போற்றி நினைவூட்டும் வகையில் சமயசீலம் வாய்ந்த மேலும் பல புலவர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டு இயங்கி வருவது இத்தமிழ்ச்சங்கம். குன்றக்குடி விசாக விழாவிலும், வள்ளல் பாரி விழாவிலும், திருமுறை விழாவிலும், திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்க விழாவிலும் பல அறிஞர் பெருமக்களுக்குப் பட்டம் வழங்கிப் பாராட்டு அளித்தனர்.

## பாராட்டுக்குரியோர் தகுதிகள்

சிறந்த நூல் புலமையும், கவிதைகள் இயற்றும் திறனும், இசை அறிவும், திருப்பணிக் கலையும், சமய அறிவும், வள்ளல் தன்மையும், மொழிப் பற்றும், மொழிப் புலமையும், எழுத்தாற்றலும், தொண்டுள்ளமும், நடிப்புத் திறனும், சிற்பக்கலையும், தத்துவ ஞானமும் இன்னும் பிறவும் பாராட்டுக்குரிய தகுதிகளாகக் கருதினார்.

## பட்டங்கள்

முதுபெரும் புலவர், கவியரசர், கவிஞர்கோ, அருங்கலைக்கோன், ஏழிசைச் செல்வர், புலவரேறு, நடிகர்கோ, இசைவேள், செந்தமிழ் ஞாயிறு, நற்கதை நம்பி, நூலறி புலவர், சிறுகதை மன்னர், எழுத்து வேந்தன், செந்தமிழ் விறலி, தலைக்கோலாசானிர், தலைக்கோலரிவை, செந்தமிழ்க் காவலர், தமிழ்வேள், செந்தமிழ்த் திலகம், வள்ளல், பெரும் புலவர், எழுத்து

வேந்தன், ஞானத் தமிழாகரர், தமிழாளியர், ஏழிசைத் தலைமகன், திருத்தொண்டர், பண்ணிசையரசு, திருமுறைச் செல்வர், சிற்பக் கலையரசர், சிற்பக்கலை வாரிதி, மெய்கண்ட செல்வம், சிவநெறிப் புரவலர், அறமனச் செம்மல், பதிப்புக்கலை அரசு, ஆதீனப் புலவர், ஆதீன வித்துவான், சைவசித்தாந்த வித்தகர், சைவமணி, திருப்பணிச் செல்வர், அறநெறி அண்ணல், ஏழிசை இளவரசு, உழவாரத் தொண்டர், கலைச் செல்வர், மக்கள் கவிஞர், சிவநெறிச் செம்மல், சித்தாந்தச் செம்மல் போன்ற பட்டங்கள் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தால் வழங்கப் பெற்றுள்ளன.

## பட்டம் பெறுவதற்கான தகுதிகள்

சைவ சித்தாந்தம், சைவ ஒழுக்கம் ஆகியவற்றில் மேம்பட்டவர்களுக்கு 'சைவ சித்தாந்த வித்தகர்' 'சித்தாந்தச் செம்மல்' 'சைவமணி' போன்ற பட்டங்கள் அளிக்கப் பெற்றன. தமிழில் மிகவும் சிறப்புற்று தமிழ் வளர பாடுபட்ட தமிழறிஞர்களுக்கு 'முதுபெரும்புலவர்' பட்டமும், தமிழ்த்துறையில் பணிபுரிந்து சிறந்து விளங்கியவர்களுக்குத் 'தமிழாகரர்', நூல் புலமை உடையவர்களுக்கு 'நூலறிப் புலவர்' தமிழ் வளர்ச்சிக்கு உதவியவர்களுக்குத் 'தமிழவேள்', தத்துவத்தில் சிறந்தவர்களுக்கு 'ஞானத்தமிழாகரர்', சிறந்த கவிஞர்களுக்கு 'கவிஞர்கோ கவியரசு', சிவநெறி வளர்ச்சிக்கு உதவியவர்களுக்கு 'சிவநெறி புரவலர்' எனப் பட்டங்கள் வழங்கப்பட்டன.

இசைக்கலையில் வல்லுநர்க்கு 'ஏழிசைச் செல்வர்', உழவாரப்பணி செய்தவர்களுக்கு 'உழவாரத் தொண்டர்', கலைநுட்பம் உடையவர்களுக்குத் 'கலைச்செல்வர்' 'கலைச்செல்வம்' கோவில் திருப்பணிகளுக்கு

உதவியவர்களுக்குத் ‘திருப்பணிச் செல்வர்’ அறநெறியாளர்களுக்கு ‘அறநெறி அண்ணல்’ பதிப்புக்கலையில் சிறந்தவர்களுக்கும் ‘பதிப்புக்கலையரசு’ சிறந்த எழுத்தாளர்களுக்கு ‘எழுத்துச் செம்மல்’ சிறந்த சிறுகதையாளர்களுக்குச் ‘சிறுகதை மன்னர்’ என்று பல காரணங்களுக்காகப் பட்டங்கள் வழங்கப் பெற்றன.

**பட்டம் பெற்றோர் பட்டியல்**

***திருப்புத்தூர்த் திருமுறைவிழாவில் சிறப்புப் பெற்ற அறிஞர் பெருமக்கள் பட்டியல்***

1. 1969 திரு. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை - முதுபெரும் புலவர்.
2. 1969 திரு. நடேச முதலியார் - முதுபெரும் புலவர்
3. 1970 திரு. வை.இரத்தினசபாபதி - ஞானத்தமிழாகரர்
4. 1970. திரு. அ. சங்கர நாராயணன் - தமிழாகரர்
5. 1971 திரு. ந. சேதுரகுநாதன் - தமிழாகரர்
6. 1972 திரு. ந.ரா. முருகவேள் - ஞானத்தமிழாகரர்
7. 1972 திரு. கு. அருணாச்சல கவுண்டர் - தமிழாகரர்
8. 1973 திரு. செ. வெங்கட்ராமச் செட்டியார் - தமிழாகரர்
9. 1980 திரு. சொ. சிங்கார வேலன் - தமிழாகரர்
10. 1985 திரு. வே. சுப்பிரமணியன் - தமிழாகரர்
11. 1986. திரு. தெ. முருகசாமி - தமிழாகரர்

12. 1987 முனைவர் திரு. ஆறு. அழகப்பன் - தமிழாகரர்

13. 1992. முனைவர் திரு. முருகரத்தினம் - தமிழாகரர்

14. 1970 டாக்டர் மை. சுந்தரம் - தமிழாளியர்

15. 1972 திரு.வி. சிவக்கொழுந்து - தமிழாளியர்

16. 1982 திரு. த.கி. சுந்தரமூர்த்தி - தமிழாளியர்

17. 1970 திருமதி தி. சுந்தராம்பாள் - செந்தமிழ்த்திலகம்

18. 1971 திருமதி சக்தி பெருமாள் - செந்தமிழ்த்திலகம்

19. 1972 திருமதி சரஸ்வதி இராமநாதன் - செந்தமிழ்த்திலகம்

20. 1981 திருமதி இராசம் மரகதம் - செந்தமிழ்த்திலகம்

21. 1970 திரு. ச. பாலசுந்தரம் - கவிஞர்கோ

22. 1973 திரு. அ. செகதீசன் - கவிஞர்கோ

23. 1982 திரு க. அப்புலிங்கம் - கவிஞர்கோ

24. 1987 கவிஞர் நா.மீனவன் - கவிஞர்கோ

25. 1970 திரு.சுந்தரேசன் - ஏழிசைத் தலைமகன்

26. 1970 திரு. சொ. கிருஷ்ணன் - திருத்தொண்டர்

27. 1971 திரு. சண்முகசுந்தரம் - திருத்தொண்டர்

28. 1972 திரு.வி.கிருஷ்ணமூர்த்தி - திருத்தொண்டர்

29. 1973 திரு.ஆர்.சாமிநாதத்துரை - திருத்தொண்டர்

30. 1985 திரு. பெ. அரங்கசாமி - திருத்தொண்டர்

31. 1986 திரு. ஜெ. பாலசுந்தரம் - திருத்தொண்டர்

32. 1970 திரு. சுப. ஆவுடையப்ப தேசிகர் - பண்ணிசை அரசு

33. 1971 திரு. சுந்தரேச ஓதுவர் - பண்ணிசை அரசு

34. 1982 திரு. மு. கனகசபை - பண்ணிசை அரசு

35. 1992 திரு. எஸ். குழந்தைவேல் ஓதுவார் - பண்ணிசை அரசு

36. 1973 திரு. ஆர். சாமிநாதத்துரை - பண்ணிசைக்கோ

37. 1981 திரு. ஏ.எம்.சம்பந்தமூர்த்தி ஓதுவார் - பண்ணிசைமணி

38. 1985 திரு. து.கல்யாணசுந்தரம் - பண்ணிசைமணி

39. 1986 திரு. ஏ.எம்.சுந்தரமூர்த்தி ஓதுவார் - பண்ணிசைமணி

40. 1973 திரு. மு. குமாரசாமி தேசிகர் - திருமுறைச் செல்வர்

41. 1992 திரு. பத்மஸ்ரீ எம்.முத்தையா ஸ்தபதி - சிற்பக்கலையரசர்

42. 1992 திரு. எஸ்.எம். கணபதி ஸ்தபதி - சிற்பக்கலை வாரதி

**வள்ளல் பாரி விழாவில் சிறப்புப் பெற்ற பெருமக்கள் பட்டியல்**

1. 1954 திரு. தெ. பொ.மீனாட்சிசுந்தரனார் - முதுபெரும் புலவர்

2. 1967 திரு. க.வெள்ளைவாரணர் - முதுபெரும் புலவர்

3. 1968 திரு. ப. இராமநாதபிள்ளை - முதுபெரும் புலவர்

4. 1969 திரு. சி. அருணை வடிவேல்முதலியார் - முதுபெரும் புலவர்

5. 1970 திரு. ச.தண்டபாணி தேசிகர் - முதுபெரும் புலவர்

6. 1973 திரு. நீ.கந்தசாமிப்பிள்ளை - முதுபெரும் புலவர்

7. 1974 திரு. வ. சுப. மாணிக்கனார் - முதுபெரும் புலவர்

8. 1969 திரு. க. நைனார் முகம்மது - பெரும் புலவர்

9. 1970 திரு. ப. நமசிவாயம் - பெரும் புலவர்

10. 1971 திரு. அ.மா.பரிமளம் - பெரும் புலவர்

11. 1972 திரு. சி. நைனார் முகம்மது - பெரும் புலவர்

12. 1973 திரு. ரம்போலா மாஸ்கரனேஸ் - பெரும் புலவர்

13. 1981 திரு. ரா.சாரங்கபாணி - பெரும் புலவர்

14. 1998 திரு. நா. பாலுச்சாமி - பெரும் புலவர்

15. 1996 திரு. முடியரசன் - கவியரசர்

16. 1982 திரு. கவிஞர் சுரதா - கவியரசர்

17. 1986 திரு. அப்துல் ரகுமான் - கவியரசர்

18. 1969 திரு. க. தேசிகன் - கவிஞர்கோ

19. 1970 திரு. பூ.அமிர்தலிங்கனார் - கவிஞர்கோ

20. 1971 திரு. கோவை இளஞ்சேரன் - கவிஞர்கோ

21. 1972 திரு. அரு. சோமசுந்தரம் - கவிஞர்கோ

22. 1972 திரு. புத்தனேரி இரா. சுப்பிரமணியம் - கவிஞர்கோ

23. 1974 திரு. ஞா. மாணிக்கவாசகம் - கவிஞர்கோ

24. 1980 திரு. அ. பழனி - கவிஞர்கோ

25, 1992 திரு. 'சிற்பி' பாலசுப்பிரமணியன் - கவிஞர்கோ

26. 1968 திரு. திருவாசகமணி - அருங்கலைக்கோன்

27. 1969 திரு. ந. சுப்புரெட்டியார் - அருங்கலைக்கோன்

28. 1970 திரு. மா.சண்முகசுப்பிரமணியன் - அருங்கலைக்கோன்

29. 1971 திரு. அ. திருமலை முத்துசுவாமி - அருங்கலைக்கோன்

30. 1969 திரு. மதுரை சேதுராமன் பொன்னுச்சாமி - ஏழிசைச் செல்வர்

31. 1971 திரு. நாமகிரிப்பேட்டை கே. கிருஷ்ணன் - ஏழிசைச் செல்வர்

32. 1974 திரு. ஷேக் சின்னமவுலானா - ஏழிசைச் செல்வர்

33. 1971 திரு. மா.இரா.பொ. குருசாமி - நூலறிப்புலவர்

34. 1972 திரு. தா.ஞானமூர்த்தி - நூலறிப்புலவர்

35. 1978 திரு. பூ.சாம்பசிவம் - நூலறிப்புலவர்

36. 1985. திரு. ஔவை நடராசன் - நூலறிப்புலவர்

37. 1998 திரு. தமிழ்க்குடிமகன் - நூலறிப்புலவர்

38. 1971 திரு. அகிலன் - நற்கதைநம்பி

39. 1972 திரு. நாரண துரைக்கண்ணன் - நற்கதைநம்பி

40. 1973 திரு. செகசிற்பியன் - நற்கதைநம்பி

41. 1972 திருமதி. இரா.காந்திமதி - செந்தமிழ் விறலி

42. 1981 திருமதி. சாரதா நம்பிஆரூரன் - செந்தமிழ் விறலி

43. 1986 திருமதி. விசயலட்சுமி நவநீதகிருஷ்ணன் - செந்தமிழ் விறலி

44, 1993. புலவர் திருமதி. பூங்கோதை - செந்தமிழ்த் திலகம்

45. 1970 திரு. டி.கே.சண்முகம் சகோதரர்கள் - நடிகர் திலகம்

46. 1970 திரு. திருக்கோளக்குடி கே.ஆர்.சுப்பிரமணியன் - இசைவேள்

47. 1972 திரு. டி.என்.சுகிசுப்பிரமணியன் - எழுத்துவேந்தன்

48. 1971 திரு. ஞா. தேவநேயபாவாணர் - செந்தமிழ் ஞாயிறு

49. 1998 திரு. பொன்னீலன் - எழுத்துவேந்தன்

50. 1972 திரு. தமிழண்ணல் - கணக்காயர்

51. 1973 திரு. கே.என். தண்டாயுதபாணி - தலைக்கோளாசான்

52. 1973 செல்வி. பத்மாசுப்பிரமணியன் - தலைக்கோலரிவை

## விசாக விழா, குருபூசை விழா, மெய்கண்டார் விழாக்களில் பாராட்டுப் பெற்றவர்களின் பட்டியல்

1. திரு. சு. மணி - மெய்கண்ட செல்வம்
2. திரு. முரு.பழ. இரத்தினம் செட்டியார் - ஞானத்தமிழாகரர்
3. திரு. ப. மூக்கப்பிள்ளை - சிவநெறிப்புரவலர்
4. திரு. பழ. முத்தப்பன் - தமிழாகரர்
5. திரு. ரெ. முத்துகணேசன் - கவிஞர்கோ
6. திரு. பழ. ஆறுமுகம்- அருள்நெறிப்புரவலர்
7. திரு. ஆறு. இராமசாமி - அறமனச்செம்மல்
8. திரு. ச. மெய்யப்பன் - தமிழவேள்
9. திரு. வானதி திருநாவுக்கரசு - பதிப்புக்கலையரசு
10. திரு. குன்றக்குடி பெரிய பெருமாள் - எழுத்துச் செம்மல்
11. திரு. க. கதிரேசன் - ஆதீனப்புலவர்
12. திரு. மரு.பரமகுரு - ஆதீனக்கவிஞர்
13. திரு. இரா. கலைக்கோவன் - கலைச்செல்வர்
14. திருமதி நளினி - கலைச்செல்வி
15. திரு. குன்றக்குடி வைத்தியநாதன் - ஏழிசைச் செல்வர்

16. பண்டிதமணி கதிரேசன் செட்டியார் - சைவசிந்தாந்த வித்தகர்

17. சிதம்பரம் இராதாகிருஷ்ணன் பிள்ளை - ஆதீன வித்துவான்

18. அரு. காடப்பச் செட்டியார் - திருப்பணிச் செல்வர்

19. திரு. லெ. நாராயணன் செட்டியார் - அறநெறி அண்ணல்

20. திரு. சீர்காழி சிவசிதம்பரம் - ஏழிசை இளவரசு

## அடிகளார் பற்றிய நூல்கள்

1960-இல் தமிழ்ப்புலவரும், சைவப் புலவருமான சொர்ண காளீச்சுரன் ஆதீன வரலாறு எனும் நூலை எழுதினார். அவர்களுக்குப் பின் விரிவாக ஆதீன வரலாறு ஆதீனக்கவிஞராகவும், ஆதீனத் தலைமைப் பணியாளராகவும் விளங்கிவரும் மரு.பரமகுரு அவர்களால் எழுதப்பெற்று 1.9.1999-இல் வெளியிடப்பட்டுள்ளது.

பா.சுந்தர் எழுதிய 'அருள்நெறித்தந்தை அடிகளார்' எனும் நூல் 1987-இல் வெளிவந்துள்ளது. இது எம்.ஃபில் பட்ட ஆய்வேடாகும். 'அடிகளார் ஓர் உறவுப்பாலம்' எனும் நூல் வானதிப் பதிப்பக வெளியீடாக 1996இல் வந்தது. தொகுப்பாசிரியர்கள் மீ.நோயல், மரு.பரமகுரு ஆவர். 'நெஞ்சம் மறப்பதில்லை' எனும் நூலும் அமுதன் அடிகள்' 'தமிழ்மாமுனிவர் தவத்திரு அடிகளார்' - சி. நடராஜன் (பொறுப்பாசிரியர் முரசு மலர், மாலைமுரசு - மதுரை) அவர்கள் நூலும் அருள்நெறித் திருப்பணிமன்ற வெளியீடாக 1966இல் வெளிவந்தது.

பொன்னீலனின் "தவத்திரு குன்றக்குடி அடிகளார் தமிழகத்தின் ஆன்மீக வழிகாட்டி" என்ற நூல் 1997இல் வெளிவந்துள்ளது.

"அருள்நெறித்தந்தை அடிகளார் காப்பியம்" என்ற நூலை கவிஞர் குன்றக்குடி கதிரவன் அடிகளார் அறக்கட்டளைச் சார்பாக 2000-இல் வெளியிட்டுள்ளார்.

இந்நூல்கள் அனைத்தும் அடிகளாரது திருவுள்ளத்தைப் படம்படித்துக் காட்டும் கண்ணாடிகளாகும். இவை எல்லா தரப்பு மக்களாலும் எந்நாளும் படித்து இன்புற வேண்டிய இனிய நூல்கள். இந்நூல்கள் பொது நூலகங்களிலும், கல்வி நிலையங்களிலும் இடம்பெற வேண்டிய இன்றியமையா நூல்கள்.

## அடிகளார் சிவப்பேறு

வாழ்நாள் எல்லாம் சைவத்திற்காகவும், தமிழுக்காவும், தமிழ்ச் சமுதாயத்திற்காகவும் ஓய்வின்றி உழைத்தவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார். உடல்நலம் குன்றியிருந்தக்காலத்திலும் இருந்த இடத்திலிருந்தே பணியாற்றியுள்ளார். தொண்டு செய்வதையே தன் மூச்சாகக் கொண்ட அடிகளார் அவர்கள் 15.4.1995-இல் தமது 70-வது வயதில் சிவப்பேறு பெற்றுள்ளார்.

## அடிகளார் அருளாலயம்

அடிகளார் அவர்களின் ஞானசமாதியின் மீது "அடிகளார் அருளாலயம்" - என்ற பெயரில் அருணாலயம் கட்டப்பெற்று 11.2.2002-இல் திருக்குட நன்நீராட்டு விழா செய்யப் பெற்றது. இவ்வாலயம் அடிகளாரின் அன்பர்கள் கொடுத்த காணிக்கைப் பொருளைக் கொண்டு கட்டப் பெற்றது. அடிகளாரின் புனித உடல் குன்றக்குடியில் அருளாலயத்தில் கோயில் கொண்டுள்ளது. அடிகளார் உலகெங்கும் உள்ள

பல்லாயிரம் தமிழன்பர்கள், சைவ மெய்யன்பர்கள், அருள்நெறி அன்பர்களின் உள்ளங்களில் குடிகொண்டுள்ளார்.

## அடிகளார் மணிமண்டபம்

அடிகளாருக்கு அருளாலயம் மட்டும் போதாது. ஒரு மணிமண்டபமும் வேண்டும் என்பது அவரது அன்பர்களின் விருப்பம். அதனால் ஆதீன மடத்தின் பிரதானக் கட்டிடத்திற்கு எதிரிலேயே அருளாலயத்தை அடுத்துத் தனியாக ஒரு மணிமண்டபமும் கட்டப்பெற்றது.

இம்மண்டபம் அன்பர்களின் உதவியாலும், அரசின் உதவியாலும் கட்டப்பெற்றது. அடிகளார் மணிமண்டபம் அடிகளாரிடம் பேரன்பும், பெருமதிப்பும் கொண்ட அன்றையத் தமிழக முதலமைச்சர் மு. கருணாநிதி அவர்களால் 12.3.2001-இல் அன்றையப் பேரவைத்தலைவர் திரு.பி.டி.ஆர்.பழனிவேல்ராஜன் அவர்கள் தலைமையில் திறந்து வைக்கப்பெற்றது.

## பொன்னம்பல அடிகள்

தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் 22.6.1993-இல் இளைய சந்நிதானம் அவர்களுக்குத் தீட்சைகளைச் செய்து காவியுடை தரித்துக் கந்தசாமித் தம்பிரான் என்னும் தீக்கைத் திருப்பெயரையும் வழங்கித் தம்பிரானாக்கி அருளினார். 3.7.1993-இல் தவத்திரு கந்தசாமித் தம்பிரான் சுவாமிகளுக்குப் பொன்னம்பல தேசிகர் என்ற பெயருடன் அடிகளார் இளவரசுப்பட்டம் வழங்கி அருளினார்கள்.

சின்னப்பட்டம் பெற்றபின் பொன்னம்பலத் தேசிக சுவாமிகள்

அடிகளார் அவர்களிடம் நேர்முகமாகவே எல்லாப் பயிற்சிகளையும் பெற்று வந்தார். அடிகளார் 15.4.1995-இல் சிவப்பேறு பெற்றபின் சின்னப்பட்டம் பொன்னம்பல தேசிகர், 'தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்' என்ற திருப்பெயருடன் 46-ஆம் பட்டம் குருமகாசந்நிதானமாக எழுந்தருளி அருளாட்சி புரிந்து வருகிறார்கள்.

தன் ஞானகுருவாகிய மாமுனிவர் தவத்திரு அடிகளார் அவர்களை நினைவுகூர்ந்து தன் புனிதப்பயணத்தைத் தொடர்பவர்தான் 46-ஆவது மகாசந்நிதானம் பொன்னம்பல அடிகளார் அவர்கள். ஆதீனத்தில் மூன்று தலைமுறைகளாகப் பணியாற்றி வரும் குடும்பத்தைச் சேர்ந்தவர்.

பொன்னம்பல அடிகளாரைத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் சின்னப்பட்டமாக்கி மகிழ்ந்த போது அதனை நிறைவோடு ஏற்றுத் தன்னடக்கமாகக் கூறுவதை 'அருள்நெறித் தந்தை அடிகளார் காப்பியத்தில்' கவிஞர் குன்றக்குடி கதிரவன்,

"தவத்திருவே! உயர்திருவே! - உங்கள்
தவமிருந்து வளர்ந்திட்ட நானும்
உவகையுடன் உள்ளார்ந்த சொல்லை
உள்ளத்தில் நிலைநிறுத்தி வைத்து
குவலயமே போற்றுகின்ற வண்ணம்
குமரனா வந்திட்ட நேரம்
சிவனான உங்களுக்கு என்றும்
சிறுத்தொண்டு செய்திடுவேன் என்றான்"(33)

என்று பாடியுள்ளார்.

"பல்கலைக்கழகம் நமக்குக் கற்றுத் தந்ததைவிட, அந்தப்

பல்கலைக்கழகத்திடம் நாம் கற்றுக் கொண்டது ஏராளம். அதை இன்றுவரை வாசிக்க முயன்று முயன்று தோற்றுப் போகின்றோம். கடலைச் சிறு குவளைக்குள் எப்படி அடக்க முடியும்? களங்கமில்லாக் கதிரவனைச் சிறு கைகள் எப்படி மறைக்க முடியும்? இமயத்தின் பாதையில் சிறு எறும்பு நகர்கின்றது. ஒலிம்பிக் ஓட்டப்பந்தய மாவீரன் ஓடிய தடத்தில் சிறுகுழந்தை தவழத் தொடங்கியுள்ளது."[34] - என்று தன்னடக்கமாகத் தவத்திரு பொன்னம்பல அடிகளார் கூறியுள்ளார்.

அடிகளார் அவர்களுக்குப் பின் அவர்கள் வழியைப் பின்பற்றி சைவப் பணியும், சமூகப் பணியும் ஆற்றி ஆதீனத்தைப் பெருமைபெறச் செய்து வருபவர் தவத்திரு பொன்னம்பல தேசிகர். தோற்றம், நடை , உடை, பாவனை, சொல், செயல், பேச்சு, எழுத்து என்று எல்லாவற்றிலும் அடிகளாரைப் பின்பற்றி அவர்கள் நினைவைப் போற்றி பற்பல பணிகளைத் திறம்படச்செய்து வருகிறார்.

"இருபதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் குன்றக்குடியில் தோன்றிய இளஞாயிறு தன் கதிர்களைப் பரப்பத் தொடங்கியது. அந்த ஒளி வெள்ளத்தில் இயேசுவும், நபிகள் நாயகமும், அன்னை தெரசாவும், நம்மாழ்வாரும், திருஞானசம்பந்தரும், நாவரசர் பெருமானும், சுந்தரர் பெருமானும், மாணிக்கவாசகரும் ஒவ்வொரிடத்தைப் பெறுகின்றனர். மாறுபடாடுடைய சமயங்கள் என்று பலராலும் கருதப்படும் சமயங்களின் முதல் நூல்களை நன்கு கற்றுத் தெளிந்த இந்த ஆதீனகர்த்தர், இவற்றிடையே காணப்படும் ஒருமைப்பாடுகளைத் தம்பேச்சுக்களில் பல்வேறு இடங்களில் கோடிட்டுக் காட்டியுள்ளார்"[35]என்று தன்னடக்கமாகத் தவத்திரு பொன்னம்பல அடிகளார் கூறியுள்ளார்.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் காலத்தில் 1988-இல் ஏப்ரல் 9,10

தேதிகளில் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனமும் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகமும் இணைந்து “திருக்கோயில் ஆய்வுக்கருத்தரங்கு” என்றொரு கருத்தரங்கை நடத்தின. ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கி “கட்டுரைக் கோவை” என்றொரு மலரும் வெளிவந்தது.

பொன்னம்பல அடிகளாரும் அதே போன்று ஒரு திருக்கோயில் கருத்தரங்கத்தைப் பிள்ளையார்பட்டியில் 1997 சனவரி 3,4,5 தேதிகளில் நடத்தி அருளினார்கள். குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம், காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகம், பிள்ளையார்பட்டி சிவநெறிக்கழகம் ஆகிய மூன்றும் சேர்ந்து இக்கருத்தரங்கத்தை நடத்தியுள்ளன. கட்டுரைகள் தொகுக்கப்பெற்று “ஆய்வுக் கோவை” என நூலாக அச்சிடப் பெற்று வழங்கப் பெற்றுள்ளன.

தவத்திரு பொன்னம்பல அடிகளாரின் மேடைப் பேச்சுக்களைத் தொகுத்து “சமய வாழ்வு” என்ற நூலாகத் திருமாறன் பதிப்பகம் 1999-இல் வெளியிட்டுள்ளது. இந்நூலில் சங்கப்பாடல்கள் முதல் பாரதிதாசன் பாடல்கள் வரை சுட்டிக் காட்டி தம் சமயக் கருத்துக்களுக்கு அணி சேர்த்துள்ளார்.

தமிழும் சமயமும் பிரிக்க முடியாதது. தமிழ், சமயத்தோடு பின்னிப் பிணைந்தது. சமயச் சான்றோர்கள் தமிழாலே தமிழைத் தெய்வமாகப் போற்றியவர் என்ற சிந்தனையைப் பொன்னம்பல அடிகளார் “சமய வாழ்வு” நூலில், “நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பியது ஞானசம்பந்தரின் ஞானத் தமிழ்! உலகை ஆளும் கொற்றவனைக் கொற்றாளாய் கூலி ஆளாய் மதுரைத் திருவீதியில் மண் சுமக்கச் செய்தது

மாணிக்கவாசகரின் மணித்தமிழ் தமிழ் உலகை ஆளும் நாயகனை நள்ளிரவில் நங்கையின்பால் தூது செல்லச் செய்தது. நற்றமிழ்ச் சுந்தரரின் இசைத்தமிழ் மறைக்காட்டில் வேதங்கள் அடைத்த கதவைத் திறக்கச் செய்தது. திருநாவுக்கரசர் வளர்த்த தேனார் தீந்தமிழ்ப் பாக்களாகிய திருத்தொண்டுத் தமிழ்”[36] என்று குறிப்பிட்டுள்ளார்.

இந்தியத் திருநாட்டில் குன்றக்குடியை “குன்றாக்குடியாக” உயர்த்திக் காட்டிய தவத்திரு குன்றக்குடி அடிகளார் அடிச்சுவட்டில் பேச்சிலும், எழுத்திலும், செயல்திறனிலும் உயர்ந்து நிற்கிறார்கள் தவத்திரு பொன்னம்பல அடிகளார். குன்றக்குடி ஆதீன இளஞாயிறான தவத்திரு பொன்னம்பல அடிகளார் ஆன்ம ஈடேற்றத்திற்கான ஆன்மீகப் பணியையும் சமூகத்திற்குத் தேவையான காலத்துக்கேற்ற சமூகப்பணிகளையும், தமிழ்மொழி வளர்ச்சிப் பாலமாகத் தமிழ்ப்பணியையும் ஆரவாரமின்றி இடையறவுபடாது ஆற்றி வருகிறார்கள். மறைந்த அடிகளார் மேடைகளில் பேசினால் கருத்துக்கள் அருவியென பெருக்கெடுக்கும். அதே வழித்தடத்தில் ஆன்மீகம், அறிவியல், மனிதநேயம் என்ற கருத்தில் சொல் மழை பொழிவதில் “அவருக்கு நிகர் இவரே” என்று தமிழகத்து மக்களின் பாராட்டினைப் பெற்று வருகிறார் பொன்னம்பல அடிகளார்.

பாரதத்தாயின் தவப்புதல்வர்களில் ஒருவரும் அணு விஞ்ஞானியுமான இன்றைய குடியரசுத் தலைவர் எ.பி.ஜே. அப்துல்கலாம், இளைய சமுதாயம் தடம்புரளாமல் நாட்டின் வளர்ச்சிப் பாதைக்கு நல்ல வித்தாக இருக்க வேண்டும் என்பதற்காகப் பள்ளி, கல்லூரி விழாக்களில் ஆர்வமுடன் பங்கெடுத்து இளம் உள்ளங்களில் நல்ல சிந்தனைத்துளிகளை வழங்குகிறார். தவத்திரு பொன்னம்பல அடிகளாரும் பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழக விழாக்களில் கலந்து கொண்டு அரிய, நயமான உரைகளை

நிகழ்த்தி வளர்ந்து கொண்டிருக்கின்ற இளைய சமுதாயத்தினர்கள் மனதில் வளர்ச்சிக்கான சிந்தனை உரமிடுகிறார். சமுதாய வளர்ச்சிக்குத் தடைக்கற்களாக இருக்கும் சில சமூகச் சீர்கேடுகள் பற்றிய கருத்துக்களைத் தம் உரையில், புராணங்கள் வாயிலாகவும், கதைகள் மூலமாகவும் அன்றாட வாழ்க்கை நிகழ்வுகள் கொண்டும் விளக்கி கேட்பவர்கள் செவிக்கு விருந்தளிக்கிறார்.

பொன்னம்பல அடிகளார் மதுரை வானொலி நிலையத்தில் நிகழ்த்திய "நாள் ஒரு நயம்" என்ற கருத்துப் பெட்டகம், "காற்றில் வந்த கருத்து மழையாக" நூல் வடிவம் பெற்று படிப்பவர்கள் நெஞ்சுக்குச் சிந்தனை நிறைவை வழங்கி வருகிறது. அடிகளாரின் சிந்தனைத் துளிகள் அடங்கிய கட்டுரைகளின் தொகுப்பு நூல்தான் "காற்றில் வந்த கருத்து மழை"என்னும் நூல்.

தம் கருத்துக்களுக்குச் சங்கப் பாடல்கள் முதல் பாரதி, பாரதிதாசன், பட்டுக்கோட்டையார் வரை பாடல்களைச் சான்றுகளாக எடுத்துக்காட்டி சமுதாயத்தில் காணப்படும் சீர்கேடுகளை விளக்கி "காற்றில் வந்த கருத்து மழை"என்ற நூலிற்குச் சிறப்பான அணிந்துரை நல்கி உள்ளார் அறிவியல் அறிஞர் மணவை முஸ்தபா. அணிந்துரையில், "தான் துறவியாயினும், இளங்கோவடிகளின் மனவளம் பெற்றவராகப் பெண் உரிமைக்கு முரசு கொட்டுகிறார். தாய்மையை இழிவுபடுத்தும் வரதட்சணைக் கொடுமை போன்ற சமுதாயக் கேடுகளைக் கடுமையாகச் சாடுகிறார்" என்று கூறியுள்ளார்.

"காற்றில் வந்த கருத்து மழை"என்ற நூலில் 'நாள் ஒரு நயம்' அடங்கியக்கருத்து மழை அத்தனையையும் தமிழர்கள் படித்து, சிந்தித்து,

நினைவில் வைத்து, செயல்பட்டு அம்மழையில் நனைந்து, மகிழ வேண்டும். "தருக தன்னம்பிக்கை"என்ற நயவுரையில் ஆசிரியப் பெருமக்களுக்கு வேண்டுகோளாக விடுத்துள்ள செய்தியாவது, "ஆசிரியப் பெருமக்கள் மாணவர்களுக்கு மண்ணியலைக் கற்றுத் தாருங்கள்; விண்ணியலைக் கற்றுத் தாருங்கள்! இந்த மண்ணில் மறைந்து போன சாம்ராஜ்யங்களின் வரலாற்றைக் கற்றுத் தாருங்கள்! இன்னும் எத்தனை அறிவியல்கள் தோன்றுகின்றனவோ அத்தனையும் கற்றுத் தாருங்கள்! ஆனால் ஒன்றை நீங்கள் மாணவர்களுக்குக் கற்றுத்தர மறந்து விட்டீர்கள்! தன்னம்பிக்கையெனும் அதி அற்புத ஆயுதத்தை இந்த இளைய தலைமுறைக்குக் கற்றுத்தர மறந்து விட்டீர்கள். அதனால் ஆசிரியப் பெருமக்கள் இளைய மாணவச் செல்வங்களுக்குத் தன்னம்பிக்கையைக் கற்றுத்தர வேண்டியது இன்றையத்தேவையாகும்"[37] என்பார். அவர்களின் அந்த உரை யதார்த்தத்தையும் இளையச் சமுதாயத்தின் மீது அவர்களுக்குள்ள அக்கறையையும் அதே அக்கறை ஆசிரியர்களிடம் இருக்க வேண்டிய அவசியத்தையும் உணர்த்துகிறது. இதனை ஆசிரியர்கள் உணர்ந்துச் செயல்பட்டால் வருங்கால பாரதம் இன்னும் ஒளிமயமாக மாறும் என்பதில் மாறுபாடே இருக்க முடியாது. ஒவ்வொரு மனிதனிடத்தும் அற்புதமான ஆற்றல்கள் உள்ளன. அவற்றை வெளிக்கொணர வழி தெரியாமலும், தெரிந்தும் சோம்பேறியாகவும் மனிதன் வாழ்கின்றான். கலைஞனின் பார்வையில் கல் சிற்பமாக தெரிகிறது. இது அவனின் ஆற்றலின் வெளிப்பாடு. பொன்னம்பல அடிகளார் அவர்களின் நயங்களில் ஒன்று "நம்மை நாமே செதுக்குவோம்" என்பதாகும். அதில்,

"நாம் ஒவ்வொருவரும் உயிர்ப்பாறைதானே! நம்முள் அற்புத

ஆற்றல் அடங்கிய உயிர்ச்சிற்பம் மறைந்து கிடக்கின்றது. நம்மைச் செதுக்கும் சிற்பி புறத்தே இல்லை. நம்மை வடித்து எடுக்கும் சிற்பி நாம் தான்! நம் உயிர்ப் பாறையிலுள்ள ஆசை, கோபம், களவு, வஞ்சகம் என்ற தேவையற்ற பகுதிகள் நீக்கப்பட்டு விட்டால், நாம் உயிருள்ள உன்னதமான சிற்பமாக மாறிவிடுவோம்!"[38] என்ற சிந்தனை மனித ஆற்றலுக்கான உரைக்கல்லாகும்.

இந்நூலிலுள்ள ஒவ்வொரு நயமும் படிக்கின்ற மக்களுக்குப் புதுவிதமானச் சிந்தனையை வழங்கி, மனித மனத்தைச் செம்மைப்படுத்தும், பக்குவப்படுத்தும். செல்லும் பாதையில் புதுமாற்றத்தை உண்டாக்கும்.

1999-ஆம் ஆண்டின் "கலைமாமணி" விருது குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களுக்கு இயற்றமிழ்ச் சொற்பொழிவுக்காக வழங்கப்பெற்றது. பொன்னம்பல அடிகளாரின் இலக்கியப்பணி மேடைப் பேச்சாகவும், பத்திரிகைச் செய்திகளாகவும், இலக்கிய ஆய்வுகளாகவும், பரிணாமம் பெற்று வளர்ந்து வருகிறது. "சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே" என்ற பாரதியின் வாக்கினைப் பல மேடைகளில் நிரூபித்து வருகிறார். "உலக சமாதானத்தை விரும்பி அதற்குரிய வழிமுறைகளை வலியுறுத்தியே கம்பராமாயணத்தைக் கம்பர் படைத்துள்ளார் என்று குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் ராஜபாளையத்தில் நடந்த கம்பன் விழாவில் பேசியுள்ளார்."[39]

பரமக்குடி அரசு கலைக்கல்லூரி ஆண்டுவிழாவில் அதிக மதிப்பெண் பெற்ற மாணவ மாணவிகளுக்கும், விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவ-மாணவிகளுக்கும் சான்றிதழ்களை வழங்கி "நம் நாட்டில் இன்னும் இரட்டைக் கல்விமுறை இயங்கி வருகிறது. கிராமப் பள்ளிகளில்

மழை பெய்தால் அன்றைக்குப் பள்ளிகளுக்கு விடுமுறையும், கோடை காலத்தில் மரத்தின்கீழ் போதி மரத்தடிப் புத்தன் போலவும் பாடம் நடத்தி வருகின்றனர். படிப்பாளிகளைவிட படைப்பாளிகளை நாம் இன்னும் உருவாக்க வேண்டும்"[40] என்றார்.

நாட்டில் தாய்மொழியில் கற்பிக்கக்கூட அரசாணை தேவைப்படுகிறது. இது மிகவும் வருந்தத்தக்கதாகும். வளர்ச்சியை நோக்கிச் செல்லும் நாட்டில் கூட இந்நிலை இல்லை. பிறந்த குழந்தை தாய்ப்பாலைத்தான் அருந்துகிறது. அதேபோல் முதல் பருவத்தில் தாய்மொழியில்தான் கற்க வேண்டும். வெற்றிக்குக் காரணம் அதுதான் என்று கூறியுள்ளார்.

***அறிவியல் கல்வி***

அறிவியல், தொழில்நுட்பம், கிராமக் கதவுகளை என்றைக்குத் தட்டுகிறதோ அதுதான் செல்வச் செழிப்பாகும். அறிவியல் கல்வி பரவினால்தான் இந்நாடு மக்கள் இயக்கமாக மாறும். இது இல்லாததால்தான் தாய்மொழியை வளர்க்கும் கட்டாயத்தில் நாம் உள்ளோம். நம்நாட்டில் ஆன்மீகம் என்பதற்குக்கூட புதிய பொருளைக் கூறுகிறோம் வறுமை, ஏழ்மை அனைத்திற்கும் ஆண்டவன் என்று சாக்குக் கூறுகிறோம். மனிதனே ஏழைக்கடவுள், பணக்காரக் கடவுள் என பிரித்துக் கரன்சிதாள் தருபவனாக இறைவனை மாற்றி விடுகிறான்.

கங்கையிலும், காவேரியிலும் நீராடினால் பாவத்தைப் போக்க முடியாது. ஈரம் நிறைந்த பிறரை நேசிக்கும் அன்பு வேண்டும். உண்மையான ஆன்மீகத்தை எண்ணுவதை நோக்கி இளைஞர் சமுதாயம் செல்ல வேண்டும். அண்மையில் நம்நாட்டு எல்லையில் பதட்டம்

ஏற்பட்டபோது அனைவருமே ஒரு பக்கமாக யோசித்தோம். கிரிக்கெட் பார்க்கும் போது தேசியப்பற்று வருகிறது என்று பேசியுள்ளார்.

7.3.2002-இல் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் நடைபெற்ற ரெ.முத்துக்கணேசனார் மணிவிழா அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்ச்சியில் “பெரிய புராணம் காட்டும் சமுதாயம்” எனும் தலைப்பில் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

தொண்டைத் தொண்டிற்காக ஆற்றிய தொண்டர்கள் பற்றிச் சேக்கிழார் பாடியுள்ளார். ‘வாழ்வு’ என்பது இலட்சியத்தைக் கொண்டதாக இருக்க வேண்டும். ‘பிழைப்பு’ என்பது எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். இதனைத்தான் சேக்கிழார் குறிப்பிடுகிறார் என்றும் ‘ஆட்சி’ என்பது உயிர்களைக் காப்பதாக அமைய வேண்டும் என்றும் அச்சொற்பொழிவில் பல யதார்த்த உண்மைகளைப் பெரிய புராணச் சிந்தனையோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார். மேடைகளில் பொன்னம்பல அடிகளார் மாணவர்கள், அறிவார்ந்த அறிஞர் பெருமக்கள், பொதுமக்களிடையே, தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கொண்டு தெள்ளுத் தமிழில் தீஞ்சுவைத் தமிழமுதைப் பரப்பி வருகிறார்.

## தொகுப்புரை

அடிகளாரின் தமிழ்ப்பணி அளப்பரியது. மரபுக்கவிதை, நாடகம், சமயம் இலக்கியங்கள், மேடைப் பேச்சு எனப் பல வழிகளில் தமிழை வளர்த்துள்ளார்.

செய்தித்தாள்கள் பல நடத்தியுள்ளார். தமிழகத்திலுள்ள பெருநகரங்கள், சிற்றூர் எனப் பல இடங்களில் மேடைகளில் முழங்கியுள்ளார். தமிழகத்திலுள்ள பல கல்வி நிறுவனங்கள், தொண்டு நிறுவனங்கள், பலவற்றிலும் பேசி மாணவர்களையும், பொதுமக்களையும் சிந்திக்கச் செய்தவர்.

இந்தியாவின் பல பகுதிகளுக்கும் சென்று தமிழின் சிறப்பையும், தமிழர்களின் மேன்மையயையும் பரப்பியவர். உலக நாடுகள் பலவற்றிற்குச் சென்று இந்திய, தமிழகப் பண்பாடு மற்றும் கலாச்சாரத்தைப் பரப்பியுள்ளார். அந்நாடுகளிலுள்ள தொழில்கள், கல்விமுறை, புதுமை நோக்கு போன்ற பலவற்றை இங்கு வந்து புகுத்தியுள்ளார்.

பல்கலைக்கழகங்களில் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். அரங்கினுள் நிகழ்ந்த பட்டிமண்டபங்களைப் பொதுமக்களும் கேட்டுப் பயன்பெறும் வண்ணம் வீதிகளுக்குக் கொண்டு வந்தவர்.

இத்திருமடம் சமயச் சொற்பொழிவாளர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள், தமிழறிஞர்கள், பேச்சாளர்கள், படைப்பாளர்கள் என மொழிக்கும் சமூகத்திற்கும் தொண்டாற்றும் பலருக்குக் கவியரசர், கவிக்கோ, நற்கதை நம்பி, தமிழாகரர், தமிழ்வேள், திருமுறைச் செல்வர்,

ஆதினப்புலவர், சிவநெறிச் செம்மல் போன்ற பல பட்டங்களை வழங்கி ஊக்குவித்து, சிறப்புச் செய்கின்றது.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் 45ஆம் பட்டம் 15.4.1995-இல் முக்தியடைந்தார். 03.7.1993இல் பொன்னம்பல தேசிகர் என்ற திருப்பெயருடன் தற்போதைய 46ஆம் பட்டம் அவர்கள் இளவரசுப் பட்டம் பெற்றார். திருமடத்தின் முன்னோர்களின் மரபு வழியும் அடிகளாரின் அடியொற்றியும் திருமடத்தை நன்முறையில் நிருவகிப்பதோடு சமயம், சமுதாயம், தமிழ் மூன்றிற்கும் அருந்தொண்டாற்றி வருகிறார்.

# மேற்கோள் விளக்கம்


1. மரு.பரமகுரு, குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன வரலாறு, ப.41.

2. பா.சுந்தர், அருள்நெறித் தந்தை அடிகளார், ப.4

3. மேலது, பக்.6-7.

4. மேலது, ப.77.

5. திருநாவுக்கரசர் சுவாமிகள் தேவாரம் பதிகம்: 7. பாடல் எண்: 3.

6. பாரதியார், பாரதியார் கவிதை, ப.156

7. பா.சுந்தர், அருள்நெறித் தந்தை அடிகளார், ப.92.

8. தவத்திரு குன்றக்குடி அடிகளார் - திருக்குறள் உரை: ப.52.

9. மேலது, பக். 203-204.

10. குன்றக்குடி அடிகளார் நூல் வரிசை தொகுதி 1, ப.14.

11. திருவாசகம் (சைவசித்தாந்த மகாசமாஜம்,(1968) சென்னை, ப.25.

12. சாமி பழனியப்பன், அடிகளார் உவமை நயம், ப.60.

13. குன்றக்குடி அடிகளார், சமய இலக்கியங்கள், ப.37.

14. சி.சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.28.

15. குன்றக்குடி அடிகளார் சொல்லமுதம் ப.62.

16. பா.சுந்தர், அருள்நெறித் தந்தை அடிகளார், ப.112.

17. பாவேந்தர் பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப.96.

18. கவிஞர் குன்றக்குடி கதிரவன், அருள்நெறித் தந்தை அடிகளார் காப்பியம், ப.16.

19. குன்றக்குடி பெரியபெருமாள், (தொகுப்பு) அடிகளார் அருள்மொழி ஐநூறு, பக்.106-108.

20. தமிழ் மகள் - மாத இதழ்-20 நாள்: 15.12.1998, ப.7

21. சிகரம் இதழ் (இருமாதங்களுக்கு ஒரு முறை) ப.21.

22. குன்றக்குடி அடிகளார், நம்மை மேம்படுத்தும் எண்ணங்கள், ப.21.

23. புறநானூறு - 183-ம் பாடல்.

24. திருவள்ளுவர், திருக்குறள், அதி:40 குறள்: 400.

25. அதிவீரராமப் பாண்டியன், நறுந்தொகை, பாடல்: 126.

26. குமரகுருபரர், நீதிநெறி விளக்கம், பாடல்: 2.

27. கவிஞர் குன்றக்குடி கதிரவன், அருள்நெறித் தந்தை அடிகளார் காப்பியம், ப.439.

28. திருவள்ளுவர், திருக்குறள், அதி:24 குறள்: 236.

29. மி. நோயல், மரு.பரமகுரு, அடிகளார் ஓர் உறவுப்பாலம், ப.155.

30. சன்மார்க்க தேசிகர் ஊரன் அடிகள், சைவ ஆதீனங்கள், ப.517.

31. கவிஞர் குன்றக்குடி கதிரவன், அருள்நெறித்தந்தை அடிகளார் காப்பியம், ப.66.

32. சோமலெ, செட்டிநாடும் தமிழும், ப.82.

33. கவிஞர் குன்றக்குடி கதிரவன், அருள்நெறித்தந்தை அடிகளார் காப்பியம், ப.80.

34. தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், சமய வாழ்வு, பக்.3-4.

35. மேலது, ப.9.

36. தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், சமய வாழ்வு, பக்.82-83.

37. தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார், காற்றில் வந்த கருத்து மழை, ப.18.

38. மேலது, ப.41.

39. தினமலர், மார்ச் 16, 2000.

40. முகவை முரசு, மார்ச் 31, ஏப்ரல் 6, 2000, ப.10.

# முடிவுரை

தமிழின் வளர்ச்சிக்குக் காலந்தோறும் தனிமனிதர்கள், இயக்கங்கள், மடங்கள் எனப் பல வகைகளில் தொண்டாற்றியுள்ளனர்.

மன்னர்கள் அரண்மனைகளில் வளர்த்த தமிழைப் பின்னால் மடங்கள் வளர்த்துவரலாயின.

'சமயம்தோறும் வளர்ந்த தமிழ்' எனத் தமிழைச் சிறப்பிப்பர். சைவ, வைணவ, இசுலாமிய, கிருத்துவ, பௌத்த சமயங்கள் எனச்சமயங்கள் பல தமிழின் வாழ்வுக்கும், வளர்ச்சிக்கும் தொண்டாற்றியுள்ளன.

தமிழகத்தில் சிறப்பு வாய்ந்த சைவ ஆதீனங்கள் பதினெட்டில் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதினமும் ஒன்றாகும்.

திருவண்ணாமலையின் கிளை மடமாகப் பிரான்மலையில் அமைந்த இவ்வாதீனத்தை 31-ஆம் பட்டம் மருதநாயக தேசிக குருமூர்த்தி காலத்தில் குன்றக்குடியில் அமைத்தனர்.

சைவ சமயத்தில் ஆதி சைவ மரபில் இம்மடம் தொன்றுதொட்டு விளங்கிவருகிறது.

குன்று இருக்குமிடமெல்லாம் குமரன் இருக்குமிடம் என்பதிற்கேற்ப இக்குன்றக்குடியில் சண்முகநாதர் குன்றின் மேல் வீற்றிருந்து அருள்பாளிக்கின்றார்.

மருது சகோதரர்கள் இக்குன்றக்குடி திருத்தலத்திற்குத் திருப்பணிகள் செய்துள்ளனர்.

இயற்கைவளம் சூழ்ந்த இவ்வூர் என்றும் குன்றாத வளத்தையுடைய குடிகள் பல வாழும் ஊராகத் திகழ்கிறது. குன்றக்குடி மதுக்கடைகள் இல்லாத ஊர் என்ற பெருமையை இம்மடத்தின் வழி பெற்றுள்ளது.

முன்னாள் பாரதப் பிரதமர் இந்திரா காந்தி அவர்கள் இக்குன்றக்குடியை இந்தியாவின் மாதிரிக் கிராமமாக அறிவித்தது இவ்வூரின் தனிச்சிறப்பாகும்.

இத்திருமடத்தில் இதுகாறும் நாற்பத்தைந்து குருமகா சன்னிதானங்கள் இருந்து ஆன்மீக, சமூக, இலக்கியப் பணிகள் ஆற்றியுள்ளனர்.

தற்பொழுது 46ஆவது குருமகா சன்னிதானமாகத் தவத்திரு பொன்னம்பல அடிகளார் சுவாமிகள் இம்மடத்தைச் சீரும் சிறப்புமாக நிருவகித்து வருகிறார்.

இம்மடத்தில் இதுவரை நாற்பத்தியாறு மடாதிபதிகள் இருந்தபோதிலும் குன்றக்குடி அடிகளார் என்ற உடனேயே அனைவரின் நினைவில் வருபவர் 45-வது குருமகா சன்னிதானம் தவத்திரு அடிகளார் ஆவர்.

இவர் சமயம், சமூகம், கல்வி, அரசியல் என்று பல தளங்களில் மடத்தின் வழி முத்திரை பதித்தவர்.

சொற்பொழிவுகளிலும், பட்டிமன்றத்திலும், சமூக சேவையிலும் தனக்கெனத் தனித்தன்மையினை உருவாக்கியவர்.

உலகின் பல்வேறு நாடுகளுக்குச் சென்று சைவ சமயம், தமிழ்மொழி, தமிழ்ப் பண்பாடு, இந்தியாவின் கலாச்சாரம், பெருமைகள் போன்றவற்றைப் பரப்பி உலகறியச் செய்தவர்.

மண்டைக்காடு, மீனாட்சிபுரம், புளியங்குடி, கன்னியாகுமரி, திண்டுக்கல் முதலிய இடங்களில் மதக்கலவரங்கள் நிகழ்ந்த பொழுதெல்லாம் அங்கு நேரிடையாகச் சென்று சந்து செய்து, நாட்டில் அமைதியை ஏற்படுத்தியவர்.

இத்திருமடத்தின் சார்பாக நூல்கள் பல வெளிவந்துள்ளன. இதில் தவத்திரு அடிகளார் அவர்கள் 56 நூல்களை வெளியிட்டுள்ளார். பின் அவர்களின் நூல்கள் 16 தொகுதிகளாக வெளிவந்துள்ளமை சிறப்பிற்குரியதாகும்.

ஆதீன அடியார்களில் குமரசாமி முனிவர் ஆதீனக் குருமுதல்வரைப போற்றிப் பாடிய ஞானவந்தாதி, தெய்வசிகாமணி நான்மணிமாலை, சிற்குருமாலை முதலிய நூல்கள் ஆதீனத்தால் தொடர்ந்து வெளியிடப்பட்டு வருகிறது.

அடிகளார் அவர்கள் அரிய நூல்கள் பலவற்றிற்கு உரை எழுதியுள்ளார்.

தமிழகச் சட்டப்பேரவை மேலவை உறுப்பினராக இருந்து அரசியலிலும் முத்திரை பதித்தவர்.

அருளோசை, செய்திக்கதிர், மணிமொழி, தமிழகம் போன்ற இதழ்கள் தமிழ்நாடு தெய்வீகப் பேரவையின் சார்பாகவும், மக்கள் சிந்தனை, அறிக அறிவியல் போன்ற இதழ்கள் மடத்தின் சார்பாகவும் வெளிவருகின்றன.

பக்தித் தமிழ், இலக்கியத் தமிழ், மேடைத் தமிழ், அறிவியல் தமிழ் எனப் பல நிலைகளில் தமிழை இம்மடம் இன்றளவும் வளர்த்து வருகிறது.

யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதைய்யர், மகாவித்துவான் தண்டபாணி தேசிகர், பண்டிதமணி கதிரேசன் செட்டியார், கழகப் புலவர் ப.ராமநாதபிள்ளை, கா.வெள்ளைவாரணர், மகாவித்துவான் சி.அருணை வடிவேல் முதலியார், கி.சி.கந்தசாமிப் பிள்ளை, பெரும்புலவர் நடேச முதலியார், கி.வா.ஜகந்நாதன், பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் முதலிய நூற்றுக்கணக்கான பெரும் புலவர்கள் குன்றக்குடி திருமடத்திற்கு வருகை தந்து சிறப்பித்துள்ளார்கள்.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் 'தனது நூலகமும்' இப்போதுள்ள மகாசந்நிதானம் அவர்களின் 'தனது நூலகமும்' அறிவுக் கோவிலாக அமைந்துள்ளன.

இத்திருமடம் ஒரு முதல்தரக் கல்லூரியும், இரண்டு மேல்நிலைப்பள்ளிகளும், நான்கு உயர்நிலைப்பள்ளிகளும், நான்கு நடுநிலைப்பள்ளிகளும், மூன்று தொடக்கப்பள்ளிகளும், இரண்டு பாலர் பள்ளிகளும் அருள்நெறி மன்றத்தின் மூலம் உருவாக்கி 16 கல்வி நிலையங்களை நடத்தி வருகிறது.

தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் முயற்சியால் உருவாக்கப்பட்ட குன்றக்குடி கிராம திட்டக்குழு மூலம் பல தொழிற்சாலைகள் தொடங்கப் பெற்று குன்றக்குடி மற்றும் அதன் சுற்றுவட்டார சிற்றூர் மக்களுக்கு வேலை வாய்ப்பினை நல்கி 'வறுமையற்ற மக்கள் வாழும் பகுதி' எனும் பெருமையை ஏற்படுத்தியுள்ளது.

தற்போதைய அடிகளார் மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகளுக்கும் தமிழ்நாட்டின் பல நகரங்கள் மற்றும் சிற்றூர்களுக்கும் சென்று மேடைகளின் வழியாக மக்களுக்கு நற்சிந்தனைகளை வழங்கி சீரான சமூக வளர்ச்சிக்கு வழிகாட்டி வருகின்றனர்.

46ஆவது குருமகா சந்நிதானம் தவத்திரு பொன்னம்பல அடிகளார் தனது குருநாதர் குன்றக்குடி அடிகளாரின் அடியொற்றி இத்திருமடத்தை மிகச் சீரிய முறையில் நிருவகித்து வருகிறார்.

ஆன்மீக மேடைகள், பட்டிமன்றம், இலக்கிய மன்றங்கள், அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் போன்றவைகளில் தனது குருநாதரைப் பின்பற்றி முத்திரை பதித்துவருகிறார்.

மக்கள் சிந்தனை, அறிக அறிவியல் போன்ற இதழ்களின் வழி சிறந்த கட்டுரைகளை வழங்கியுள்ளார்.

இதுவரை இரண்டு நூல்களை உருவாக்கியுள்ளார். அண்மையில் மலேசியா, சிங்கப்பூர் நாடுகளுக்குச் சென்று ஆன்மீகத்தையும், தமிழையும் பரப்பி வந்துள்ளார்.

2004-டிசம்பர் 26-இல் ஏற்பட்ட ஆழிப்பேரலை எனும் சுனாமியால் பாதிக்கப்பட்ட நாகப்பட்டிணம் பகுதிக்குத் தனது தொண்டர்களுடன் சென்று அவர் ஆற்றிய சமூகத் தொண்டு, செய்த உதவிகள் அளப்பெரியன.

அழகப்பா பல்கலைக்கழகம், பிள்ளையார்பட்டி திருக்கோயில் நிருவாகம் இரண்டுடன் இணைந்து இத்திருமடம் நடத்திய திருக்கோயில் கருத்தரங்கம் குறிப்பிடத்தக்கதாகும்.

இக்கருத்தரங்கில் தேவார, திருவாசக, சிற்ப, இசை வல்லார் பலர் கலந்து கொண்டு கட்டுரைகள் அளித்தனர். அவைகள் நூலாக்கம் பெற்று வெளிவந்துள்ளன.

தமிழகத்தில் பல பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள், பள்ளிகளுக்குச் சென்று தவத்திரு பொன்னம்பல அடிகளார் ஆற்றிவரும் ஆன்மீக, இலக்கிய, சமூகச் சொற்பொழிவுகள் இன்றைய இளந்தலைமுறையினரின் நல்வாழ்க்கைக்கு வழிகாட்டுவனவாகும்.

திருக்கோயில்கள் பலவற்றிற்குத் திருப்பணிகள் செய்தும், திருமுறை விழா, திருவள்ளுவர் விழா, திருஞானசம்பந்தர் விழா, பாரி விழா, ஏர்முனை விழா, விசாகவிழா, தைப்பூசவிழா, கந்தசஷ்டி விழா, பிட்டுத் திருவிழா எனப் பல விழாக்களை ஆண்டுதோறும் இத்திருமடம் நிகழ்த்தியும் வருகிறது.

ஆதீனக் குருமுதல்வர் விழா ஆண்டுதோறும் தனித்தன்மையுடன் சிறப்பாக நிகழ்த்தப்படுகிறது.

தமிழ்ச் சான்றோர்கள், புலவர்கள் பலரை ஆதரித்த இத்திருமடம் தற்பொழுதும் தொடர்ந்து தமிழ்ச் சான்றோர்களையும் அறிஞர் பெருமக்களையும் அழைத்து மாதந்தோறும் 'சிந்தனை நந்தவனம்' எனும் அமைப்பின் மூலம் சொற்பெருக்காற்றச் செய்து தமிழை வளர்த்து வருகின்றார்.

அருள்நெறித் திருக்கூட்டம், அருள்நெறித் திருப்பணி மன்றம், திருக்குறள் பேரவை, திருவருள் பேரவை போன்ற சிறந்த அமைப்புகளை உருவாக்கி சமூக ஆர்வலர்களையும், தொண்டர்களையும் இணைத்துத் தமிழ்த் திருக்கோயில்கள் பராமரிப்பும், சமயப்பணிகளும், சாதி, சமய நல்லிணக்கப் பணிகளும் செய்துவரும் இம்மடத்தின் பணி போற்றத்தக்கதாகும்.

திருக்கோயில்களில் தமிழில் அர்ச்சனை, தேவாரம், திருவாசகம் ஓதுதல் போன்ற தமிழ்க் கலாச்சாரப் பணிகளையும் இம்மடம் மேற்கொண்டுள்ளது.

பல ஊர்களில் நீர்நிலைகளை அமைத்தும், குளங்களைச் சுத்தப்படுத்தியும், நிலத்தடி நீர் பாதுகாப்பிற்கும் இம்மடம் பணியாற்றுகின்றது.

இயற்கையில் ஈடுபாடு கொண்ட இத்திருமடம் தோட்டம், பழப்பண்ணைகளை வைத்தும் நல்ல மரங்களை நட்டு வளர்த்தும் பசுமைப் புரட்சியையும் செய்கிறது.

இத்திருமடம் ஆன்மீகம், கல்வி, சமயப்பணிகளைச் செய்தும், சாதி, தீண்டாமை, மது ஒழிப்பு போன்றவற்றில் ஈடுபட்டும் ஆன்மீகத்திற்கும், கல்விக்கும், சமூகத்திற்கும் தொண்டாற்றி வருகின்றது.

இத்திருமடம் சிறந்த தமிழ் அறிஞர்களுக்கு முதுபெரும்புலவர், ஞானத் தமிழாகரர், தமிழாகரர், செந்தமிழ்த் திலகம், கவிஞர்கோ, ஏழிசைத்

தலைமகன், திருத்தொண்டர், பண்ணிசையரசு, பண்ணிசைக்கோ, பண்ணிசைமணி, திருமுறைச் செல்வர், சிற்பக்கலையரசர், சிற்பக்கலைவாரி, கவியரசர், அருங்கலைக்கோன், நூலறிபுலவர், நற்கதைநம்பி, நடிகர்திலகம், இசைவேள், எழுத்து வேந்தன், கணக்காயர், தலைக்கோளாசான், தலைக்கோளறிவை போன்ற பட்டங்கள் வழங்கியும், பாராட்டியும் ஊக்கப்படுத்தியும், தமிழ் ஆர்வலர்கள் மூலம் தமிழின் வளர்ச்சிக்குத் தொண்டாற்றுகின்றது.

# துணைநூற்பட்டியல்


1. அதிவீரராம பாண்டியன் - நறுந்தொகை,
மூன்றாம் வகுப்புத்தமிழ்ப்பாடம்,
தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்,
கல்லூரிச் சாலை,
சென்னை-6.
மறுபதிப்பு -2005.

2. அருணாச்சலம், மு., - தமிழ் இலக்கிய வரலாறு,
தமிழ்ப் புலவர் வரலாறு,
பதினாறாம் நூற்றாண்டு,
மூன்றாம் பாகம்,
காந்தி வித்தியாலயம்,
திருச்சிற்றம்பலம்,
மாயூரம்.
1976.

3. இராசகோபாலன். நா., - தமிழ் ஆட்சி மொழிச்
சிக்கல்களும், தீர்வுகளும்,
அன்புப் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர், 1994.

4. ஈழத்து அடிகள் - பெரியபுராண ஆராய்ச்சி,
விடுதலை ஆப்செட் பிரிண்டர்ஸ்
சர்பத்து சாலை, சென்னை.
மூன்றாம் பதிப்பு,
பிப்ரவரி, 1993.

5. கணேசன் - இந்து மதமும் மனித வாழ்க்கையும், வானதி பதிப்பகம், தி.நகர், சென்னை, மூன்றாம் பதிப்பு, டிசம்பர் 2002.

6. கலியாணசுந்தரனார்.திரு.வி., - திருத்தொண்டர் புராணம் பெரியபுராண அரும்பதவுரை, சேக்கிழார் ஆராய்ச்சி மையம், 154, டி.டி.கே.சாலை, சென்னை- 600 018. பதிப்பு - 1993.

7. கைலாசபதி. க., - பண்டைத் தமிழர் வாழ்வும், வழிபாடும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1999.

8. குமரகுருபரர் - நீதிநெறி விளக்கம், ஐந்தாம் வகுப்புத்தமிழ்ப்பாடம், தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம், கல்லூரிச் சாலை, சென்னை-6. மறுபதிப்பு -2005.

9. குமாரசாமித் தம்பிரான் - ஸ்ரீதெய்வசிகாமணி நான்மணிமாலை, குறிப்புரை-வித்துவான் க.கதிரேசன், வெளியீடு: சிவநெறிப்புலவர், சிவத்திரு.ப.மூக்கப்பிள்ளை, 61, நடுத்தெரு, வரகனேரி, திருச்சிராப்பள்ளி - 8.

10. குமாரசாமித் தம்பிரான் - சிற்குருமாலை, உரைவிளக்கம், வித்துவான் க.கதிரேசன் எம்.ஏ.,பி.எட்., வெளியீடு: சைவத்திரு அ.மகாலிங்கம், எம்.ஏ., பி.டி., அம்மன்பேட்டை - 613 205.

11. குன்றக்குடி கதிரவன் - அருள்நெறித்தந்தை அடிகளார் காப்பியம், வெளியீடு: தவத்திரு குன்றக்குடி அடிகளார் அறக்கட்டளை, குன்றக்குடி. பதிப்பு-பிப்ரவரி - 2000.

12. குன்றக்குடி அடிகளார் - மண்ணும் மனிதர்களும், வெளியீடு: திருமாறன் நிலையம், 7/8, பீட்டர்ஸ் காலனி, இராயப்பேட்டை, சென்னை. முதற்பதிப்பு மே,1996.

13. மேலது - நம்மை மேம்படுத்தும்
எண்ணங்கள்,
தொ.ஆ.வன்மீக வெங்கடாசலம்,
பதி.பாரதி பதிப்பகம்,
128, உஸ்மான் சாலை,
தி.நகர், சென்னை 600 017.

14. மேலது - அடிகளார் அருள் மொழி ஐநூறு,
தொகுப்பு: குன்றக்குடி பெரிய
பெருமாள்,
பதிப்பு: வானதி பதிப்பகம்,
13, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை-12.
பதிப்பு. அக்டோபர்-1991.

15. மேலது - குறள் நூறு,
தெய்வத்திரு குன்றக்குடி
அடிகளார் அவர்களின்
மணிவிழா வெளியீடு,
அச்சிட்டோர்: விநாயகர் அச்சகம்,
மதுரை - 10.
முதற்பதிப்பு 1985.

16. மேலது - திருக்குறள் உரை,
அருள்நெறிப் பதிப்பகம்,
குன்றக்குடி - 630 203.
முதற்பதிப்பு ஆகஸ்டு 2005.

17. மேலது - குன்றக்குடி அடிகளார்
நூல் வரிசை, (திருக்குறள்)
மணிவாசகர் பதிப்பகம்,
8/7, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை - 108.
முதற்பதிப்பு டிசம்பர்,1999.

18. மேலது - திருவாசகத் தேன்,
வானதி பதிப்பகம்,
தி.நகர், சென்னை - 17.
முதற்பதிப்பு டிசம்பர் 1995.

19. மேலது - குன்றக்குடி அடிகளார்
நூல் வரிசை,
திருக்குறள் தொகுதி (2)
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு செப்டம்பர்,2000.

20. மேலது - குன்றக்குடி அடிகளார்
நூல் வரிசை,
சமயம்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
டிசம்பர் - 2001.

21. மேலது - குன்றக்குடி அடிகளார்
நூல் வரிசை,
இலக்கியம்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
டிசம்பர் - 2001.

22. குமரி அனந்தன் - சிந்தனைப் பண்ணையில் பாரதிதாசன், வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு மார்ச், 1995.

23. சாரதா நம்பி ஆருரன் - தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், சேக்கிழார் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, ஆகஸ்டு, 1994.

24. சீனிவாசன் - ஜீவாவின் தமிழ்ப்பணிகள், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, முதற்பதிப்பு, பிப்ரவரி, 1988.

25. சுந்தர் - அருள் நெறித்தந்தை அடிகளார், உஸ்மான் சாலை, தியாகராய நகர், சென்னை - 17. முதற்பதிப்பு ஜூன், 1987.

26. சுப்பிரமணியன் பிள்ளை, கா., - இலக்கிய வரலாறு, (இரண்டாம் பாகம்) ஆசிரியர் நூற்பதிப்புக்கழகம், 53, 56, பவழக்காரர் தெரு, சென்னை, நான்காம் பதிப்பு, 1953.

27. சுப்புரெட்டியார், ந. - சைவமும் தமிழும்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
522, டி.டி.கே.சாலை,
சென்னை- 600 018.
முதற்பதிப்பு, 2001.

28. சோமலெ - வளரும் தமிழ்,
வானதி பதிப்பகம்,
ந.தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை-17.
முதற்பதிப்பு ஏப்ரல், 1988.

29. மேலது - செட்டி நாடும் தமிழும்,
பாரி நிலையம்,
59, பிராட்வே, சென்னை.
முதற்பதிப்பு, டிசம்பர், 1954.

30. மேலது - செட்டிநாடும் செந்தமிழும்,
வானதி பதிப்பகம்,
தி.நகர், சென்னை.
இரண்டாம் பதிப்பு, 1999.

31. ஞானசம்பந்தன், அ.ச., - சேக்கிழார் தந்த செல்வம்,
கங்கைப் புத்தக நிலையம்,
தி.நகர், சென்னை.
இரண்டாம் பதிப்பு மார்ச்,1999.

32. மேலது, - திருவாசகம் சில சிந்தனைகள்,
கங்கை புத்தக நிலையம்,
13, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை-17.
முதற்பதிப்பு, டிசம்பர் 1999.

33. தமிழண்ணல் - தமிழ் இலக்கிய வரலாறு,
மீனாட்சி புத்தக நிலையம்,
60, மேலக் கோபுரத் தெரு,
மதுரை.
முதற்பதிப்பு 1980.

34. தமிழ்வாணன், லேனா., - தமிழைத் தேடி ஒரு பயணம்,
மணிமேகலை பிரசுரம்,
தி.நகர், சென்னை.
முதற்பதிப்பு ஆகஸ்டு 1997.

35. தண்டபாணி தேசிகர் - திருக்குறள் உரைக் களஞ்சியம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு 1986.

36. தண்டாயுதம், இரா., - சமய இலக்கிய விளக்கம்,
தமிழ்ப் புத்தகாலயம்,
58, டி.பி.கோயில் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5
முதற்பதிப்பு, ஜூலை 1992.

37. திருநாவுக்கரசு சுவாமிகள் - திருநாவுக்கரசு சுவாமிகள்,
தேவாரம், சைவசித்தாந்த மகா
சமாஜம்,
1935.

38. திருவள்ளுவர் - திருக்குறள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை.
டிசம்பர், 1988.

39. நாராயணசாமி அய்யர் - சாணக்கிய தந்திரம்,
சுந்தர மீனாஷியந்திர சாலை,
ஆண்டு 1887.

40. நாராயண வேலுப்பிள்ளை - சைவத் திருமுறைகளும்,
சித்தாந்த சாத்திரங்களும்,
முல்லை நிலையம்,
சென்னை - 19.
முதற்பதிப்பு டிசம்பர், 1998.

41. நிர்மலா மோகன், கி.வா., - ஜகந்நாதன்,
சாகித்திய அகாதமி,
முதல் வெளியீடு, 1998.

42. பரமகுரு, மரு., (திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி) நோயல். மீ., (மத்திய மின்வேதியல் ஆய்வுக்கூடம்) - அடிகளார் ஓர் உறவுப்பாலம்,
வானதி பதிப்பகம்,
ந.தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை-17.
முதற்பதிப்பு மே, 1996.

43. பரமகுரு, மரு., - பறம்புமலைத்
திருக்கொடுங்குன்றம்,
மணிவாசகர் பதிப்பகம்,
55, லிங்கித் தெரு,சென்னை - 1.
முதற்பதிப்பு ஏப்ரல் 13, 1992.

44. மேலது - குன்றக்குடி தலவரலாறு
அருள்தரு சண்முகநாத
திருக்கோயில், குன்றக்குடி.
மூன்றாம் பதிப்பு 1.6.1995.

45. மேலது - குன்றக்குடி முருகன் தமிழ்மாலை,
வெளியீடு: சண்முகநாதன்
திருக்கோயில், குன்றக்குடி.
முதற்பதிப்பு பிப்ரவரி, 2000.

46. மேலது - தியாக தீபம் தேவவரதன்,
வெளியீடு: திருமாறன் நிலையம்,
7/8, பீட்டர்ஸ் காலனி,
இராயப்பேட்டை, சென்னை.
முதற்பதிப்பு, டிசம்பர் 2000.

47. பரமேஸ்வரன், பி.ஆர் - இந்தியாவும் இந்து மதமும்,
தமிழ்ப் புத்தகாலயம்,
பாண்டி பசார், தி.நகர், சென்னை,
இரண்டாம் பதிப்பு ஆகஸ்ட், 1998.

48. பாலசுப்பிரமணியன், எம்.கே - சமய இலக்கியச் சிந்தனைகள்,
திருவரசு புத்தக நிலையம்,
சென்னை,
முதற்பதிப்பு 1997.

49. பாலசுப்பிரமணியன். சி., - தமிழ் இலக்கிய வரலாறு,
தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை,
முதற்பதிப்பு 1959.

50. பாரதியார் - பாரதியார் கவிதைகள்,
நர்மதா பதிப்பகம்,
தி.நகர், சென்னை.
ஐந்தாம் பதிப்பு, 2003.

51. பாரதிதாசன் - பாரதிதாசன் கவிதைகள்,
பாண்டியன் புக் டிப்போ,
புதுமண்டபம், மதுரை.

52. பிச்சுவையரவர்கள் - மயூரகிரி என்னும் குன்றக்குடி
சண்முகநாருலா,
குமரன்பவர் அச்சுக்கூடம்,
காரைக்குடி.
1938.

53. பொன்னீலன் - தவத்திரு குன்றக்குடி அடிகளார்,
தமிழகத்தின் ஆன்மீக
வழிகாட்டி,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,
பிராட்வே லிமிடெட்,
41, பி.சிட்கோ இண்டஸ்டிரியல்
எஸ்டேட், சென்னை.
மூன்றாம் பதிப்பு, ஜூன் 2003.

54. பொன்னம்பல அடிகளார் - சமய வாழ்வு,
திருமாறன் நிலையம்,
7/8, பீட்டர்ஸ் காலனி,
இராயப்பேட்டை,
சென்னை.
முதற்பதிப்பு டிசம்பர் 1999.

55. மேலது - காற்றில் வந்த கருத்து மழை,
திருமாறன் நிலையம்,
7/8, பீட்டர்ஸ் காலனி,
இராயப்பேட்டை,
சென்னை - 600 014.
முதற்பதிப்பு டிசம்பர் 2005.

56. மயில்வாகனன், சிதம்பரம்., - பெரியபுராணம் சமூகப் பார்வை,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்,
முதற்பதிப்பு, 2001.

57. மோகன், இரா., - திரு.வி.க.அல்லது வாழ்க்கை
விளக்கம்,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்.
முதற்பதிப்பு 1986.

58. இராசகோபாலன், நா., - தமிழ் ஆட்சி மொழி
சிக்கல்களும் தீர்வுகளும்,
அன்புப் பதிப்பகம்,

59. ராதா தியாகராஜன் - சைவமும், தமிழும்
வானதி பதிப்பகம்,
தி.நகர், சென்னை-17.
முதற்பதிப்பு, டிசம்பர் 1992.

60. விமலானந்தம், மது.ச., - தமிழ் இலக்கிய வரலாறு,
மீனாட்சி புத்தக நிலையம்,
60, மேலக் கோபுரத் தெரு,
மதுரை - 1.

61. வீரமணி. பா., -பட்டுக்கோட்டையாரின் பாட்டுத்திறம், ஒரு சமூகப் பார்வை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், அம்பத்தூர், சென்னை. முதற்பதிப்பு ஜூலை 1997.

62. வெள்ளைவாரணர், க. - சைவ சித்தாந்த சாத்திர வரலாறு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். முதற்பதிப்பு 2002.

63. வேணு, எஸ்., - பெரியார் ஒரு சரித்திரம், பூம்புகார் பதிப்பகம், பிராட்வே, சென்னை. முதற்பதிப்பு ஜனவரி, 1990.

64. வித்துவான் வைத்தியநாதன்,எஸ்., (பதிப்பாசிரியர்) - பிற்காலப் புலவர்கள், டாக்டர் உ.வே.சா.நூல்நிலையம், பதிப்பு; 1986.

65. திருக்குறள் உரைக்களஞ்சியம் - மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மு.ப.1986.

## இதழ்கள்

1. தமிழ் மகள் - ஆதி அருள்நெறி மன்றம், கனடா.

2. தினமலர் - மார்ச் 16, 2000,

3. சிகரம் - மனித மேம்பாட்டு அறிவியல் அமைப்பின் வெளியீடு, செப்டம்பர், அக்டோபர் 1999.

4. மக்கள் சிந்தனை - நிறுவனர் தவத்திரு குன்றக்குடி அடிகளார், சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

5. முகவை முரசு - மார்ச் 31, ஏப்ரல் 6, 2000.

6. குருபூசை மலர் - குருபூசை நாள் 2.05.1996. ஸ்ரீவெங்கடேஷ்கலா பிரிண்டோ கிராப், மதுரை. சுதாஸ் பிரிண்டோன், சிவகாசி, ஸ்ரீசண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

8. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி.10). - தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். முதற்பதிப்பு, அக்டோபர் 1988.

## ஆய்வேடுகள்

1. வேலாயுத உடையார் முத்து இலக்குமி - பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள், முனைவர் பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

2. லெட்சுமி, ந., - பெரியாரின் சிந்தனையில் பெண்கள், (எம்.ஃபில்)

# குன்றக்குடி ஆதினத் தமிழ்ப்பணி-முனைவர் பட்ட ஆய்வு

வினா நிரல்

**பேட்டியாளர்**
**திருமதி.சற்குணம்**
**ஆய்வாளர் (பகுதி நேரம்)**
**தமிழ்த்துறை,**
**அழகப்பா பல்கலைக்கழகம்**
**காரைக்குடி-3**

**பேட்டி கொடுத்தவர்**
**தவத்திரு பொன்னம்பல அடிகளார்**
**குன்றக்குடி ஆதீனம்**
**குன்றக்குடி.**
**சிவகங்கை மாவட்டம்.**

**வணக்கம்.**

1. ஆதினத் திருமடம் எப்பொழுது தோற்றுவிக்கப்பட்டது?

700 ஆண்டுகளுக்கு முன்பு தோற்றுவிக்கப்பட்டது.

2. முதலில் தோற்றுவித்தது யார்? எந்த ஆண்டு?

திருவருள் திரு. தெய்வசிகாமணி தேசிக பரமாச்சாரிய சுவாமிகள். 700 ஆண்டுகளுக்கு முன்பு தோற்றுவிக்கப்பட்டது.

3. திருமடத்தின் பெயர் என்ன? ஏதேனும் மாற்றம் உண்டா? முதல் குருமகா சந்நிதானம் யார்?

திருவண்ணாமலை ஆதீனத் திருமடம். பின் பிரான்மலையை தலைமை இடமாகக் கொண்டு திருமடம் செயல்பட்டது. அதற்குப்பின் குன்றக்குடியில் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் என மாற்றம் பெற்றது. திருவருள் திரு.தெய்வசிகாமணி தேசிகர் முதல் குருமகா சந்நிதானம் ஆவர்.

4. மூல திருமடமா?

திருமடமே மூலம்.

5. அமைவிடமாக குன்றக்குடி தேர்வு செய்யப்பட்டதற்கு ஏதேனும் சிறப்புக் காரணங்கள் உண்டா?

மருது சகோதரர்களின் வேண்டுகோளுக்கு ஏற்பவும், சுற்றியுள்ள ஊர்களுக்கு வந்து, செல்வதற்கேற்ற இடமாக இருப்பதாலும் குன்றக்குடி அமைவிடமாக ஏற்படுத்தப்பட்டது.

6. இதுவரை எத்தனை குருமகா சந்நிதானங்கள் இருந்துள்ளனர்?

இதுவரை 45 குருமகா சந்நிதானங்கள் இருந்துள்ளனர்.

7. திருமடம் தோற்றுவிப்பதற்கு நோக்கங்கள் என்ன?

சைவசித்தாந்தத்தை பரப்புதல் தலையாய நோக்கம். சமயப்பணிகளோடு சமுதாயப்பணி செய்து வருவதும் நோக்கமாகும்.

8. இடையில் மாற்றமோ அல்லது புது நோக்கங்கள் ஏதேனும் உண்டா?

மடமாக இருந்து தற்போது மடமாகவும், நிறுவனமாகவும் மாறியது. மக்களுக்குத் தேவையான பணிகளைக் காலத்துக்கேற்றார் போல் செயல்படுத்தப்பட்டு வருகிறது.

9. திருமடத்தின் பணிகள் என்னென்ன?

1. சமயக் கொள்கைகளை இயக்கமாக அமைத்துச் சுதந்திரமாகச் செயல்படுத்திப் பரப்புதல்.
2. நிறுவனங்களை நிருவகித்தல்
3. நிலங்களைப் பராமரித்து நிருவகித்தல்
4. கல்விச்சாலைகளை அமைத்துச் சிறப்புற நடத்தி வருதல்.
5. சிறுதொழில் நிறுவனங்கள் நடத்துதல்
6. மகளிர் கல்வி மேம்பாடு
7. தீண்டாமை ஒழிப்புப் பணிகள்

10. திருமடத்தின் தொண்டுகள் பற்றிய விவரம்?

கிராம வளர்ச்சிப் பணிகள் (கிராமதிட்டக்குழு உருவாக்கிச் செயற்படுத்துதல்)

மகளிர் கல்வி

மகளிர் மேம்பாடு

வறுமையாளர்களுக்கு நிதியுதவி, அன்னதான உதவி, கடனுதவி.

11. மடத்தின் மூலம் நிகழ்ந்த, நிகழும் சமூகப்பணிகள் என்னென்ன, அவற்றுள் இன்றியமையாதவைகள் எவை?

கிராம வளர்ச்சிப் பணிகள், கல்விப்பணி, தீண்டாமை ஒழிப்புப் பணி, மகளிர் மேம்பாட்டுப் பணி, தொழிற் பயிற்சிப் பணி போன்ற சமூகப்பணிகள் நிகழ்கின்றன.

12. எத்தனை படைப்புகள் (இலக்கியங்கள்) மடத்தின் வழி வந்துள்ளன?

1. ஞானப்பிரகாச முனிவர் - சிவஞான சித்தியார் சுபக்க உரை.
2. ஆறுமுகத்தம்பிரான் - பெரியபுராண உரை
3. குமரசுவாமி முனிவர் - ஞானவந்தாதி, தெய்வசிகாமணி நான்மணிமாலை, சிற்குருமாலை
4. சிலேடைப்புலி வேம்பத்தூர் பிச்சு அய்யர் - சண்முகநாதருலா
5. வீரபத்திரக் கவிராயர் - குன்றக்குடிக் குறவஞ்சி

13. நிகழ்ந்த, நிகழும் ஆன்மீகப் பணிகள் என்னென்ன?

பிரான்மலை, சதுர்வேதிமங்கலம், திருப்புத்தூர், திருக்கோளக்குடி, குன்றக்குடி போன்ற ஐந்து திருக்கோயில் பணிகளைச் செய்து வருதல், பிராத்தனைக் கூட்டங்கள் நடத்துதல், சமயச் சான்றோர்களைக் கொண்டு ஆன்மீகச் சொற்பொழிவுகள், கருத்தரங்குகள் நடத்துதல்.

14. எந்தக் குருமகா சந்நிதானம் காலத்தில் அதிகமான இலக்கியங்கள் வெளிவந்தன?

45-ஆவது குருமகா சந்நிதானம் திருவருள் திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) காலத்தில் அதிகமான இலக்கியங்கள் வெளிவந்துள்ளன.

15. எதிர்காலத் திட்டங்கள் உண்டா?

இருக்கின்ற திட்டங்களோடு இன்னும் வலுவான திட்டங்களை ஏற்படுத்துதல், பினாயில் தொழிற்சாலை ஏற்படுத்துதல், வேலை வாய்ப்பை ஏற்படுத்துதல், பெண்களுக்கான கயிறு திரித்தல் தொழிற்சாலை ஏற்படுத்துதல்.

16. திருமடத்தில் புலவர்கள் இருந்தனரா? எவ்வப்பொழுது யார்? யார்? அவர்களது இலக்கியப் படைப்பு விவரம்?

அப்பா பிள்ளை - உ.வே.சா அவர்களுக்கு மணிமேகலை, சிலப்பதிகார ஏட்டுப்பிரதிகள் உதவியர்.

மரு.பரமகுரு - குன்றக்குடி திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலை, ஆதீன வரலாறு குன்றக்குடி, திருக்கோளக்குடி தேனாட்சியம்மன் தல வரலாறு, திருப்பாவை திருவெம்பாவை உரை, முருகன் பாமாலை, பரம்புமலை திருக்கொடுங்குன்றம்.

கதிரவன் - நெஞ்சு விடு தூது.

பெரியபெருமாள்- திருக்கோளக்குடி, ஆதீனங்கள், தமிழ்ப்புலவர்கள்.

கணேச பண்டிதர்- இளையாற்றங்குடி புராணம்.

17. திருமடத்தின் நிருவாகத்தின் கீழுள்ள ஆலயங்கள் எவ்வெவ் இடங்களில் உள்ளன? விவரம். அவ்வாலயங்களின் திருப்பணிகள்.

1. பிரான்மலைத்திருக்கோயில் - பிரான்மலை. இங்கு புதிதாக இராஜகோபுரம் அமைத்துத் திருக்குட நீராட்டுவிழா செய்துள்ளார்கள்.

2. சதுர்வேதிமங்கலம் திருக்கோயில் - சதுர்வேதிமங்கலம் இறைவிக்கு அடிக்கடி சந்தனக்காப்புச் செய்தல்.

3. திருப்புத்தூர் திருக்கோயில் - திருப்புத்தூர் புதிதாக இராஜகோபுரம் எடுக்கும் பணியும் திருக்குட நீராட்டு விழாவும் நடந்தது.

4. திருக்கோளக்குடி திருக்கோயில் - திருக்கோளக்குடி - இக்கோயிலுக்கு மின்விளக்கு வசதிகள், மதில்களைப் புதுப்பித்தல், திருக்குட நீராட்டு விழாவும் நடத்தப்பட்டது.

5. குன்றக்குடித் திருக்கோயில் - குன்றக்குடித் திருக்கோயிலைப் புதுப்பித்து, திருக்குட நீராட்டு விழா செய்யப்பட்டது.

18. திருமடத்தின் நிருவாகத்தின் கீழுள்ள கல்வி நிறுவனங்கள் விவரம்.

1. குன்றக்குடி - தெய்வசிகாமணி அருள்நெறித் தொடக்கப்பள்ளி
2. குன்றக்குடி - தருமைக்கயிலைக் குருமணி மேனிலைப்பள்ளி
3. குன்றக்குடி - அறிஞர் அண்ணா சிறுவர் பள்ளி
4. தேவகோட்டை - திருவள்ளுவர் அருள்நெறி நடுநிலைப்பள்ளி
5. பிரான்மலை - வள்ளல் பாரி உயர்நிலைப்பள்ளி
6. கொறுக்கை - திருவள்ளுவர் அருள்நெறி நடுநிலைப்பள்ளி
7. மலையான்குத்தகை - சரஸ்வதி தொடக்கப்பள்ளி
8. அம்மன்பேட்டை - அருள்நெறி உயர்நிலைப்பள்ளி
9. ஈரோடு - அருள்நெறித் திருப்பணி மன்றம் உயர்நிலைப்பள்ளி
10. களக்காடு - கோமதி அருள்நெறி மகளிர் உயர்நிலைப்பள்ளி
11. கள்ளி மந்தயம் - திருப்பதி அருள்நெறி மேனிலைப்பள்ளி
12. களக்காடு - பாலர் பள்ளி
13. நாங்குநேரி - அம்பேத்கார் தொடக்கப்பள்ளி
14. திருமலையப்பபுரம் - அருள்நெறி இந்து நடுநிலைப்பள்ளி
15. பொதிகையடி பாபநாசம் - திருவள்ளுவர் கல்லூரி
16. விசய அச்சம்பாடு - அருள்நெறி நடுநிலைப்பள்ளி

19. திருமடத்தின் நிருவாகத்தின் கீழுள்ள தொழிலகங்கள் என்னென்ன?

அ. குன்றக்குடியில் நிருவப் பெற்றுள்ள கூட்டுறவு நிறுவனங்கள்

(1977-க்கு முன்பு)

1. கூட்டுறவு விவசாய நாணயச் சங்கம்
2. வைகை அங்காடி
3. கூட்டுறவு கிராம வீடு கட்டும் சங்கம்
4. கூட்டுறவு தொழிலாளர் ஒப்பந்தச் சங்கம்
5. கூட்டுறவு பால் வழங்கும் சங்கம்
6. மருதுபாண்டியர் காதிகிராமத் தொழில் கூட்டுறவு சங்கம்
7. திருவண்ணாமலை ஆதீனம் தேவாலயம் சிப்பந்திகள் சிக்கன நாணயக் கூட்டுறவு சங்கம்
8. திருவள்ளுவர் மாணவர் கூட்டுறவு பண்டகசாலை
9. நல்வாழ்க்கைக் கூட்டுறவு சங்கம்
10. நேருஜி பாலிதீன் தொழிலாளர் தொழிற் கூட்டுறவு சங்கம்.

(1977-க்கு பின்பு)

ஆ. 1. குன்றக்குடி பாரதி தொழிற் கூட்டுறவு குளோரைட் தொழிற்சாலை
2. பெரியார் முந்திரி தொழிலாளர் தொழிற் கூட்டுறவு சங்கம்
3. பெரியார் முந்திரி ரெட் ஆக்சைடு பெயிண்ட் தொழிற்சாலை
4. குன்றக்குடி பசுமைப் பண்ணை
5. அறிஞர் அண்ணா லெட் ஆசிட் பாட்டரி தொழிற்சாலை.

20. திருமடத்தின் நிருவாகத்திலுள்ள ஏனைய நிறுவனங்கள்?

அரசு நிறுவனங்கள்

1. கால்நடை மருந்தகம்
2. திருவளர் சோலை, பழத்தோட்டம், நேமம்
3. அன்னை இந்திரா நேபாளித் தறிக்கூடம்
4. பட்டுப்புழு வளர்ப்பு மாதிரிப்பண்ணை
5. பனைநாற் பிரஷ் தொழிற்சாலை
6. தேசிய ஆராய்ச்சி

தனியார் நிறுவனங்கள்

1. சண்முகநாதன் அச்சகம்
2. பாலமுருகன் மெட்டல் ஒர்க்ஸ்
3. குன்றக்குடி எலக்ட்ரானிக்ஸ்

21. திருமடத்துடன் இணைந்து செயல்படும் நிறுவனங்கள் ஏதேனும் உண்டா? இருப்பின் விவரம், நோக்கங்கள்?

திருமடத்துடன் இணைந்து செயல்படும் பொது நிறுவனங்கள்,

1. அரிசன சேவா சங்கம்
2. திருக்குறள் பேரவை (கிளை)
3. அருள்நெறித்திருக் கூட்டம் (கிளை)
4. காமராசர் அருள்நெறிச் சிறுவர் பூங்கா
5. கிராம நலச்சங்கம்

வேறு நிறுவனங்கள்

6. மையமின் வேதியல் ஆய்வுக்கூடம்
7. அறிவியல் வேளாண்மை மையம்

பிற பொதுச் செயல்களுக்கு,

8. மாவட்ட நிருவாகத்தோடு இணைந்து செயல்படுதல்.

22. திருமடத்திற்கு வருகைபுரிந்த மடாதிபதிகள்/ சான்றோர்கள்/ அரசியல் தலைவர்கள்/ கல்வியாளர்கள்/ பிறர்.

1. யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் (தமிழ் சொற்பொழிவு).
2. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் (தமிழ்ச்சொற்பொழிவு).
3. தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதய்யர் - சிலப்பதிகார ஏடு தேடல்.
4. ஆச்சார்யா வினோபாபாவே - 1956 - பூமிதான யாத்திரை.
5. பேரறிஞர் அண்ணா 1956, 1962 திராவிட இயக்கப் பொதுக்கூட்டம்.
6. மூதறிஞர் இராசாசி 1957.
7. தந்தை பெரியார் பலமுறை அடிகளாரின் சமுதாயப்பணி ஈடுபாட்டால் வந்துள்ளார்கள். திரு.பக்தவச்சலம், திரு நம்பூதிபாட், புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், திரு.ப.கக்கன், முனைவர் மு.வரதராசனார், திரு.அ.ச.ஞானசம்பந்தன், கல்வித்தந்தை நெ.து. சுந்தரவடிவேலு, திரு.வி.க. போன்றோர்கள் ஆவர்.

23. திருமடத்தில் நிகழ்ந்த சொற்பொழிவுகள்/ கருத்தரங்குகள்/ பணிமனைகள் போன்றவைகளின் விவரம்.

1. திருக்கோயில் கருத்தரங்குகள்
2. மனிதவள மேம்பாட்டுக் கருத்தரங்குகள்
3. சுதேசி விஞ்ஞான இயக்கக் கருத்தரங்குகள்

4. பாரி விழாவின் போது சங்ககாலத்தை நினைவூட்டும் நிகழ்வுகள், கருத்தரங்கம், உரைநலம் காணும் அரங்கம், கவியரங்கம், பட்டிமன்றம் ஆகியன சிறப்புற நிகழும்.
5. வைகாசி விசாக விழாவின் போதும் கருத்தரங்கம், உரையரங்கம், கவியரங்கம், பட்டிமன்றம், பாராட்டுகளும் நடைபெறும்.

24. திருமடத்திலுள்ள இலக்கிய/ பிற அமைப்புகள் விவரம்?
1. திருக்குறள் பேரவை
2. சனிக்கிழமைதோறும் சிந்தனை நந்தவனம் நடைபெறும். (இதில் விவாதங்கள், சிந்தனைத்துளிகள், ஆய்வுக் கட்டுரைகள் வாசித்தல் போன்றவை நடைபெறும்)
3. மாதந்தோறும் மூன்றாவது சனிக்கிழமை இலக்கியம் பற்றிய ஆய்வு, அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் போல நடைபெறும்.
4. இலக்கியக் கூட்டங்கள் நடைபெறும்.

25. திருமடத்தின் மூலம் நிகழ்ந்த/ நிகழும் விழாக்கள்?
1. சித்திரைத் திருவிழா
2. ஆதீனகர்த்தர் குருபூசைவிழா
3. மெய்கண்டார் விழா
4. பாரி விழா (இலக்கிய விழா)
5. வைகாசி விசாக விழா

26. திருமடத்திற்குரிய வருவாய் மூலங்கள்?

திருமடத்தின் சார்பாக உள்ள கட்டிடங்களின் வாடகை, மனைகள் வாடகை, நஞ்சை, புஞ்சைக் குத்தகை, தோப்புக்கள் குத்தகை போன்றவைகள் மூலம் வருமானம் வரும்.

27. திருமடத்திற்குரிய செலவினங்கள்?
1. ஐந்து கோயில்களின் நிருவாகச் செலவுகள்
2. திருமடத்தில் நடைபெறும் அன்றாடச் செலவுகள்
3. விழாச் செலவுகள்
4. கல்வி நிறுவனங்களால் ஏற்படும் செலவுகள்

28. திருமடத்தில் நிகழும், நிகழ்ந்த தானங்கள்/ தருமங்கள்.

1. அறக்கட்டளை மூலம் ஏழை மாணவர்களுக்கான கல்விச் செலவு
2. யாத்திரீகர்களுக்கும், மடத்திற்கு வருபவர்களுக்கும் உணவு அளித்தல்
3. கிராம வளர்ச்சிப் பணிகள்
4. எல்லா மதத்தினர்க்கும் ஒவ்வொரு ஆண்டும் பொங்கல் பரிசு வழங்குதல்.

29. திருமடத்தின் சொத்து விபரங்கள்.

| அசையும் சொத்து | அசையாச் சொத்து |
|---|---|
| | 1. கும்பகோணம் - நிலங்கள், கட்டடங்கள் |
| | 2. மதுரை - கட்டடங்கள் |
| | 3. திருநெல்வேலி - கட்டடம், நிலம் |
| | 4. சென்னை - (மயிலாப்பூர் கிளை) கட்டடம் |
| | 5. பிரமதேசம் - நிலம் |
| | 6. சீர்காழி - நிலம், கட்டடம் |

30. திருமடம் நிருவாக முறை

1. இலக்கியப் பணிக்கென தனி நிருவாகம்
2. கிராம வளர்ச்சிக்கான நிருவாகம்
3. பொதுப்பணிகளுக்குத் தனி நிருவாகம்
4. ஐந்து கோயில்கள் நிருவாகம்
5. கிளை அலுவலகங்களை நிருவகிக்கத் தனிச் செயலர்கள்.

31. திருமடத்தின் பணியாளர்கள் விவரம்.

மேலாளர், ஆய்வாளர், கண்காணிப்பாளர், தணிக்கையாளர், காசாளர், எழுத்தர்கள், உதவியாளர்கள், தட்டச்சர்கள், ஏவலர்கள், உடனுறை எழுத்தர், பயணத்துறை எழுத்தர், நேர்முக உதவியாளர், இலக்கியம், சமயம், கல்வித்துறைகள் தொடர்பான பணியாளர்கள்.

32. திருமடத்திற்கும் குன்றக்குடிக்கும்/ பிற தொடர்புள்ள ஊர்களுக்கும் உள்ள தொடர்பு விவரங்கள்?

1. சமயப் பிரச்சார தொடர்புகள்
2. தெய்வீகப் பேரவைத் தொடர்புகள்
3. திருக்கோயில் பணிகளுக்கான தொடர்புகள்

4. திட்டக்குழு சார்பான பணிகளுக்காகப் பிற நிருவாகத்துடனான தொடர்புகள்

5. திருவருள் பேரவை மூலம் சமய, சமுதாய நல்லிணக்கத்துக்கான தொடர்புகள்.

33. அடிகளாரின் பிற கருத்துக்கள்/ ஆலோசனை.

1. திருவருள் பேரவை மூலம் சமய நல்லிணக்கம் ஏற்படுத்துதல்

34. திருமடத்தின் எதிர்காலத் திட்டங்கள் ஏதேனும் உண்டா?

1. திருவருள் பேரவை மூலம் மதநல்லிணக்கம் ஏற்படுத்துதல்

2. திருக்குறள் பேரவை மூலம் உலகம் முழுவதும் போற்றும் திருக்குறள் கருத்துக்களை மக்களிடத்து நிலைநிறுத்துதல்.